# திருக் குருகூர் திருவேங்கட நாதன் பிள்ளைத் தமிழ்




பதிப்பாசிரியர்
ச. சிவகாமி

# திருக்குருகூர்
# திருவேங்கடநாதன்
# பிள்ளைத்தமிழ்


பதிப்பாசிரியர்
ச. சிவகாமி
ஆய்வாளர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்






உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
International Institute of Tamil Studies
அடையாறு, சென்னை - 600 020.

## BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Title of the book | — | Tirukkurukūr Tiruvēṅkaṭa nātaṉ Piḷḷaittamiḻ |
| Editor | — | S. SIVAKAMI<br>Research Scholar,<br>I. I. T. S. Madras-20. |
| Publisher | — | International Institute of Tamil Studies, Madras-20. |
| Publication Number | — | 19 |
| Language | — | Tamil |
| Edition | — | First |
| Date of Publication | — | September, 1980 |
| Paper used | — | 18 Kg. Hindustan Ptg. |
| Size of the book | — | 21 × 14 cms. |
| Printing types used | — | 10, 12, 18 points |
| Number of Pages | — | XXVI + 136 |
| Price | — | **Rs. 7. 50.** |
| Printers | — | Novel Art Printers,<br>Madras-600014: Phone-82731 |
| Binding | — | Card Board |
| Artist | — | Amudhone |
| Subject | — | A Tamil literary variety Piḷḷaittamiḻ-with its Commantary and explanation. |



இந்நூல் மதுரையில் 1981 சனவரி மாதம் நடைபெற விருக்கும் ஐந்தாவது உலகத்தமிழ் மாநாட்டை யொட்டி வெளியிடப்படுகிறது.

---

தமிழக அரசு அச்சில் வராத தமிழ்ச் சுவடிகள் அனைத்தையும் வெளியிட வேண்டுமென முடிவு செய்துள்ளது. அம் முடிவின் செயற்பாட்டு நிலையில் இரண்டாவது நூலாக இந்நூல் நிறுவனத்திலிருந்து வெளிவருகிறது.



# முன்னுரை

**டாக்டர் ச. வே. சுப்பிரமணியன்,**
இயக்குநர், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்.

தமிழக அரசு ஐந்தாவது உலகத் தமிழ் மகா நாட்டின் தொடர்பாக, அச்சில் வராத ஓலைச் சுவடிகளில் உள்ள தமிழ் நூல்கள் அனைத்தையும் வெளியிடல் வேண்டும் என்ற குறிக்கோளுடன் செயல்பட்டு வருகிறது. அந்நோக்கில் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனமும் தன் சிறிய பங்கைச் செய்ய முனைந்துள்ளது. இவ்வரிசையில் முதல் நூலாக, 'சின்னமகிபன் குளுவ நாடகம்' என்ற நூல், தமிழக அரசு சிறப்புடன் நடத்திய டாக்டர் உ. வே. சாமிநாதையரின் 125 ஆவது பிறந்தநாள் விழாவில் 19. 2. 80 அன்று வெளியிடப்பட்டது.

அதனை அடுத்து ஏற்கனவே டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூல் நிலையக் கௌரவப் பாதுகாவலர் அனுமதியளித்ததின்படி இரண்டாவது நூலாக இந்நூல் வெளியிடப் படுகின்றது. இதனைத் தொடர்ந்து இன்னும் சில நூல்கள் வெளிவர இருக்கின்றன. சுவடிகளைத் தந்து உதவிய டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூலகத்தாருக்கு எங்கள் நன்றி.

திருக்குருகூர் திருவேங்கட நாதன் பிள்ளைத்தமிழ் என்ற இந்நூலை எழுதியவர் யார் என்பது தெரியவில்லை. இருப்பினும் சிறந்த புலவர் ஒருவரால் உயர்ந்த பண்புடைய திருவேங்கட நாதன் என்பவர் பற்றி அமைந்துள்ள இப்பிள்ளைத்தமிழை வெளியிடுவதில் பெரிதும் மகிழ்கிறோம்.

பொதுவாகப் பிள்ளைத்தமிழ் நூல்கள் பருவத்திற்குப் பத்தாக, பத்துப் பருவங்களுக்கு நூறு பாடல்களைக் கொண்டிலங்கும். ஆயின் இந்நூல்

பருவத்திற்கு ஏழாக எழுபது பாடல்களையே பெற்றுள்ளது. வருண அடிப்படையில் பிரபந்த மரபியல், வைசியருக்கு எழுபது என்று கூறுவதை நூலாசிரியர் பின்பற்றியுள்ளார் எனலாம்.

வரலாற்றுச் செய்தியுடன் பல புதிய உவமைகளையும், சில புதிய இலக்கிய உத்திகளையும் கையாண்டு இலக்கிய இன்பம் நல்கும் இந்நூலால் தமிழுலகம் பயனடையும் என்று நம்புகின்றேன்.

இந்நூலை ஆழ்ந்து கற்று, தெளிவான பொழிப்புரையும், குறிப்புரையும் சிறந்த முறையில் எழுதித் தந்த ஆய்வாளர் செல்வி ச. சிவகாமியைப் போற்றிப் பாராட்டுகிறேன். இது போன்ற பல சிறந்த நூல்களை அவர் வெளியிட்டுத் தனக்கும் தமிழுக்கும், பெருமையையும் புகழையும் தேடித் தருவார் என நம்புகின்றேன்.

இந்நிறுவனத்தின் செயற்பாடுகள் அனைத்திற்கும் சிறந்த முறையில் ஊக்கம் அளித்து வரும் நிறுவனத் தலைவர், கல்வி அமைச்சர், மாண்புமிகு செ. அரங்கநாயகம் அவர்கட்கு எங்கள் நன்றி என்றும் உரித்து.

இந்நூலை மிகக்குறுகிய காலத்தில் சிறந்த முறையில் அச்சிட்டுத் தந்த நாவல் ஆர்ட் பிரிண்டர்ஸ் உரிமையாளர், கவிஞர் நாரா. நாச்சியப்பன் அவர்கட்கு எங்களுடைய அன்பு கலந்த நன்றியைத் தெரிவிக்கின்றோம்.

**ச. வே. சுப்பிரமணியன்**

அடையாறு,
சென்னை-20
25-9-80

# நன்றியுரை

அச்சில் வராது இருளில் முடங்கிக் கிடக்கும் நூல்களை வெளி உலகிற்கு அறிமுகப்படுத்தி உயிர்ப்பிக்க, தமிழக அரசு மேற்கொண்டுள்ள முயற்சியின் ஒரு படி நிலையாக, 'திருக்குருகூர் திருவேங்கடநாதன் பிள்ளைத் தமிழ்' எனும் இந்நூலைப் பதிப்பிக்கும் பொறுப்பை உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தார் எனக்கு அளித்தனர். இப்பெருமையை நல்கியமைக்காக நிறுவனத்தாருக்கும், இயக்குநருக்கும் நன்றிக்கடப்பாடுடையேன்.

நூலின் உருவாக்கத்திற்குத் தேவையான அறிவுரைகளை வழங்கி, உதவிகளை நல்கிய எனது பெருமதிப்பிற்குரிய பேராசிரியப் பெருந்தகை டாக்டர் ச. வே. சுப்பிரமணியன் அவர்கட்கு என் இதயங்கனிந்த நன்றியைக் காணிக்கையாக்குகின்றேன். ஓலைச் சுவடியிலிருந்து நூலைப் படியெடுத்துதவி, ஐயம் நீக்கி, வேண்டிய விளக்கங்களைத் தந்த, டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூலகக் கௌரவப் பாதுகாவலர், பாலகவி திரு. மு. கோ. இராமன் அவர்கட்கும் என் நன்றி என்றென்றும் உரித்து.

நூலுக்கு உரையெழுதுங்கால் தோன்றிய இடர்ப்பாடுகளை நீக்கிச் செவ்வைப் படுத்தித்தந்த பேராசிரியர் ஆ. சிவலிங்கனார் அவர்களின் இனிய உதவியும் நன்றியுடன் என்றும் நினைவில் நிறுத்தற்பாலது. மற்றும் பல நிலைகளிலும் இந்நூற் பதிப்பிற்குத் துணைநின்ற தோழியர் அனைவருக்கும் என் அன்பு நன்றி.

ச. சிவகாமி

சென்னை.
25-9-80

# உள்ளே

# Introduction

## 1

### Piḷḷaittamiḻ

Piḷḷaittamiḻ is a literary genre explained by Pāṭṭiyal works (Treatise on Poetic Composition). It is a very interesting kind, which praises the hero or heroine, human or divine, in the stages of childhood. The best qualities and excellence of the hero or heroine are celebrated here. The country and the town to which the hero belongs, and the river that runs by are also excelled, as in other literatures.

The appearance of this literary variety came in 12th century A.D., through Poet Oṭṭakkūttar's Kulōttuṅkaṉ Piḷḷaittamiḻ. A flourishing growth, through the centuries, gives us about 250 works in this genre, of which nearly 140 have come out in print. The others are in the form of manuscripts, which have yet to see light. This book, Tirukkurukūr Tiruveṅkaṭanātaṉ Piḷḷaittamiḻ, is for the first time printed from the manuscripts.

A few works of this kind are very famous and widely studied. Kumarakuruparar's Mīnāṭciammai Piḷḷaittamiḻ; Civañana Muṉivar's Kulattūr Amutāmpikai Piḷḷaittamiḻ; Mārkkacakāya Cuvāmi's Tiruviriñcai Murukaṉ Piḷḷaittamiḻ; Mīnāṭci Cuntaram Piḷḷai's Cēkkiḻar Piḷḷaittamiḻ etc are worth mentioning. It is also interesting to note that Mīnāṭci Cuntaram Piḷḷai has more than thirteen Piḷḷaittamiḻ to his credit.

Myths and supernatural events are connected with a few of the works in this genre. When Mīnāṭci ammai Piḷḷaittamiḻ was

presented by the poet in the assembly of the learned, Goddess Mīnāṭci herself came as a child to hear it and gave the poet a string of pearls. The king Tirumalai nāyakkar, who listened to this beautiful composition turned to Saivam from Vainavam To get relief from severe stomach pain Pakajikkūtar wrote the 'Tiruccentūr Murukaṉ Piḷḷaittamiḻ' and got divine healing, and was appreciated by God Murukaṉ Himself.

The name of the hero or heroine and the name of the place to which they belonged, supplied the title of the works.

Though Gods feature most as the heroes of Piḷḷaittamiḻ Lord Civaṉ is never pictured as the baby-hero, as he is "birthless" and has no incarnations (avataram).

Other than Gods, historical figures, the patrons of poets, the devotees of the Lord, great poets, priests and such others feature as the heroes. It is interesting to note that more Piḷḷaittamiḻ works have come on heroes than heroines.

**Origin of Piḷḷaittamiḻ**

Though Piḷḷaittamiḻ attained its full-fledged form only in the 12thC, we see its seed in Tolkāppiyam itself. In Pāṭāṇtiṇai of Purattiṇaiyiyal, Tolkāppiyam talks of the love on God, and also that on child (81,82)

"The love aspect is not forbidden from
God as it is with others-say the poets."
"It belongs to child also" (S. Ilakkuvanar)

Commentator Nacciṉārkkiṉiyar, considers the human child also. He says that even after childhood, the poets may sing on a hero assuming him as a child. In the Caṅkam and Post Caṅkam Period, we do not come across such a treatment, though we have a few verses on children (Puṟanāṉūru. 188; Tirukkuraḷ. 61-70).

We see the germination of this genre in the poems of Āḻvār, who were devotees of Lord Vishnu. Periyāḻvār gives an immaginative treatment of the childhood of Kaṇṇaperumāṉ, an incar-

nation of Lord Vishnu. He sang lullabies for the divine babe, called the moon to befriend the child, entreated the child's mischivous acts, appreciated its trial to walk, praised the babe's beauty, and thus pictured his childhood acts. He treated this subject in about twenty poems of ten stanzas each (Patikam), and thus shewed the method, and paved the way for the genre.

The stories of Lord Krishna in the Brindawan would have helped the devout poets to sing in these terms. In the poems of Āṇṭāḷ, we see the request of a girl to the naughty child not to *destroy their sand toy-houses*. Similarly, Kulacēkara āḻvār and Tirumaṅkai āḻvār have also a few pieces on the childhood acts of Lord Krishna. With all these providing a strong foundation, Oṭṭakkūttar successfully formed the separate genre.

### The Characteristic features of Piḷḷaittamiḻ

Most of the Pāṭṭiyal works, gave the first place in their list of literary varieties, to Piḷḷaittamiḻ. It is one of the few genres explained by all Pāṭṭiyal works. This variety is defined on the bases of content, expression and form.

The content is formed of ten sections, of which the first seven are common for both male and female children. They are, Kāppu, Ceṅkīrai, Tāl, Cappāṇi, Muttam, Vāraṉai and Ampuli. Other than these seven stages, Ciṟṟil, Ciṟutēr and Ciṟupaṟai are considered for the boy-baby. Of these last three, Ciṟṟil may occur in the child-hood description of a girl also. The Piḷḷaittamiḻ on a heroine is capable of many other sections, like Kalaṅku, Ammāṉai, Ūcal, Ciṟucōru, Kuḷamakaṉ, Nīrāṭal and Kāmaṉ Nōṉpu, of which three are chosen.

### Kāppu

The first stage of the poem, is an invocation to Gods like Vishnu, to safeguard the child-hero or heroine. The tying of a sacred string (Kappu) on the seventh day of the child's birth has intiated this section. Being the God of Protection and the possessor of Tirumakal and all wealth, Tirumal is invoked first. Next in the list come Civaṉ, Pirammaṉ, Vināyakaṉ, Murukaṉ

Vaṭukaṉ, Intiraṉ, Cāttaṉ, Kupēraṉ, Nīli (Parvathy), Tirumakaḷ (Lakshmi), Kalaimakaḷ (Saraswathy) the seven virgins (Sapta Kanniyar),thethirty threecrore devas,the sun and themoon.There is a rule that when describiug the Gods, their ferocious acts of destruction and killing should be avoided, and only auspicious words be used. This may be due to a general belief that inauspicious word or matter should not occur in a blessing or prayer.

### Ceṅkīrai

Two meanings are conveyed here. One is the sweet prattle of the child. The other deals with the crawling posture, on all fours, with head raised and the body swaying a little unballanced.

### Tāl

The lullaby of the mother, which makes the child asleep gives the content.

### Cappāṇi

This deals with the child's action of clapping hands. In colloquial usage, it also denotes the child's movement along the floor without the use of legs, and with the help of hands.

### Muttam

Requesting the child to give kisses, praising its sweetness and greatness provides this section.

### Vārāṉai

Also known as 'Varukai' here, the child is requested to take its first few steps (without any support).

### Ampuli

Here the moon is asked to come and play with the child. This is done in four ways, viz., Cāmam, Pētam, Tāṉam and Taṇṭam. In the first, the identical aspects between the moon and the child are exalted, while in the second the contrast between them and the child's superiority are portrayed; Tāṉam describes the presents that will be given if the moon complys

with the request, while the last threatens the Moon regarding the punishments he may get if he does not come. This childhood stage of Ampuli is a very interesting position in this genre, and is a test for the poet's talent. So the old proverbs puts this as the "Tiger" of this genre, meaning that it is most difficult to compose.

### Ciṟṟil

When this comes on a heroine, it deals with the building of small saned houses, while in a hero's case it portrays the naughty boy destroying girl's sand houses, inspite of their request and pleading not to do so.

### Ciṟupaṟai

Requesting the child to sound the timbal for enjoyment comes in this stage.

### Cirutēr

Telling the child, of the desire to see the toy-chariot drawn by him. The description of the chariot, as made of gold and the nine gems, is very imaginative.

### Kalaṅku

This denotes a common play among girls, where small balls are thrown up and caught before touching the ground. A request to the heroine to play this game, and the description of the small balls as made of Gold, coral, etc., find place here.

### Ammāṉai

Another play like the above, Ammāṉai is accompanied by singing. Such songs are available in Cilappatikāram, Tiruvācakam, etc., and has developed into a separate genre later.

### Ūcal

Request to play on the swing is pictured here. The description of the swing as decorated with flowers and made up of Gold gives the name Poṉṉūcal also.

**Ciṟucōru**

An immitated preparation of food and serving it is found here. This comes mostly connected with the building of sand toy houses (Ciṟṟil). The heroine's play things and her imitative game are highly praised here.

**Nirāṭal**

Bathing in water-falls, rivers and sea which is quite common and explicity described in Caṅkam works, and dealt with much experience in epics, provides the content here. The heroine is asked to take an enjoyable bath in the freshet.

**Kāmaṉ nōṉpu**

This is a penance done by young girls, worshipping the god of love, maṉmataṉ, in order to get a good husband.

**Kuḷamakaṉ**

This child-hood act is not presented by any Piḷḷaittamiḻ litṟature. Of the pāṭṭiyal works only Intrakāḷiyam and paṉṉiru pāṭṭiyal refer to this, and even there with no explanation. In some other pāṭṭiyal treatises (Venpāpāṭṭiyal, Ilakkana viḷakkap pāṭṭiyal, Muttuvīriyam, Pirapantatīpikai. Pirapanta tīpam), a literary genre of the same name is explained. The procession of a child hero, felicitating the child on the lap of a woman, the girls enlogising the youth whom they saw, are the three possible definitions. It is not easy to fix any of the above three in the Piḷḷaittamiḻ stage 'kuḷamakaṉ'. But, as we come across the girls playing with puppets in the caṅkam poems (Ainkuṟu nūṟu 383), we may consider the mother child imitation game as the one denoted here.

Regarding the expressional side, Paṉṉiru Pāṭṭiyal lists certain similies suitable for the child hero and heroine. The rising sun, waxing moon, young ones of tiger, elephant, lion and bull are proper similies for heroes. The young ones of deer, peacock and parrot, sweet honey, the tender leaf bud of creeper and the little sprout of sugar cane are fit similies for heroines. Though these are in common practice in other literatures, the listing might be thorough fitting here.

Restriction regarding the age of the child hero and heroine also finds a place in Pāṭṭiyal treatises. In Intirakāḷiyam, the upper age limit of the hero is given as sixteen years, and of heroine as attaining puberty. Paṉṉirupāṭṭiyal denotes the third to the twenty-first month as the most perfect, preferable period for both children. Rarely, it may exceed, and the third, fifth, seventh and twelfth year will be considered. Navanītap Pāṭṭiyal gives one more condition that, though young, a crowned prince should not be the hero.

Form of Piḷḷaittamiḷ is also discussed by the grammarians. Intirakāḷiyam mentions kocakak kalippā and Kaliveṇpāṭṭu as the metre of this genre. Akaval viruttam, Kaṭṭalai oli and Kaliviruttam are given by Paṉṉirupāṭṭiyal. Akaval viruttam alone is pointed out by Veṅpāppāṭṭiyal, Ilakkaṇa viḷakkam, Muttuvīriyam and Cuvāminātam. It is this metre that we find in most Piḷḷaittamiḷ literatures. Toṉṉūl viḷakkam expects each section of child-hood to be sung in different types of Viruttam.

Except Pirapanta marapiyal, all pāṭṭiyal treatises agree on the fact that the total number of poems in the genre must be one hundred, with ten verses to each stage of child-hood. Pirapanta marapiyal, gives a variation in the number, according to the nature and status of the hero. It classifies the heroes as God, Brahmin, king, Trader and the servile and attributes 100, 90, 80, 70 and 60 poems to them respectively.

**Some notable hints regarding Piḷḷaittamiḷ**

Strict conventions curb the creativity of authors. If the poets completely followed the rules laid by the grammarians, we could get only stereo-typed works. Then, the different works under one genre will arouse no interest in a reader. The creative capacity and individuality of each poet provide novelty and variety in the different works of the same literary type. Along with the factors and elements which are constant that bring them under one head, there are also variables which give them individuality. The literary delight derived from these different creations, because of the notable changes in content, expression and form, also help us to understand the development of the genre. A few such notable facts from Piḷḷaittamiḷ can be cited here.

Sri Āṇṭāḷ Piḷḷaittamiḷ has twelve sections instead of ten. The 'Kāmaṉ nōṉpu' stage is found only in this book. It also includes a section, viz., 'Paḷiccinar paraval' not mentioned by Pāṭṭiyal treatises. In this section, the anonymous author prays to Gods and great respective persons for the glorious completion of his work. The Vaishnava saints are praised in the eleven verses of this part. Nammāḷvār Piḷḷaittamiḷ also has a similar section. Even though the poets could have done this in the invocation to God (Kāppuc Ceyyuḷ) they have allotted a separate place. Other than *Sri Āṇṭāḷ Piḷḷaittamiḷ*, *Tillai* Civakāmi Yammai Piḷḷaittamiḷ also has twelve sections. In this, ball game (Pantāṭal) is a new portion included. These two works, sung on female deities, provide the possibility to increase the sections.

Generally, an invocation to God preceded any composition. This is a traditional concept regarding Tamil literature also. Lord Vināyakaṉ is the one commonly considered, to accomplish the work satisfactorily. But in Rākavar Piḷḷaittamiḷ, Anumaṉ is invoked instead of him. According to the nature of the hero the invocation differs. In Pāvēntar Piḷḷaittamiḷ, Aṇṇāturai, the political leader is invoked, while in Koṅkukkumari Piḷḷait-tamiḷ "Tamiḷttāy" (mother Tamil) receives this honour. Most of the Piḷḷaittamiḷ do not have this part, as the first 'Kāppu' section also has invocation as the content.

The first Kāppu section is also utilised by the poets to praise the persons of their desire. In Tiruvāṉaikkā Akilāṇṭa nāyaki Piḷḷaittamiḷ, Mīṉāṭci cuntaram piḷḷai adds the Saiva canon. Māciḷāmaṇi tēcikar, in his Tiruñāṉacampantar Piḷḷait-tamiḷ, includes the sacred ash, the natural spring of cīrkali and the works of campantar also. The sacred spear, the sacred peacock-vehicle of the lord, and devotional songs on Him, like the Tirumuru Kāṟṟuppaṭai of Nakkīrar and Tiruppukaḻ of Aruṇa Kiri nātar, form the invocation deities in Tiru viriñcai murukaṉ Piḷḷaittamiḷ. The relationship and association of these with the hero, bring them to the position of being invoked.

The poets also ignore the tradition that Tirumāl must be the first God invoked.

In Vaikuntanātaṉ Piḷḷaittamiḷ, the first kāppu section is entitled as 'teyvavaṇakkam'.

Ceṅkaippotuvaṉ apostrephises Tamiḷttāy, Buddha, Aruka, Jesus, Mohammad and other religious deities in his Koṅkuk-kumari Piḷḷaittamiḷ and thus shows a neutrality in religion. Aru. Cōmacuntaram reveals his neutral mentality towards languages by addressing English as foster-mother (Āṅkila Cevilittāy). Mu. Ko. Rāman's view that, in the case of God being the hero, He himself accepts the position of protector in works like Sri Kuruvāyūrappaṉ Piḷḷaittamiḷ, is worth mentioning. Here we may once more stress the fact that the individuality of the poet and the nature of the hero bring in these differences in the invocation deities.

The Cappāṇi stage in Koṅkuk-Kumariammaṉ Piḷḷaittamiḷ has a slight deviation from tradition. In this the poet requests the Goddess to clap her hands in every division of a day, like dawn, morn, noon, evening, dusk and night.

Aḷakiya Cokkanātapulavar, similarly brings in a novel approach in the 'varukai' stage of his poem, Tirunelvēli Kāntimatiyammai Piḷḷaittamiḷ. Instead of just asking the child to step forward, the poet in a mother's tone tells the child, that if it does not respond to the mother's call and come near, she will abstain from talking to it, will not adorn by putting collyrium to the eyes, tilak on the forehead, jewels on the body, etc., and thus punish it.

Tillai Civakāmiyammai Piḷḷaittamiḷ, in its 'ammāṉai' stage, adds the indistinctive talk play, doll game (Pavaiyāṭal) and Kalaṅku also. Similarly in Putuvai Tiripuracunatari Piḷḷaittamiḷ pantāṭal and ammāṉai occur along with the ciṟṟil section. T.S. Gopalan made a notable change in the ciṟṟil part of Tiruvallikkeni Perumān Piḷḷaimai iṉpam, where the mother requests the child here, not to spoil the toy houses of the girls and promises him all he needs, if he obeys.

The same poet brings in a novel approach in the eleven stanzas of ciṟutēr' stage also. The girls, Brahmins, warriors, peacock, cuckoo, Indiran and other deities are invited to see the beautiful act of the child pulling the toychariot.

It is the general nature of many Tamil works, like epics, to end with a poem of benediction. Some Piḷḷaittamiḻ poets have followed this tradition in Murukappa Tēvar Piḷḷaittamiḻ, Makaraneṭuṅkuḻaikkātar Piḷḷaittamiḻ, etc. In Vaḷḷaṟperuman Piḷḷaittamiḻ, Mā. Ka. Kāmāṭcinātaṉ has placed this poem of benediction as the last verse in the last section, ciṟutēr.

The usefulness of a piece of writing is generally thought of in the last stanza of Tamil devotional poems. Pakaḻikkūttar in his Tiruccentūr Piḷḷaittamiḻ, lists the benefits a reader may get on reading that particular work.

All the available Piḷḷaittamiḻ works do not have the same number of poems. Civañāṉa Muṉivar's Tirukkalaicai Ceṅkaluniṟ Vināyakar Piḷḷaittamiḻ has five poems each in the first nine sections and six in the last, instead of the normal ten. Murukappa Tēvār Piḷḷait tamiḻ has three poems to each stage, while the first section has four. Just one verse to each stage is becoming popular now-a-days and Mu. Ko. Rāmaṉ's Tirunāvuk-karacar Piḷḷaittamiḻ is a proper example. There is also a rare exceeding in the total number of poems in works like Tillai Civakāmiyammai Piḷḷaittamiḻ, which has 120 poems.

A change of metre also is seen in a few works like Tiruvallikkēṇi perumāṉ Piḷḷaimai iṉpam, where each section of eleven stanzas, has a different metre.

A few points can be noted about the general content of these works also. Those on divine beings mainly dealt with this mythical and supernatural deeds. In books like Muttuk-kumāracāmi Piḷḷaittamiḻ of Kumarakuruparar we have explanations on religious philosophy. The poet's needs and a request to fulfil them also occur along with the praise of the Lord.

The Piḷḷaittamiḻ on a historical figure, includes many historical events and acts connected with him, as in Kulōt-

tuṅkaṉ Piḷḷaittamiḷ. These compositions on great poets, use words and phrases of the original author and exalt the beauty and greatness of his writing, as found in Kampaṉ Piḷḷaittamiḷ.

Though this literary genre seems to be on the child hood of the hero or heroine, like an epic, it mostly applauds the great acts of the nature and complete life of them, which had occured in a quite later stage. This is the only literature which has separate categories for the male and the female. It is also one of the very few literary genres that has a flourishing growth form to then now.

Along with the name 'Piḷḷaittamiḷ', this genre is denoted as Piḷḷaippāṭṭu and Piḷḷaik kavi in the Pāṭṭiyal treatises. Names like Piḷḷaittiru nāmam, Piḷḷaimai iṉpam and Piḷḷaikkavitai are available in some compositions of this genre.

II

**Tirukkurukūr Tiruveṅkaṭanātaṉ Piḷḷaittamiḷ**

A manuscript by the above name, found in the 'Maha Mahopadhyaya Dr. U.V. Swaminathaiyar Library'forms the only basis of this present edition. This book comes out for the first time in print, as a further step in the project of the 'International Institute of Tamil Studies; to bring out hitherto unpublished manuscripts to light, and the reach of the public.

**Author**

The name of the author is now unknown. Neither any factors regarding his life history is known. But the internal evidences help us to some informations. In a stray verse, the poet says that he was patronized by the hero of the Piḷḷaittamiḷ. From his enlogy to Tirumal found throughout the book, we can infer him to be a devout vaishnava. He also gives due place to the Vaishnava saint Nammāḷvār in the kāppu section and other places. His respect and affection towards the Tamil language is represented in many places. In one such occasion he calls it the pure ambrosia procured from the ocean of Arts. His interest in Music also gets projected in the work.

The name and fame of most of the relatives of the hero are mentioned, which shows the author's close connection with the hero and his family. His very deep love towards the hero is revealed in each stanza and stage of his Piḷḷaittamiḻ. He expects the hero to be praised by other poets also.

**Period**

The internal evidence help us to fix the period of the poet as 18th century A.D. One of the stray verses, in the end of the manuscript, gives the historical event of Kollam 965, as the establishing of Karuṭāḻvār (Sacred Eagle) in the Ātinātar temple of Kurukūr by the hero. As this year of kollam era corresponds to 1790 A.D. we fix the period of the work definitely as 18th C.A.D.

**Hero**

Tiruveṅkaṭanātaṉ is the hero of this Piḷḷaittamiḻ. He is praised as the chieftain of Kurukūr located in the Southern part of the Pāṇṭiyaṉ Kingdom. He belongs to the Veḷḷāḷā community. Cuppiramaṇiyam was his father. There is no reference to his mother. Miṉāṭcinātaṉ was his grand father. Mīṉāṭcinātaṉ and cāmiṉātaṉ were his brothers, one elder and one younger to him. It is surprising to note that he got the leadership, when he had an elder brother, which is not easily reasonable.

Other than these facts, the life history of the hero is not clear. One book by name, 'Tirukkurukūr Tiruppaṇimālai' lists the names of persons with their grants to the Ātinātar temple. Caṅkara nārāyaṇaṉ and Periya tiruvaṭiaiyan,mentioned in the piḷḷaittamiḻ, as related to the hero, also find a place in this list; but we have no reference to the hero.

The poet refers to the hero as 'minister', in one of the occasional songs. So we may suppose that he might have been oppointed as the chief of kurukur by the king of that time. The poet's comment on the fact that the hero pays one sixth of his income to the king also supports this thought. Due

to the literary tradition, or may be because of the extra vagant love of the poet for the hero, he exaggerates the valour of the king by saying that he has won many battles. The charm, good qualities, great wisdom and never saying no to the needy, are exalted by the poet.

He was a devotee of Tirumāl and had respect on Nammāḷvār and vāṉamāmalai muṉivar, the preceptor of vāṉamāmalai Mutt in Nāṅkuneri.

His relations and friends were mentioned with remarkable characters like bounty, bravery and eminence. These show him, as well as his kith and kin to belong to a high family of esteem.

On this hero, two more genres are available, viz, vaṇṭu viṭutūtu and catakam. The handling of the content and using of phrases show the first of the two to be by the same author and the similarities between these two are given in this edition. There are also a few occasional stanzas.

**The granduer of the place of the hero**

Kurukūr is the first in the list of the nine sacred places (Nava tiruppati), situated on the banks of river Tāmiraparaṇi. This city is located on the highway of Tirunelvēli-Tirucentūr. The vaishnavities celebrate this place as the 'Zone of salvation' This place has a very big temple.

Many legends are in vogue that reason out the place-name. The present name of it, 'Āḷvār tirunakari', given because of the birth of Nammāḷvār there, is not mentioned by the Poet, which helps us to conclude that it was given in a later period. The great commentator of Vaishnava works, Manavāḷa māmunikaḷ also was born in this place.

Tirukkurukaip Perumāl kavirāyar had composed "kurakai Māṉmiyam" Ramanātāṉ kavirayar wrote 'kurukai mālai' and caṭakōpap pulavar produced kurukūrp paḷḷu, which conveyed to eminence of the place.

### Structure of the Piḷḷaittamiḻ

In total there are seventy poems, with seven stanzas to each section. According to the idea of Pirapanta marapiyal, seventy poems come for a trader, hero. The Piḷḷaittamiḻ is entitled with the name of the hero and his native place.

There is no Kāppuc ceyyuḷ in this work, and it directly goes to the first section, while the same author's Tūtu literature starts with Kāppuc ceyyuḷ.

The First stanza starts with worshipping Tirumāl and then Civaṉ, Nammāḻvar, Biramma, Karuṭāḻvār, and Vāṉamāmalai Muṉivar respectively, while the fifth one is about a group of Gods namely Indira, Mākāliyar, Kuberaṉ, Velavaṉ, Vayiravaṉ, Vināyakaṉ, the twelve suns, Karuṭan, Tirumakaḷ, Kalaimakaḷ, Umai and the seven virgins etc.

Though we are unable to findout a suitable reason for the author's change of content in his writing, about the first section we could come to a conclusion that the purpose is not served, because the author request the deities to bless his work instead of the hero. Perhaps he might have thought that the hero represents Tirumal and so it is not necessary for him who is the soul for everything.

He utilised both the meaning of cenkirai (2, 3) in the second part.

In other parts he has followed the established usage. It is noted that, here, in tāl, he makes yacōtai the foster mother of Krishna to sing lullaby (crdle song) to the hero, whom he says that he was Tirumāl. In cappāṇi, he celebrates the ten parts (Tacāṅkam) of the king as potikai-mountain, porunai-river, vaḻutivaḷanāṭu-country, kurukai - city, elephant, horse, the plough flag, drum, the garland of water lily and the orders of Vāṉamāmalai munivar.

He praised the kiss of the hero in two poems by showing how it was better than the others.

He depicts the beauty of the hero as Kēcātipātam in the Vāraṉai stage and also trys to create the Pātātikēca explanation in another poem (5:7). In Ampulipparuvam he shows the differenciation (Pētam) and the punishment (Taṇṭam) which are better than the others. This part dominate the first place in praising the hero than the other sections.

The author points out the different kinds of drums which make sound in the hero's town in Ciṟupaṟai portion. He also talks abundantly the eminence of kurukai, the hero's town in this stage.

The author gives the Petumpai Paruvam (i.e. girl between eight and eleven) in which he quotes the stage of playing Ciṟṟil and the time for the play as afternoon. He also describes the different parts of the toy house made by the girls.

The hero's toy-chariot is also described part by part as it was made of gold and gems in a very imaginative way, in ciṟutēr. He makes the last verse of this as a benediction verse. Starting the work with prayer and ending it with benediction give a connection in between the separate sections of the book. it is an appreciable thought given by the poet.

**The greatness of the hero**

The hero has been denoted as Tirumāl in many places (2.6, 3.3, 9.4). The deeds of Tirumāl have been turned up here to the hero. It reveals the devotion of the poet towards Tirumāl and shows his faith on the words of Tirumaṅkaiāḻvār which means that he finds Tirumāl in the king who has so much wealth. Here, the branch 'Pūvainilai' (comparing the hero with Tirumal is called as such) of Pāṭāṇtiṇai of Tolkappiyam also is similar to this. Because of this he accomplished many legends connected with Tirumāl.

The hero is a great lover of Tamil, that he patronaised many poets (4.7, 8 1). He encouraged them by presenting ornaments, wealth etc. (7.3) He rewarded them according to their talen t.

His benevolence and bravery are exalted here so much as though the kings and chieftains were praised by the poets in Caṅkam literature. He has good hospitality towards the friends, relations and the poor.

His bravery is shown by saying that he won the three Tamil kings Cērā, Cōḷā and Pāṇṭiyā and how he destroyed the cities of the enemies. He also says that foreign country kings and chieftains like of Ceylon, Arabia, etc., are paying their precious goods, elephants, horses and such things, to the hero as tribute. The poet describes the sitiing of Tiruvēṅkaṭa nātaṉ in state, while the kings under him and the learneds were waiting outside for his permission to visit him.

The hero has done many good deeds to the Public, by giving facilities to their ordinary life. His establishment of Karuṭāḷvār in the Kurukūr temple has been praised here also. In one stanza (3·5), the poet dercribes how the hero spent his wealth in a virtuous path.

Makarakkuṇṭalakkuḷai (ear-ring in the shape of fish), Ratṉa mālikai (the garland made of gems), Vacciramaṇi mālai (garland of diamond) Marakataccuṭṭi (ornament on forehead made of emerald) Cikaḷikai (a kind of ornament), Poṟcuṭṭi (the golden fore head ornament) Kaṅkaṇam (wristlet), Vayiṭuriya kuḷai (The ear-ring made by diamond) Cilampu (anklet) Taralavaṭam (The pearl garland), Tōḷvaḷai (ornament for shoulder), Kaṭakam (bracelet), Kaṇaiyāli (ring), Nava ratṉa taṇṭai (the leg ornament made up of the nine gems), Kinkiṇi (a tinkling ornament) and Kaḻal (anklet) are shown as the ornaments of the hero.

Following the foot steps of Tirumaṅkaiāḷvār, the poet also points out that the ladies are ready to Maṭaleral (Riding a horse of palmyra stems by a disappointed lover to win his love - a characteristic feature done by the heroes rarely of Caṅkam Akam poems, which is strictly prohibited for heroines).

There are two excellent places where the poet shows the hero as a very small baby. One as in the ceṅkirai stage (2 3) another one is the play of the little boy (5 7).

Suppose we may not find in other Piḷḷaittamiḷs, as this poet's praising the hero's relations, friends and others who have connections with him.

The hero's place - Kurukainakar, river that flows there-Porunai, elephant and the flag are celebrated in many places also; each one is described in separate stanzas for this purpose

**Some delights in this Piḷḷaittamiḷ**

The poet's talent and uniqueness are revealed also from his way of presentation and expression. The anonymous poet refers to Piḷḷaittamiḷ as Muttamiḷ, Centamiḷ, Kavi, Tamiḷ and Piḷḷaikkavi.

He utilises the simile which is the most important in rhetoric, in a pleasant novel way such as comparing the hero with the seedling of the sacred basil plant. To stress the matter what he was going to tell, he gives more than one simile in many places (4·7). He follows this habit even in using the metaphor (3·2), These also reveal the deep love he has towards the hero. He also composes stanzas with uyarvu naviṟci (a kind of rhetoric which means that giving the matter in over exaggerated manner) and Cilēṭai (Paronomasia). He is very interesting in making paronomosia. He achieved it in three places with the God Vināyaka - Brahma; poetry - the Porunai and the hero-Āticēṭan. The cadence (rhythm) is very essential in this type of genre. The poet makes use of it in a successful way (2·3).

He used so many colloquial words like camukam (Society), kuṟumpu (mischief), and caṭaivu (meloncoly). He also handled many sanskrit words like cātram, cakram, kirupai, piriti, cekam and cantosham.

The poet exhibits his desire on water lily and conch (whose spirals turn to the right) by utilising them often. He appreciates the generosity of the hero in many places by comparing him with kubera, cloud and libderal donars.

He points out his literary experience in his description of ature, where his talent has come out with the combinatio of the old and new thoughts.

# பிள்ளைத்தமிழ்

தனிப்பாடல், காப்பியம், பதிகம், சதகம் எனப் பல நிலைகளில் விரிவடைந்து கொண்டிருந்த தமிழ் இலக்கியச் சோலையில் பூத்த 'குலோத்துங்கன் பிள்ளைத்தமிழ்'எனும் நூலால் பிள்ளைத் தமிழ் என்ற நறுமலரும் புதியதொரு மணத்துடன் மலர்ந்தது. பிள்ளைத்தமிழின் மலர்ச்சி, பன்னிரண்டாம் நூற்றாண்டான போதிலும், அதன் வித்தைத் தொல்காப்பியத்திலேயே பார்க்க முடிகிறது. இதனை,

'குழவி மருங்கினும் கிழவ தாகும்' (பொருள். 82)

எனும் தொல்காப்பிய நூற்பாவில், 'மருங்கு என்றதனால் மக்கட் குழவியாகிய ஒரு மருங்கே கொள்க. குழவிப் பருவம் கழிந்தோர் அது வேண்டியக்காலும் அக்குழவிப் பருவமே கருதிப்பாடும் என்றற்குக் கிழவதாகும் என்றார்' என்று உரையாசிரியர் நச்சினார்க்கினியர் எடுத்துக் காட்டுவார்.

பெரியாழ்வார் தம் திருவாய்மொழியில் கண்ணபெருமானைக் குழந்தையாகப் பாவித்துப் பாடி வழிகாட்ட, ஒட்டக்கூத்தர் சிறப்பாக அதற்கு உருவம் நல்கினார். பெரியாழ்வாரின் திருமொழியில் தாலப்பருவம், அம்புலிப்பருவம், செங்கீரைப் பருவம், சப்பாணிப்பருவம், தளர்நடைப்பருவம், அச்சோப் பருவம், புறம்புல்கல், பூச்சிக் காட்டல், காப்பிடல் முதலிய பகுதிகள், நாச்சியார் திருமொழியில் உள்ள சிறுமியர் மாயனைத் தம் சிற்றில் சிதையேலெனல் (நாமமாயிரம்) முதலிய பகுதிகள், திருமங்கையாழ்வாரின் பெரிய திருமொழியில்உள்ள சப்பாணிப் பருவம், மாயன் வெண்ணெய் உண்ட மாட்சிமை முதலிய பகுதிகள், திருமாலின் பிள்ளைப் பிராயத்தைப் போற்றிப் பக்தர்கள்

அன்பால் விளைத்த அருந்தமிழ்ச் செய்யுட்கள் இவையனைத்தும், பிற்காலத்தில் எழுந்த பிள்ளைத்தமிழின் இலக்கியப் போக்கினைப் பெற்ற பகுதிகளாகும் என்று ந.வீ.செயராமன் அவர்கள் பிள்ளைத்தமிழின் தோற்றம் குறித்து, 'சிற்றிலக்கியச் செல்வங்கள்' (பக்.127) எனும் தம் நூலில் காட்டியுள்ளார்

தன் சிந்தை கவர்ந்தவரைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு அவர் தம் பண்பு நலன்களையும், சிறப்பியல்புகளையும் புகழினையும் தொகுத்துரைத்து, உடன் அவர் நாட்டினையும் நகரினையும் சிறப்பித்துரைப்பது பிள்ளைத்தமிழின் பண்பாகப் படர்ந்துள்ளது. குமரகுருபரரின் மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ், சிவப்பிரகாசரின் சிவஞானபாலைய தேசிகர் பிள்ளைத் தமிழ், பகழிக்கூத்தரின் திருச்செந்தூர் முருகன் பிள்ளைத்தமிழ், முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழ், கம்பன் பிள்ளைத்தமிழ் போன்றன குறிப்பிடத்தக்க சிறப்புடையன. இதுவரை சுமார் 140 பிள்ளைத்தமிழ் நூல்கள் வெளிவந்துள்ளன.

பாட்டுடைத் தலைவன் பெயரால் பெயர் பெறல் பிள்ளைத் தமிழ் நூல்களின் மரபாகும். தலைவனின் ஊர்ப்பெயருடன் இணைந்தும் பெயர் பெறுவதுண்டு. பெரும்பான்மையான நூல்கள் இறைவனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டுள்ளன. இறையடியார், புலவர், புரவலர் மீது பாடுதல் சிறுபான்மையாக உளது. பெண்பாற் பிள்ளைத்தமிழினும் ஆண்பாற் பிள்ளைத்தமிழே மிகுதியாகும்.

பன்னிரு பாட்டியல் முதல் அனைத்துப் பாட்டியல் நூல்களும் பிள்ளைத்தமிழுக்கு இலக்கணம் உரைக்கின்றன. ஆண்பாற் பிள்ளைத்தமிழுக்குக் காப்பு, தால், செங்கீரை, சப்பாணி, முத்தம், வாரானை, அம்புலி, சிறுபறை, சிற்றில், சிறுதேர் என்ற பத்துப் பருவங்களும் அமையும். பெண்பாற் பிள்ளைத்தமிழுக்கு இறுதியிலுள்ள மூன்றினுக்குப் பதிலாகக் கழங்கு, அம்மானை, ஊசல் என்ற மூன்றும் இடம்பெறும். சிற்றிலிழைத்தல், சிறுசோறு ஆக்கல்,குழமகன்,நீராடல்,காமன்நோன்பு முதலிய பருவங்களும் அமைதல் உண்டு.

கால வரையறையில் பாட்டியல்களுக்கிடையே வேறுபாடுண்டு. இந்திரகாளியம் ஆண்களுக்குப் பதினாறாம் ஆண்டினையும்,பெண்களுக்குப் பூப்பு நிகழ்வினையும் கால எல்லையாகச் சுட்டும். மூன்றாம் மாதம் முதல் 21 மாதமளவும் பாடப்படும்

என்பது பன்னிருபாட்டியல் கருத்து. ஆண்பாற்கு 3, 5, 7 ஆண்டு வரையும் அருகி 12 ஆண்டு வரையும் உண்டு. 'இளையனே ஆயினும் வேந்தன் பெறான் மறுவின் முடிசூடில்' என நவநீதப் பாட்டியல் நவிலும்.

திருமால், அரன், திசைமுகன், கரிமுகன், பொருவேல் முருகன், பரிதி, வடுகன், எழுவகை மங்கையர், இந்திரர், சாத்தன், நிதியவன், நீலி, முப்பத்து மூவர், திருமகள், நாமகள், திங்கள் என்போர் காப்புப் பருவத்துள் வரும் கடவுளராவர். காப்பின் முதற் கடவுளாகத் திருமாலை அமைத்தல் வேண்டும். இப் பெருமைக்கு அவன் காத்தற் கடவுளாதலானும், பூவின் கிழத்தியைப் புணர்தலானும், முடியும் கடகமும் மொய் பூந்தாரும் குழையும் நூலும் குருமணிப்பூணும் அணியும் செம்மலாதலானும்உரியவன் ஆகிறான். ஆயின் பிள்ளைத்தமிழ் நூல்களில் தனக்கு விருப்புடையோரை முதலில் கொள்வதும், பெருமைக்குரிய பெரியோரைக் காக்கும்படி வேண்டுதலும் மிகுதியாகக் காணப்படுகின்றன. விரிசடைக் கடவுளையும், சப்த கன்னியரையும், காக்குமாறு வேண்டும் பொழுது, அவர்கள் செய்யும் கொலைத் தொழிலை அகற்றி, மங்கலமாய் மொழிதல் வேண்டற்பாலது.

தேவர், வேதியர், அரசர், வைசியர், சூத்திரர் ஆகியோருக்கு முறையே 100, 90, 80, 70, 60 எனும் எண்ணிக்கையில் பாடப்படும் என்று பிரபந்த மரபியல் சிறப்பித்துரைக்கிறது. பருவத்திற்குப் பத்துப் பாடல்களாக நூறுபாடல்கள் வேண்டும்என்பதே பொது மரபு. ஆயின் பிள்ளைத்தமிழ் நூல்கள் இவ்வரையறையை மீறியுள்ளன. பழநிப் பிள்ளைத்தமிழ் பருவத்திற்கு 3பாடல்கள் மட்டுமே கொண்டது. கலைசைச் செங்கழுநீர் விநாயகர் பிள்ளைத்தமிழ் பருவத்திற்கு ஐந்துபாடல்கள் கொண்டது. திரு.மு.கோ. இராமன் அவர்கள் பாடிய திருநாவுக்கரசர் பிள்ளைத்தமிழ் ஒவ்வொரு பருவமும் ஒவ்வொரு பாடலே கொண்டிலங்குவது.

பொங்குகதிர், இளம்பிறை, புலியின்சிறுபறழ், குஞ்சரக்குழவி, கோளரிக் குருளை, அடல் இளவிடை ஆகியவை ஆண்பாற்கும், மானின் கன்று, மயிலின்பிள்ளை, தேனின் இன்பத் தெள்ளாத் தேறல், கரும்பின் இளமுளை, கல்லாக்கிள்ளை, இளந்தளிர், வல்லி ஆகியவை பெண்பாற்கும் உவமையாகக்கொள்ளத் தக்கன எனப் பன்னிரு பாட்டியல் அறுதியிடும். மற்றும் தந்தை, தாய், பாட்டன், பாட்டி ஆகியோர் பெருமை உரைத்தலையும் முக்கியத்துவப் படுத்தும்.

பிள்ளைத்தமிழ் என இலக்கியங்கள் நவிலினும், பிள்ளைக் கவி என்றே பாட்டியல்கள் பேசுகின்றன. பிரபந்தங்களுள் முதலிடம் பெறுவதாகவும், ஆண்பாற்குத் தனியாகவும் பெண்பாற்குத் தனியாகவும் என அமைப்பு நிலையில் வேறுபடும் இலக்கியமாகவும், தன் பெயரிலேயே தமிழைக் கொண்டுள்ள சிறப்புடையதாகவும் இவ்விலக்கியவகை அமைகிறது. இனி இதில் இடம் பெறும் பருவங்களின் விளக்கம் காணலாம்.

**காப்பு:**

திருமால் முதலிய கடவுளர் பாட்டுடைத் தலைவராகிய குழவியைப் பாதுகாக்க வேண்டுமென்பது. குழவி பிறந்த ஏழாவது நாள் காப்பிடலெனும் உலக வழக்கு நோக்கி இஃது இலக்கிய வழக்கிலும் இடம் பெற்றது என்பர்.

**செங்கீரை:**

ஒரு காலை மடக்கி ஒரு காலை நீட்டி இருகைகளையும் நிலத்தில் ஊன்றித் தலைநிமிர்த்தி முகம் அசைய ஆடும் செங்கீரை நிலையைக் குழந்தையிடம் வேண்டுவது. புரியாத மழலை மொழியை உதிர்க்கும் பருவம் என்றும் கூறுவர்.

**தால்:**

தாலாட்டைக் கேட்கும் பருவம். தாலாட்டிக் குழந்தையைத் துயிலச்செய்தல்.

**சப்பாணி:**

கையோடு கைசேர்த்துக் கொட்டுதல். கால் வலியின்றிக் கைவலி கொண்டு நகர்ந்து செல்லும் குழந்தைகளைச் சப்பாணி எனக் குறிப்பிடும் வழக்கும் இங்கு நினைக்கற்பாலது.

**முத்தம்:**

குழந்தையை முத்தம் தருமாறு தாய், தந்தை முதலியோர் வேண்டுதல்.

**வருகை:**

நடக்கும் பருவக் குழந்தையைத் தம்பால் நடந்து வருமாறு தாய், தந்தை முதலானோர் அழைத்தல்.

**அம்புலி:**

வானத்தில் உள்ள நிலவினைக் குழந்தையுடன் விளையாட வருமாறு சாம, பேத, தான, தண்டம் முதலியவற்றால் அழைத்தல்.

**சிறுபறை:**

குழந்தையைச் சிறுபறை கொட்டி மகிழுமாறு வேண்டல்.

**சிற்றில்:**

சிறுமியர், சிறு வீடு கட்டி விளையாடுகின்ற காலை அதனைச் சிறுவன் தன் காலால் அழிக்க முனையும்பொழுது சிதைக்க வேண்டாம் என வேண்டுதல். பெண்பாற் பிள்ளைத்தமிழில் தலைவியைச் சிற்றிலிழைக்கும்படி வேண்டப்படும்.

**சிறுதேர்:**

குழந்தையைச் சிறுதேர் உருட்டி விளையாடுமாறு கேட்டல்.

**அம்மானை:**

பாட்டுடைத் தலைவியைத் தோழிகள் முத்தம்மானை முதலிய அம்மானைக்காய் கொண்டு ஆடியருளுமாறு பாடுதல்.

**கழங்கு:**

தலைவியைக் கழங்காடுமாறு வேண்டுதல்.

**சிறுசோறாக்கல்:**

தலைவியைச் சிறுசோறு ஆக்கச்செய்து புகழ்தல்.

**நீராடல்:**

தலைவியை நீர் நிலையிற் சென்று புனல் விளையாட்டயர வேண்டுதல். இது நல்ல கணவன்மாரை அடையக் கன்னிகள் நோற்கும் மார்கழி நோன்பைத் தழுவியது.

**ஊசல்:**

தலைவியை யூசலொன்றிலேறி விளையாடி மகிழுமாறு கூறுதல்.

இப் பிள்ளைத்தமிழின் யாப்பாக இந்திர காளியம் கொச்சகக் கலியையும் கலிவெண்பாட்டையும் சுட்டும். பன்னிரு பாட்டியல் அகவல் விருத்தம், கட்டளை ஒலி, கலியின் விருத்தம் எனப்பேசும். அகவல் விருத்தத்தை மட்டுமே வெண்பாப் பாட்டியல், இலக்கண விளக்கம், முத்துவீரியம், சுவாமிநாதம் போன்றன சிறப்பிக்கின்றன. இதுவே பிள்ளைத்தமிழ்ப் பிரபந்தங்கள் ஏற்றுக்கொண்டுள்ள மரபாகவும் காணப்படுகிறது. ஒவ்வொரு பருவமும் ஒவ்வொரு விருத்தத்தால் பாடலைத் தொன்னூல் விளக்கம் விரும்பும்.

## நூலாசிரியர்

'திருக்குருகூர் திருவேங்கட நாதன் பிள்ளைத்தமிழ்' எனும் இந்நூலின் ஆசிரியர் யார் என்பது தெரியவில்லை. பாட்டுடைத் தலைவனால் ஆதரிக்கப்பட்டவர் என்பதனை,

கருணைக் கடல்எங்கள் சுப்பிர மண்யன்சொற் காதலன்எத்
தருணத் தினும்உப காரம்செய் வோன்முத் தமிழ்க்கங்கை
வருணத்து மாதிரு வேங்கட நாதன் வதனமதிக்
கிரணத்தி னால்என் கலியிருள் தான்விடை கேட்டதுவே

எனும் இவரது தனிப்பாடல் புலப்படுத்தி நிற்கிறது.

இவரது வரலாறு பற்றி அறிய இயலாவிடினும் ஒரு சில குறிப்புகளை நூலினின்றும் உய்த்துணர முடிகின்றது. திருமாலை நூல் முழுவதும் பரவலாகப் போற்றியுள்ளமையாலும், முதன்மைக் கடவுளாகக் (7:6) குறித்துள்ளமையாலும் இவர் வைணவர் என்பது வெளிப்படை. காப்புப் பருவத்தில் நம்மாழ்வாரின் வரலாறு கூறி அவரை வேண்டியிருப்பதாலும், பிற இடங்களிலும் பலபடப் புகழ்ந்திருப்பதாலும், பருவ இறுதியில் 'வகுள பூஷண பாற்கரோதயன் திருவடிகளே சரண்', 'திரு ஞான முத்திரை துணை' எனக் குறிப்பிட்டிருப்பதாலும் சடகோபரிடம் மிகுந்த ஈடுபாடு கொண்டவர் எனத் தெரியலாம். பிற சமய, காழ்ப்பு இவரிடம் இல்லாத தொன்று.

தன்னுடைய மொழிப்பற்றினை, 'பல்கலைக் கடல் கடைந்த தெள்ளமுத முத்தமிழ்' (2:1) 'மருவொழுக்கும் பொருட்பாகம் கனிந்த தமிழ்' (4:7) 'பசரப் பொருட்சுவைச் செம்பாக சாரம் பழுத்தொழுக வடியிட்ட சொற் பாடல் செழுந் தமிழ்' (8:6) போன்ற கூற்றுகளால் நூல் முழுதும் சுட்டி வெளிப்படுத்தியுள்ளார். வளர் சங்கீத இசை மிழற்ற(8:7)செழுந்தமிழ்ச் சங்கீத இசை பழகு பாவலவர் (8:6) காமரக் களி தூங்கு மழலை (4:1) என்பன போன்ற தொடர்களால் இசையில் மிகுந்த நாட்டம் உடையவர் எனலாம்.

தலைவனின் மாமன்மார், மைத்துனன்மார், பிற துணைவர்கள் பலரையும் குறிப்பிட்டுள்ளமையால் தலைவனுடன் மிக நெருங்கிய தொடர்பு கொண்டவர் என்பது புலனாகின்றது செல்லனைய கார்பாரி எங்கள் மாலைப்பிள்ளை (6:1) ஆர்வ மிகு சுகிர்தமுறு கன்னபிரான், ஈதலறமென்றுணரு மீனாட்சி நாதமால் (7:5) போன்ற குறிப்புகள் இக் கூற்றினை மெய்ப்பிக்கின்றன,

'எங்கள் சுப்பிரமணியன் மணிவாசல் கல்லியாண வாசலாகிக் கனசிவிகை பலவரிசை எய்தி எக்காலமும் கண்ணேறில்லாது வாழி' எனுங்கால் (10:7) தலைவன் மீது கொண்டுள்ள ஆழ்ந்த பற்றுப் புலப்படும். 'தக்க கன கீர்த்தி பெறு வெண்ணை நல்லூரில் வரு சடையனென வாழ்வு பெற்றோன்' (2:4) எனும் சொல்லும் இவண் குறிப்பிடற்பாலது. நூல் முழுமையுமே தலைவன்பால் கொண்டுள்ள இணையற்ற அன்பு பலவாறாக வெளிப் பட்டுள்ளது.

தன் தலைவன் தன்னால் மட்டுமன்றி, பல்லோராலும் பாராட்டப்பெறும் மாண்புடையவனாக அமைய விழையும் விருப்பு, சீரகத் தமிழ் வலவர் இனிய கவி பாட நீ செங்கீரை யாடியருளே (?:7) நாவலர் துதிக்கும் சோமா (3:5) முத்தமிழ்ப் பாவாணர் நின் புகழ் வளம் பாடு முதுகவிதை (4:4) போன்ற பல தொடர்களால் உணர்த்தப்படுகிறது.

## காலம்

18-ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவர். இப்பிள்ளைத்தமிழ் இடம் பெற்றுள்ள ஏட்டுப் பிரதியின் பின் இவ்வாசிரியரால் இயற்றப்பட்ட பாடல்களில் ஒன்று தலைவன் செயலாக, கருட உருவின் பிரதிட்டையைப் பேசுகின்றது. அந்நிகழ்ச்சி:

*மன்னு தொளாயிரத்து அறுபத்தய்யாம் ஆண்டு*
*மாசி மதி மேவு பதினோராம் தெய்தி*
*பன்னு சுக்கிர வாரம் சுபதி நன்னாளில்*
*......யககண மாயர் திருவுளத்துக் கேற்கச்*
*சொன்ன வடிவால் கருடேசனை மிக்காகத்*
*தொல்லுலகினிற் பிரதிட்டை தோன்றச் செய்தான்*
*நன்னயவான புகழ் வளம்சேர் குருகை மாறன்*
*நகர்த் திருவேங்கட நாதராசன் தானே*

என்று குறிக்கப்பட்டுள்ளது. கொல்லமாண்டு 965 என்பது கி.பி. 1790-இற்குச் சமமானதால் இவர் இக் காலத்தவராக இருத்தல் துணிபு.

## பாட்டுடைத் தலைவன்

இந்நூலின் பாட்டுடைத் தலைவன் திருவேங்கட நாதன் என்பவனாவான். தென்பாண்டி நாட்டில் உள்ள குருகூர் என்பதன் தலைவனாகப் போற்றப்பட்டுள்ளான். கங்கைகுல

மரபினன் எனக் குறிக்கப்படுவதால் வேளாளர் இனத்தைச் சார்ந்தவன் என்பது துணிபு. தந்தை பெயர் சுப்பிரமணியன் என்பதாகும். தாயார் பெயர் அறியக் கூடவில்லை. பாட்டனாராக மீனாட்சிநாதன் காட்டப்பட்டுள்ளார். மீனாட்சிநாதமால், சாமிநாதவேள் இருவரும் உடன்பிறந்தோராகப் பேசப்பட்டுள்ளனர். இருவருக்கும் இடையில் தோன்றியவன். தமையன் மீனாட்சிநாதமால் இருக்க, இவன் தலைமைப்பதவி பெற்றதன் காரணம் புலனாகவில்லை. 'தேசாதி பத்தியம் செலுத்தும் அரசுரிமையால் சிந்தை மகிழ் கனயோகவான்' (6:7) என்பதால் ஏதோ ஓர் சிறப்பால் பெற்றுள்ளான் என்பது மட்டுமே தெரிகிறது.

இத் திருவேங்கடவன் பற்றிய உண்மை வரலாறு அறிய இயலவில்லை. திருக்குருகூர்த் திருப்பணிமாலை எனும் நூல் திருக்குருகூர் ஆதிநாதக் கடவுள் கோயிலுக்குத் திருப்பணி செய்தவர் யார், செய்தது என்ன என்பன பற்றிப் பேசுகின்றது. இதில் இந்நூல் குறிப்பிடும் சங்கரநாராயணையன், பெரிய திருவடி நம்பி போன்ற பெயர்கள் தென்படினும் பாட்டுடைத் தலைவன் பெயர் கிடைக்கவில்லை. குருகூரின் தலைவனாக அன்றைய அரசரால் சிறப்பிக்கப் பட்டவனாக இருந்திருக்கலாம். இப்புலவர் தம் தனிப் பாடல் ஒன்றில்,

'தென்னாகை ஊரானாம் தென்குருகூர் மாலைமனத்து
உன்னா விசேட அறிவுள்ள மதிமந்திரிநீ
இன்னா மிடி என்று இரவலர் கண்பார்த்து உதவும்
கன்னா திருவேங்கட பூபதியே'

என்று மந்திரியாகக் குறித்துள்ளார். இப் பிள்ளைத்தமிழிலும் வாரானைப் பருவத்தின் முதல் பாடலில் 'வல்லபம் மிகுந்த சங்கர நாரணேந்திரன் மதியூகி' என்று சிறப்பித்துள்ளமையும் இணைத்து நோக்குதற்குரியது.

தலைவன் மீதுள்ள ஆழ்ந்த பற்றின் விளைவாக, இலக்கிய மரபுக்கண் கொண்டு பல போர்க்களம் கண்ட வீரனாகவும், மாற்றார் திறை பெறும் பேரரசனாகவும் காட்டியுள்ளார் எனலாம். தலைவனின் போராற்றலைக் காட்டும் பகுதிகள் இடஞ் சுட்டப்பெறாது அமைந்துள்ளமையும் சுட்டத்தக்கது. தான் உழவில் பெற்ற வருமானத்தில் ஆறில் ஒரு கூறினை வேந்தனுக்கு என ஒதுக்குவதும் குறிப்பிடற்பாலது.

தையல்பாகன், சுப்பிரமணியமால், சீனிவாசபூபன், சங்கர நாரணன் என்போர் மாமன் முறையினராகவும், சுப்பிரமணியன், சங்காமூர்த்தி, கன்னபிரான், வைகுந்த நாதன், வாழிப் பெருமாள் போன்றோர் மைத்துனர்களாகவும் குறிக்கப்பட்டுள்ளனர். இவர்களுடன் மாலைப்பிள்ளை, பெரிய திருவடி, தெய்வநாயக மகிபன் ஆகியோர் சிறந்த துணைவர்களாகவும் உணர்த்தப்பட்டுள்ளனர். இவர்கள் அனைவருமே வீரம், கொடை, நற்பண்பு போன்ற சிறப்புகளுள் ஏதேனும் ஒன்றினை அடையாகக் கொண்டே குறிக்கப்பட்டுள்ளமையை நோக்கும் போது, அக்காலத்தில் இவர்கள் மிகவும் புகழ்பெற்ற குடும்பத்தைச் சேர்ந்தோராய் இருந்திருக்கலாம் எனத் தோன்றுகிறது.

திருக்குருகூர்த் திருப்பணிமாலை நூலின் செந்தமிழ் இதழின் பதிப்பில் (தொகுதி 46, 1949-50), சங்கரநாராயணையன், ஆதி நாதர் ஆழ்வார் சந்நிதி ஸ்தலத்தார் ஏழு பிரிவினரில் ஒருவராகிய பெரியன் குடும்பத்தினரின் முன்னோராவர். இன்னும் இம் மரபினரிடமே சுவாமி ஆதிநாதர் ஆழ்வார் சந்நிதித் திறவு கோல்கள் எல்லாம் வழக்கமாக இருந்து உரிய காலங்களில் உபயோகிக்கப்பட்டு வருகின்றன. இக் குடும்பத்தினருக்கு 'எம்பெருமானார் தாசர்' என்ற அருளிப் பாடும் உண்டு' என்ற குறிப்பு காணப்படுவது இவண் குறிக்கற்பாலது.

சிறந்த திருமால் பக்தர். 'குருகூர் மகிழ் மாறனை யன்றிக் குறித்து நினைத்து மறுதேவைத் தேடா மனக் குஞ்சரக்கன்றே' என்பதினின்றும் இவரும் நம்மாழ்வார் மீது நீங்காப் பற்றுடையவர் என்பது தெளிவு. நாங்குனேரி வானமா முனிவரின் ஆணையை மேற்கொள்பவராதலால் தென்கலையினர் எனலாம்.

நெடிய பச்சைமேனி (2:3) என்றும் கிரண மரகத மேனி (6:3) என்றும் மேனி வண்ணம் சுட்டப்பட, பொலிவு, 'செஞ்சி, வடகாசி, தென்குமரி, மேல் மலையாள தேசமெங்கும் தோற்ற மாம் சித்திரசிலை வடிவழக' எனச் சிறப்பிக்கப்பட்டுள்ளது. வஞ்சம் ஒன்றின்றி உரை செய்யும் மொழிகளை உடையவன் (7:7) தொட்ட யோகன் (7:7) இனிய குணங்களின் உறைவிடமானவன் (6:1) பேரறிவாளன் (10:6) பல கலைப் பனுவலும் கற்றுணர்ந்தவன் (10:6) இரவலர்க்கும், வறியோருக்கும் பேருதவி புரிந்தவன்-என்பன இவன் இயல்புகளாக உணர முடிகிறது.

இத்தலைவன் மீது வண்டுவிடுதூது ஒன்றும் சதகம் ஒன்றும் உள்ளன. தூதில் பயன்படுத்தப்பட்டுள்ள சொற்றொடர்களும் குறிப்புகளும் பிள்ளைத்தமிழ் ஆசிரியராலேயே இயற்றப் பட்டதைத் தெளிவாக்குகின்றன. அப்பகுதிகள் ஆங்காங்கே நூலுள் எடுத்துக் காட்டப்பட்டுள்ளன. இவ்வாசிரியரால் எழுதப் பட்டதாகக் காணப்படும் தனிப்பாடல்கள் இன்னிசை, வெண்பா, கலித்துறை எனக் குறிக்கப்பட்டு முற்றுப் பெறாதுள்ளன.

## தல வரலாறு

சோழ வள நாட்டில் காவிரிக் கரையில் திருவரங்கம் முதலிய திவ்வியப் பதிகள் அமைந்து விளங்குவது போன்று, பாண்டி நாட்டில் தாமிரபரணி நதிக்கரையில் ஒன்பது திருமால் பெரும் பதிகள் அமைந்து விளங்குகின்றன. இப்பதிகளை நவதிருப்பதிகள் என்று கூறுவர். இந்த ஒன்பது பதிகளுள் முதலாவது பதியாகத் திகழ்வது ஆழ்வார் திருநகரி எனும் திருக்குருகூர். இப்பகுதி திருநெல்வேலி - திருச்செந்தூர் நெடுஞ்சாலையில் உள்ளது. இத் தலத்தினைப் பரமபதத்தின் எல்லை எனப் போற்றுவர் வைணவர்.

நம்மாழ்வார் அவதரித்த தலமாதலால் ஆழ்வார் திருநகரி என்று தற்பொழுது வழங்கிவரும் இந்நகருக்கு ஆதியில் குருகூர் எனப் பெயர் பெற்றமைக்குப் பல காரணங்கள் காணப்படு கின்றன. நம்மாழ்வாரின் மூதாதையருள் ஒருவரான குருகன் என்பவர் இந்நகரைத் தலைநகராகக் கொண்டு திருவழுதி நாட்டினை ஆண்டு வந்தமையினால் என்றும், பிரமன் தவம் செய்வதற்குரிய தலம் யாது என்று நினைத்துக் கொண்டிருக்கும் போது, 'பிரமனே (இங்குத்தவம்) செய்' என்று இத்தலத்தைச் சுட்டி வான்மொழி கூறியதனால் குருகாபுரி என்று பெயர் வந்தது என்றும் கூறுவர். (குரு-செய்; கா-பிரமன்; புரி-நகரம்) குருகு வலம் வந்து பேறெய்திய சிறப்பால்; சங்கராசன் வழி பட்ட இடமாதலால் (குருகு-சங்கு); திருமாலே குருவாக வந்து பிரமனுக்கு உபதேசித்த தலமானதால் குருகூர் எனப்பெயர் பெற்றது எனவும் பேசப்படுகிறது. நம்மாழ்வார் மீது மிகுந்த பற்றுக் கொண்டுள்ள இப்புலவர் குருகூரைப் பலவாறாகச் சிறப்பித்துள்ளவர், அதனை ஓரிடத்தில் கூட ஆழ்வார் திருநகரி எனக் குறிக்கவில்லை. எனவே இப்புலவர் காலத்திற்குப் பின்பே குருகூர் ஆழ்வார் திருநகரி எனப் பெயர் பெற்றது போலும்.

இங்குள்ள கோவில் திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள பெரிய கோவில்களுள் ஒன்றாகும். மணவாள மாமுனிகளும் அவதரித்த பெருமையை இத்தலம் கொண்டது. இத்தலத்தின் மீது திருக்குருகைப் பெருமாள் கவிராயரால் குருகை மான்மியமும், சடகோபப்புலவரால் குருகூர்ப் பள்ளும் (பராங்குசப் பள்ளு), இராமரத்ன கவிராயரால் குருகைமாலையும் பாடப் பட்டுள்ளன.

சயம்புகழார் பலர் வாழும் தடங்குருகூர், நல்லார் பலர் வாழ் குருகூர், நல்லார் நவில்குருகூர், ஏற்கும் பெரும் புகழ் வண்குருகூர் என ஆழ்வார்களாலும், எட்டாத நான்மறைக்கும் எண்ணெண் கலைக்கும் ஒரு கொட்டாரமாகும் குருகை, மாமறையும் செந்தமிழும் மாறாதிசை மணக்கும் கோமறுகு சூழ் தென்குருகை எனக் குருகை மாலையாலும் போற்றப்படும் சிறப்புடைத்து இவ்வூர்.

## நூல் அறிமுகம்

திருக்குருகூர்த் திருவேங்கடநாதன் பிள்ளைத்தமிழ் எனும் இந்நூல் காப்பு, செங்கீரை, தால், சப்பாணி, முத்தம், வாரானை, அம்புலி, சிறுபறை, சிற்றில், சிறுதேர் என்ற வரிசையில் அமைந்து பருவத்திற்கு ஏழு பாடல்களாக எழுபது பாடல்களை ஆசிரிய விருத்தத்தில் கொண்டது. தலைவன் பெயருடன் ஊரும் இணைந்து பெயர்கொண்ட இந்நூலுக்கு என்று தனித்த காப்புப் பாடல் அமையவில்லை. பிரபந்த மரபியலின் கருத்தை உட் கொண்டு வேளாளரான பாட்டுடைத் தலைவனுக்கு 70 பாடல் களைப் படைத்தனர் போலும். பொதுவாக அனைத்துப் பிரபந்தங்களிலும் நூலுக்குக் காப்புச் செய்யுள் இயற்றுதல் மரபு. தன்னுடைய தூது நூலில் கூட கருடேசனுக்குக் காப்புரைத்தே நூலைத் தொடங்கியுள்ள புலவர் இங்கு விட்டிருப்பது குறிப்பிடத்தக்கது.

காப்புப் பருவத்தில் முதற்பாடல் மரபுப்படித் திருமாலை வேண்டுகின்றது. இரண்டாம் பாடல் சிவனையும், மூன்றாம் பாடல் நம்மாழ்வாரையும், நான்காம் பாடல் நான்முகனையும், ஆறாம் பாடல் கருடனையும், ஏழாம் பாடல் வானமாமலை முனிவனையும் வேண்ட, ஐந்தாம் பாடல் இந்திரன், மாகாளியர், குபேரன், வேலவன், வயிரவன், ஐங்கரன், சிவன், பதினொருவர்,

சாத்தன், சதிரவன், பன்னிருவர், கருடன், திருமகள், நாமகள், உமை, எழுசன்னியர் ஆகியோரைப் பாடுகிறது. காப்பில் பாட வேண்டிய தேவர்களாகப் பாட்டியல் கூறுபவர்களுடன் இவர் சடகோபரையும், வானமாமலை முனிவரையும் இணைத்திருப்பது குறிப்பிடத்தக்கது. காப்பில் தனக்கு விருப்பமான மானிடரையும் இணைக்கும் பழக்கம் பிற்காலப் பிள்ளைத்தமிழ்களில் பரவலாகப் பொருந்தியுள்ளது.

காப்புப் பாடல்களில் பாட்டுடைத் தலைவனைக் காக்க வேண்டாது தலைவனைப் பாடும் தன்கவி வாழ வேண்டியிருப்பது புதுமையாகும். ஏழு பாடல்களுமே இவ்வாறு அமைந்துள்ளன. நூலுக்குத் தனித்த காப்பு அமைக்காமை இது கருதியே போலும். இம்மாற்றம் பிள்ளைத்தமிழ்ப் பாடலின் நோக்கத்திற்குப் பொருத்தமானதாகத் தோன்றவில்லை. ஆயின் எக்காரணம் பற்றி இதனை உருவாக்கினார் என்பது தெளிவாகப் புலனாகவில்லை. ஒருக்கால், தலைவனைத் திருமாலாகவே உருவகித்திருப்பதால் காத்தற் கடவுளுக்குக் காப்பு தேவையில்லை எனக் கருதியிருக்கலாம். நூலைக் காக்கும்படி வேண்டும் பொழுதே அதில் உட்பொருளாகத் தலைவனைக் காத்தலும் அமைகிறது எனவும் கொள்ளலாம்.

செங்கீரைப் பருவம் இருநிலைகளில் அமைகிறது. செம்+கீர் எனப் பிரித்தால் கிர் என்பது சொல் எனப் பொருள்பட்டு புரியாத சொற்களை உதிர்க்கும் மழலைப் பருவத்தைக் குறிக்கும். இக் கருத்துப்படி,

கவிகற்ற வாணரிசை பெறுசுப்பிர மணியமார்க்
கண்டன்மகிழ் கொண்டு கேட்கச்
செவிக்குங் கருத்துக்கும் இன்பரசம் விளையநீ
செங்கீரை யாடியருளே (2)

என்று பாடியுள்ளார். மற்றொரு நிலையில், கால்களையும், கைகளையும் நிலத்திலூன்றி முகத்தை மேல் நிமிர்த்தியாடுதல் எனும்படி,

வீறாடு தோரணத் தெருவீதி யில்புழுதி
விளையாடி நெடிய பச்சை
மேனியும் தொந்தியும் பண்டியும் அசைந்தாட
வேதித்த வாச சந்தச்
சேறாடு மருமமிசை திருமங்கை யாடநீ
செங்கீரை யாடியருளே (3)

எனவும் பாடியுள்ளார்.

பிற பருவங்கள் மரபமைப்பையே கொண்டுள்ளன. தாலப் பருவத்தில் யசோதையைக் கொண்டு தாலாட்டச் செய்துள்ளமை குறிப்பிடற்குரியது. சப்பாணிப் பருவத்தில் தலைவனின் தசாங்கமாக, மாரிதவழ் பொதிய மால்வரை, துறைப்பொருநை மாநதி, வழுதிவளநாடு, செங்கமல மங்கை குடி கொண்ட குருகை மாநகர், செயமதக்களிறு, அடர்சரகதிப்புரவி, செம் பொன்மேழித்துவசம், எங்கும் ஒத்ததிரும் முரசம், ஏடவிழ் பசுங்குவளைத்தார், இசைதவறிலா வானமாமலைத் தவமுனிவர் இருபதாம்புயத்து ஆணை ஆகியன சிறப்பிக்கப்பட்டுள்ளன.

தலைவனின் முத்தம்பிறர்தரும் முத்தங்களைவிட உயர்ந்தது என்பதனை இரு பாடல்களில் உணர்த்துகிறார். தலைவனின் கேசாதிபாத கவின் காண விழையும் புலவர், அதனை வாரானையில் அமைத்துக் களிக்கிறார். பிறிதொரு பாடலில் பாதாதிகேச வர்ணனை அமைத்திருப்பதும் குறிப்பிடற்பாலது (5:7). சாம, பேத, தான, தண்டம் காட்டித் திங்களைத் தலை வனுடன் விளையாட அழைக்கும் பாடல்களில் பேதமும், தண்டமும் பிறவற்றைவிடச் சுவையுடையனவாக உள்ளன. தலைவனின் புகழ் மிகுதியாகப் பெருமைப்படுத்தப்படும் பருவமாகவும் இப்பருவம் அமைந்துள்ளது எனலாம்.

தலைவன் பதியில் ஒலிக்கும் பல வகை முரசுகளையும், முழக்கங்களையும் சிறுபறையில் காட்டும் புலவர், குருகூரின் மேன்மையினை இப் பகுதியில் அதிகமாகக் காட்டியுள்ளார்.

பெண்டிர் சிற்றில் இழைக்கும் பருவமாக, தோற்றும் பேதைப்பருவம் முற்றித்தொடர்ந்த பெதும்பைப் பருவத்தையும், பொழுதாக நன்பகலையும் நவிலும் புலவர், அச்சிற்றிலை, புது மணல் திரள் எடுத்து உண்டாக்கும் சிறு கூடமும், தளமும், இடைக்கழியும், ஆடரங்கும், திண்ணையும், அறையும், மாளிகை யும் உடையதாக விரித்திருப்பது புதுமை நயம் பயக்கின்றது.

தலைவனின் சிறுதேரும் ஒவ்வோர் அங்கமாக உயர்வு நவிற்சி பட சிறப்பிக்கப் பட்டுள்ளது. இறுதிப்பருவத்தின் இறுதிப் பாடலை 'பார் வாழி வழுதி வள நாடினிது வாழி அலைபடர் பொருநை வாழி, மிக்க பழைய செல்வக் குருகை நகர் வாழி முத்தமிழ்ப்பா வாழி......' என வாழ்த்தாக அமைத்துத் தலை வன்பால் தமக்குள்ள பெருவிருப்பினையும் இலக்கியப் படைப் பில் புதுமை நோக்கினையும் காட்டியுள்ளார்.

'பேர் பூத்த கொடை வள்ளல் மீனாட்சி நாதவேள் பின் புதித்து இனிய கீர்த்தி பெற்ற நரபதி திருவேங்கட பூபன் மகிழ்

பிள்ளைத் தமிழ் தழையவே ஆதிமாமால் உபய சேவடி வணக்க முறுவாம்' என இறை வணக்கத்துடன் தொடங்கி வாழ்த்துடன் நூல் முடிந்திருப்பது தனித்து நிற்கும் பிள்ளைப்பருவங்களி டையே ஓர் இணைவை ஏற்படுத்துகிறது எனலாம்.

## இப்பிள்ளைத்தமிழ் காட்டும் தலைவன் சிறப்புகள்

சுவையமிர்த மொழி பழகு துரை திரு வேங்கட நாத துங்கன் (1:6) புத்திக்கு யூகி (1:3) வளர்குருகை மாநகர்க்கும் மரபு பெறு கங்கா குலத்திற்கும் வண்பொதிய மால்வரைக்கும் பொருனை மாநதிக்கும் புகழ்ப் பாட்டுக்கும் மனுவேந்தன், வழிக்கும் பசுந்தேனு வட்டறாது அமுதொழுகு மழலைவாய்(5:2) என்று பலவாறாகச் சிறப்பிக்கப்படும், இதன் பாட்டுடைத் தலைவன் திருமால் ஆகவே காட்டப்பட்டுள்ளான். செங்கீரைப் பருவம் ஆறாம் பாடல், தாலப் பருவம் மூன்றாம் பாடல், சிற்றில் பருவம் நான்காம் பாடல் ஆகியன முழு நிலையில் திருமாலின் செயல்களையே இவனுக் காக்கிக் கூறுகின்றன. மற்றும் கோசலை பாலகனாகவும் (3:2), சீதைக்கு வரிசிலை குழைத்த ரகுராமனாகவும் (9.3), அசோதை அவாவியெடுத்த அருமைப் புதல்வனாகவும்,வேதித்த வாசசந்தச் சேறாடு மருமமிசை திருமங்கையாட செங்கீரையாடுபவனாகவும் நவிலப்பட்டுள்ளான். புரவலன், புலவரின் திருமால் பற்றும், திருவுடை மன்னரைக் காணில் திருமாலைக் கண்ட ஆழ்வாரின் கூற்றில் உள்ள நம்பிக்கையும் இதற்குக் காரணம் எனலாம். தொல்காப்பியரின் பூவை நிலையையும், அரசர்களைத் திருமாலாகக் காட்டும் மரபையும் இங்கு இணைத்து நோக்கலாம்.

தண்டமிழ் அன்புறு தென் குருகூரா எனத் தலைவனின் தமிழ்ப் பற்றினைக் காட்டும் புலவர், அதன் காரணமாக அவன் கவி வாணர்களைப் புரந்தமையையும் பல இடங்களில் சுட்டியுள்ளார். (4:7, 8:1) சங்கையில்லாது முத்தமிழுக்கு நிதிமீறு தருதிரைப் பதக்கம் நல்கும் சங்கநிதி இவன் (7:3) என்பதும் இவன் தமிழ்ப் பற்றைப் புலப்படுத்துவதாகும். புலவர்களின் தகுதி யறிந்து பரிசளிக்கும் தன்மையை 'நாவலோர் சொற்குணம் அறிந்து விலை பெற்ற சாலுவை, இழைத்துப்பட்டி, பாகை செம்பொற் சுடர்மணிப்பணி கனகம் முதலான பரிசெலாம் தோற்றமாகக் கொடுக்கும்...வள்ளலே' என்பதாற் பெறலாம்.

கற்பகதரு, தருமத்துரை, சிந்தாமணி, இந்திராதிபதி என விளிக்கப்படும் திருவேங்கடநாதனின் கொடையும், வீரமும்,

சங்கப் புலவர்களால் தமிழ் மன்னர் சிறப்பிக்கப்பட்டமை போன்று கவினுற இயம்பப்பட்டுள்ளது. அதியமானுக்கு ஔவையும், ஆய் அண்டிரனுக்கு முடமோசியாரும் போன்று திருவேங்கடநாதனுக்கு இப்புலவர் அமைந்துள்ளார். அசனத்து அருபால் அசனிசுற்கண்டு அரும்பாகொடு முக்கனி பலவும் அமைத்து, தமர் விருந்தெதிர் கொண்டு தினமும் அமுதளித்துச் சடைவுறாது விருந்தோம்பும் பண்புடைய இவனை, வையை நாடனின் மீனக் கொடியையும், உறந்தைப்பிரானின் புலிக் கொடியையும், பூழியனின் விற்கொடியையும் பழித்துப் பொலன் சிகர வடவரையில் மேழியந் துவசம் பொறித்தவனாகப் போற்றியுள்ளார்.

தலைவன் குருகூர்க் கோயிலுள் கருடனைப் பிரதிட்டை செய்தமை, ஆறாத வெங்கலிக் கோடைக்கு நிழலாக ஆவிளம் சோலை தோற்றுவித்தமை, கூபம் தடங்கள் வெட்டி வைத்து குளமும் புரவும் பெருகச் செய்தமை போன்றவற்றினின்றும் இவர் பொது மக்களுக்காகப் பல நன்மைகள் புரிந்துள்ளார் என்பது பெறப்படுகிறது.

இப் புரவலன் தன் வருவாயினை ஆறு கூறிட்டு, ஒன்றை அரசனுக்கும், ஒன்றைத் தென்புலத் தேவருக்கும், ஒன்றை வழிபடு கடவுளுக்கும், ஒன்றை வெங்கலிப்புலி தொடர மெலிவொடு வரும் புதுவிருந்தினருக்கும்,மற்றொன்றைப் பழமை தழுவிய தமருக்குமாக ஒதுக்கி எஞ்சியதைத் தனக்குக் கொண்டான் என்பர் (3:5).

மகரக்குண்டலக் குழை, ரெத்தின மாலிகை, வச்சிரமணி மாலை, மரகதச்சுட்டி, சிகழிகை, பொற்சுட்டி, கங்கணம், வயிடூரியக் குழை, சிலம்பு, தரளவடம், தோள்வளை, கடகம், கணையாழி, நவரத்ன தண்டை, கிண்கிணி, கழல் போன்றன தலைவனின் அணிகளாகச் சுட்டப்பட்டுள்ளன.

தலைவனைக் குழந்தைப் பருவத்தினனாகப் பாவித்துப்பாடுவதுதான் பிள்ளைத்தமிழாயினும், தலைவனின் பிற பருவச் செயல்களையெல்லாம் இப்பருவத்தில் ஏற்றிப் பாடுதல் பெருவழக்கமாக அமைகிறது. இப்புலவரும் இதற்கு விதிவிலக்கில்லையாயினும் தலைவனை ஒரு சில பாடல்களில் மிக அழகாகக் குழந்தையாகப் பாவித்துப் பாடியுள்ளார்.

மெய்யின் அகம்பார்த்து அணிந்த தரளவடம்
அசைய மணிவாய் அணிமுறுவல்
அரும்பத் திலக நுதல்வியர்ப்ப
ஆங்கு விரைவில் தவழ்ந்தோடி,
மகம்பார்த்து உயர்மே டையில்குயிற்று
மணியிற் புகுந்த நிழலைஒரு
மலர்க்கை அணைப்ப வாராத
வடிவைக் குறித்து தாயர்திரு
முகம்பார்த்து இருகண் பிசைந்துஏங்கு
முகிலே முத்தம் அளித்தருளே (3.7)

என்பதைச் சான்றாக்கலாம்.

திருமங்கை ஆழ்வாரை அடியொற்றி இவரும் மகளிர் மடலேறலைக் காட்டுவர் (3:2). சுவை பெறுநல்வசனத்து அமிர்தம் ஒழுகுசிந்தாமணியான திருவேங்கடநாதனின் திருப்புகழ் மட்டுமன்றி அவனது உற்றார் உறவினரும் பல இடங்களில் சிறப்பிக்கப்பட்டுள்ளனர். இதில் உரைத்துள்ள அளவிற்கு ஏனைய பிள்ளைத் தமிழ்களில் இஃது காணப்படுமா என்பது ஐயமே. தாய், தந்தை, பாட்டன், பாட்டி ஆகியோரைச் சிறப்பித்தலையும் பன்னிருபாட்டியல் இலக்கணமாகக் கொள்வதால் இவர் சுற்றத்தாரையும் இணைத்துப் புகழ்கின்றார் எனலாம்.

தோன்றும் இசைகொண்ட சங்கர மூர்த்தி, ஆர்வம் மிகு சுகிர்தமுறு கன்னபிரான், பூதலத்து அருமைபெறு வைகுந்த நாதன், புரந்தர சவுந்தரம் மிகுந்த சுப்பிரமணிய பூபாலன், ஈதலறம் என்று உணரும் மீனாட்சிநாதமால், இனிய சற்குண மாருதி ஏற்றமுற வருசாமிநாதவேள், செல்லனைய கார்பாரி எங்கள் மாலைப்பிள்ளை என்பன போன்று குறிக்கப் பட்டுள்ளனர்.

பாட்டுடைத் தலைவன் திருமாலோ என நினைந்து வியக்கும் வகையில் நூல் முழுமையும் துளபத் தொடை நெடுமாமால் போற்றப்பட்டுள்ளார். கசேந்திரனுக்கு மோட்சம் அளித்தது, பாற்கடல் கடைந்தது, அம்புலி சிவன் சடைப்பட்டது, ஆழியால் இரவி தோன்றாதபடி கண்ணன் அருளியது, சீதைக்கு வரிசிலை குழைத்தது போன்ற பல புராணக் கதைகளையும் தன் பாடற் சுவைக்கு இணைத்துள்ளார்.

ஆறாடு கங்கை குலதிலகனான திருவேங்கடவனின் நாடு புகழ்ப் பாண்டி நாடெனப் பேசப் பட்டுள்ளது. கொண்டல்படி தண்டலைக் குருகை நகரும், வளைந்த நெடுங்கூன் வலம்புரிகள் முழக்கும் பொருனை நதியும் பலவிடங்களில் சிறப்பிக்கப் பட்டிருப்பதுடன் தனித்தனிப் பாடல்களிலும் புகழப்பட்டுள்ளன. (8: 5; 6: 6) இவற்றுடன் தலைவனின் களிறும், துவசமும் தனித் தனியாகப் புகழப்பட்டுள்ளன.

## இலக்கிய இன்பம்

ஒருநூலின் சிறப்பு அது தரும் கவிச்சுவையிலும் அமைகிறது. புலவரின் தனித்துவம் அக்கவிச் சுவையைத் தருமுறையிலும் காணப்படும். கவிஞனின் பெருமையைப் புலப்படுத்துவதாகவும் அமைகிறது. இப்புலவரும் பலவகை அணிகளாலும், கற்பனை, ஓசை நயத்தாலும் இலக்கிய இன்பம் அளிக்கிறார்.

பிள்ளைத்தமிழ், முத்தமிழ், செந்தமிழ், கவி, தமிழ், பிள்ளைக் கவி முதலிய சொற்களால் பிள்ளைத்தமிழைக் குறிப்பிடுகிறார்.

அணிகளில் முதன்மை பெறும் உவமையை, 'வாசப்பசுந் துளசியம் கன்று போல் சென்மித்த' என்பது போன்று சிறப்பாகப் பலவிடங்களில் படைத்துள்ள ஆசிரியர், தாம் கூறவிரும்பும் கருத்துக்கு மிகுந்த அழுத்தம் தர ஒன்றுக்கு மேற்பட்ட உவமை களைக் குறிப்பது பல இடங்களில் காணப்படுகிறது. 'சத்த மேகக் கருவென்ன, வள்ளல் இருபத்தொரு குழாமென, காம தேனுவும் எனச் சொல் கன்னனென ஒளிர் சங்க நிதி, பற்ப நிதி எனக் கப்புவிடு கற்பகப்பூத் தருவெனத் தரு கொடைக் கங்கை குல திலகம்' (4 : 7) எனச் சுட்டியிருப்பதைச் சான்றாக உரைக்கலாம்.

உவமையில் மட்டுமன்றி உருவகத்திலும் அடுத்தடுத்துப் பலவற்றை அமைப்பதை 'திண்டிறல் விசையா, வசிகர சுமுகா, தியாக சமுத்திரமே, செல்வத் துறைவளர் கல்விக்கரசே, செகதல கற்பகமே, கொண்டலெனத் தருமன்னா கன்னா, கொற்றவர் கண்மணியே, குஞ்சர முகன் வந்து அஞ்சல் எனப்பகர் கோசலை பாலகனே' (3: 2) எனும் பாடலில் கண்டு இன்புறலாம். பாட்டுடைத் தலைவன் மீது புலவர் கொண்டுள்ள எல்லை யில்லாப் பற்றைப் புரிந்து கொள்ளவும் இதுபோன்ற பகுதிகள் உதவுகின்றன.

எதனையும் உயர்வு நவிற்சியில் தருவதிலேயே புலவர்கள் பேரின்பம் காணுகின்றனர். இதற்கு இப்புலவரும் விலக்காகாது உயர்வு நவிற்சியைச் சிறப்புறப்படைத்துள்ளார் (2:1). தலைவனின் குழந்தைமைத் தளர் நடையை, 'மறுகி அடிதறுகி சுவர்த்தலம் பற்றி மென்மலரடி பெயர்த்தொதுங்கி' என்று மிக இயல்பாகக் காட்சிப் படுத்தியுள்ளமையும் யாரையும் ஈர்க்க வல்லதாம்.

சிலேடை யமைப்பில் புலவருக்குப் பெருவிருப்பம் உள்ளமையை, கணபதிக்கும் நான்முகனுக்கும், கவிதைக்கும் பொருனைக்கும், தலைவனுக்கும் ஆதிசேடனுக்கும் என அமைத்துள்ளமையினின்றும் உணரலாம். இவர் பாடலில் பெருமையுற்று விளங்கும் கூறுகளுள் மற்றொன்று ஓசை நயமாகும். நேசவிலாசவுலாசபிரகாசமன்னே (3:4); கடாம் பொழி படாம் பொதி நுதல் களி யானை (9: 1) என ஆங்காங்கே தொடர்களும்,

ஆறாடு கங்கை குல வங்கிசபதி இவனென்ன
அனைவரும் கொண்டாட நீள்
அணிமகர குண்டலக் குழையூச லாடவெய
ராடவரை மார்பில் முத்தம்
மாறாட அணிரெத்தின மாலிகை துவண்டாட
வச்சிரமணி மாலையாட (2 : 3)

எனப் பாடல் முழுவதும் தொடரும்படியாகவும் அமைத்துள்ளார். கவிஞரின் கற்பனைக் கவினை 'குளஞ்சேர் பழனத் தெளியில் உழும்' எனும் பாடலில் கண்டு களிக்கலாம்.

சமுகம் (9:1), குறும்பு (9:1), சடைவு (7:2) தாட்டீகம் (8:3) கல்யாணம் (10:7) எனப்பல வழக்குச் சொற்களை இணைத்துத் தன் கவிக்குச்சுவை சேர்க்கிறார். வடமொழிச் சொற்களையும் அதிகமாகக் கையாண்டுள்ளார். அவற்றை, சந்தோஷம் (6:7) சாத்ரம் (10:2) சக்ரம் (10:2) என வடமொழி ஓசையுடனும், சொன்னக்கிரி (3:4) கிருபை (3:5) பிரிதி (9:4) செகம் (10:2) என்பது போன்று தமிழ் ஒலிக்கு ஏற்ப மாற்றியும் நூலுள் இணைத்துள்ளார்.

கவி, மீறு, மா, புயபூதரன் போன்ற சொற்களைப் பல விடங்களில் இப்புலவர் பயன்கொண்டுள்ளார். குவளை மலரும், வலம்புரியும் கவிஞரின் சிந்தை கவர்ந்த பொருள்களாகக் காணப் படுகின்றன. தலைவனின் கொடைத் தன்மையை அதிகமாக

வியக்கும் புலவர்' குபேரன், முகில், வள்ளல்கள் ஆகியோருடன் அதிகமாக ஒப்பிடுகிறார்.

கருணை விழிவழி சுரந்து அலையெறிய (4:1); வழிக்கும் பசுந் தேன் உவட்டறாது அமுதொழுகு மழலைவாய் (5:2) திண்புயக் கிரியினில் தண்பனிக் குவளை செந்தேனாறு கொட்ட (4:3) மழை பூசலாடிய கொடைச்செந்தாமரைக் கரதலத்திடை சிவப்பேறவே (4:1) போன்ற தொடர்கள் புலவரின் கவித்திறனுக்குச் சான்று பகருகின்றன. புலவர் பரந்த இலக்கியப் புலமை மிக்கவர் என்பதனை இயற்கை வருணனைகள் சுட்டுகின்றன. ஆங்குப் பழமையும் புலவரின் கற்பனையும் இணைந்து காட்சியளிக் கின்றன.

தன்னை யொத்த கவிஞர்களிடம் புலவர் கொண்டுள்ள பற்று, சீரகத் தமிழ் வலவர் இனிய கவிபாட (2:7) மரு வொழுக்கும் பொருட் பாகங்கனிந்த தமிழ் வாணர், முத்தமிழ்ப் பாவாணர் (4:4) பாவேந்தர் (3:6) நாவலோர் (8:1) போன்ற தொடர்களால் வெளிப்படுகிறது.

முத்தக அலங்காரம் ஏய்ந்து பொன், பூ, மணி முதற்சீர் அகத்து அடக்கி, முத்தமிழ்ப் பாவாணர் நின்புகழ் வளம்பாடு முது கவிதைபோல் தெளிந்து (4:1) என்பதால் இலக்கண மரபு மீறாமையும், பகரப் பொருட் சுவைச்செம்பாக சாரம் பழுத் தொழுக அடியிட்ட சொற்பாடற் செழுந்தமிழ் என்பதால் (8:6) உன்னுந் தொறும் புதுப்புது நயம் பயக்கும்பொருட்செறிவுடைய தாய்ப் படைத்தலும் ஆசிரியரின் இலக்கியம் பற்றிய எண்ணங் களாக அமைகின்றன.

# திருக்குருகூர் திருவேங்கடநாதன் பிள்ளைத்தமிழ்

## காப்புப் பருவம்

### திருமால்

நீர்பூத்த பொற்றகட் டாயிர மடற்கதவ
நிலையிட்ட தோட்டகட்டு
நெட்டிதழ்ச் சுடர்விளக் கிட்டவட் டக்கமல
நிமலமணி மண்ட பத்துச்
சீர்பூத்த திருமங்கை கொங்கைத் தழும்பெழுது
சிகரபுய பூதரத்துத்
திகிரிசங் கந்திகழும் ஆதிமா மாலுபய
சேவடி வணக்கமுறுவாங்
கார்பூத்த பைங்குவளை மீறுதட மேவுகுரு
காபுரி யுவந்தமகவான்
கற்பக தருச்சுப்ர மணியபூ பாலனிரு
கண்மணி யெனச்சிறந்த
பேர்பூத்த கொடைவள்ளல் மீனாட்சி நாதவேள்
பின்புதித் தினியகீர்த்தி
பெற்றநர பதிதிருவேங் கடநாத பூபன்மகிழ்
பிள்ளைத் தமிழ்தழையவே. 1

## பொழிப்பு

நீரில் மலர்ந்துள்ள பொன்னால் ஆகிய தகடு போன்ற ஆயிரம் பூவிதழ்களைக் கதவுகளாகவும், தொகுதியாக அமைந்துள்ள அந்நீண்ட இதழ்களின் உட்புறம் ஒளிவிடுகின்ற விளக்கு ஏற்றியது போலவும் அமைந்துள்ள வட்டமான தாமரை ஆகிய குற்றமற்ற மணிமண்டபத்தே உறையும் அழகு நிரம்பிய திருமகள் தழுவிஎழுதிய கொங்கைத் தழும்புள்ள உச்சி

யையுடையமலை போன்ற தோள்களில் சக்கரம், சங்கு திகழும் ஆதிநாதக்கடவுளான திருமாலின் இரண்டு திருவடிகளை, கருமை நிறைந்த பசுமையான குவளை மலர்கள் நிறைந்த நீர்நிலைகளை யுடைய குருகாபுரி அருளிய பெரியவனும், கேட்டதைக் கேட்ட வர்க்குக் கொடுக்கும் கற்பகத் தருவாகிய சுப்பிரமணிய பூபா லனின் இரு கண்மணியெனச் சிறப்புடைய கொடை வள்ளல் எனப் புகழ் பெற்ற மீனாட்சி நாத வேளின் பின் பிறந்து மகிழ்வு தரும் கீர்த்தி கொண்ட, மானிடர்க்கெல்லாம் தலைவனுமாகிய திருவேங்கட நாத பூபன் மகிழும்படி அவன் மீது பாடப்படும் பிள்ளைத்தமிழ் சிறப்படைய வேண்டி வணங்குவோம்.

## குறிப்புரை

மடல் -பூவிதழ்; கதவம்-கதவு; தோடு-தொகுதி; அகடு-உட் புறம்; நிமலமணி-குற்றமில்லாத மணி; சீர்-அழகு; திகிரி-சக்கரம்; மா-பெருமை; கார்-கருமை; மீறு-மிகுதல்; தடம்-நீர்நிலை; கற் பதரு-ஐவகைத் தருக்களுள் ஒன்று; வானுலகில் உள்ளது, கேட் பதைக் கொடுக்கவல்லது என்பது நம்பிக்கை. பூத்த-பெற்ற; கீர்த்தி-புகழ்; நரபதி-மானிடர்களின் தலைவன்; பூபன்-அரசன்.

காப்புப் பருவம் திருமாலை முதலாவதாகக் கொண்டு தொடங்கும் மரபினைப் பின்பற்றி நூலைத் தொடங்கியுள் ளார். நூலின் முதற்சீர் பத்துப் பொருத்த முடையதாக இருத்தல் வேண்டும் எனக்கூறுவது பாட்டியல் வழக்கு. அதனைப் பின்பற்றும் இந்நூலார் மங்கலச்சொல்லாகப் பாட்டியல் கருதும் நீர் என்பதனைக் கொண்டு தொடங்கியுள்ளார்.

இந்நூலாரால் இயற்றப்பட்டதாகக் கருதப்படும் வேங்கட நாதன் வண்டுவிடு தூது எனும் நூலும், மீனாட்சி நாதன் இவன் தமையன் என்பதனை,

'உள்ளபுவி
நம்புதுரை மீனாட்சி நாதமண்ட லாதிபதி
தம்பியென வந்துதித்த சங்கிராமன்—கெம்பீர
நன்னயவேள் மீனாட்சி நாததுரைச் சிங்கேறு
முன்னுதிக்கப் பின்னுதித்த மூர்த்தவான்'

என நவிலக் காணலாம்.

## சிவன்

பவள நெடு வரையைவெண் டுகில்பொதிந் தென்னப்
பனிப்படல மிட்டதொப்பப்
பருதியிட றியகனக வடவரை வளைக்கின்ற
பாற்கடல் கடுப்பமுடிமேற்
தவளவெண் பிறையமுத கலைசுரந் தொழுகுவெண்
தாரைவழி வதுநிகர்ப்பத்
தளதளென வெண்பொடியின் அழகுநிறை சுந்தரச்
சடைமுடிக் கடவுள்காக்கக்
குவளைநறு மடல்விரிய வழிநறவு கூட்டுண்டு
கொள்ளைவண் டுழுமாலையான்
கொண்டல்படி தண்டலைக் குருகைநக ராதிபதி
கோபால விம்பமானோன்
கவளமழ களிறனைய துரைசுப்ர மண்யனற்
கவின்மதலை எனவுதித்த
கற்பதரு திருவேங் கடநாத பூபன்மேற்
கருதுமிசை முத்தமிழையே. 2

### பொழிப்பு

பவளம் போன்ற நிறத்தை உடைய உயர்ந்த மலையினை வெண் துகிலால் மறைத்தது போன்று பனிப்படலம் சூழ்ந்து நிற்ப தொப்பவும், சூரியன் இடறும்படி உயர்ந்து நிற்கின்ற பொன்போன்ற மந்தரமலையை வளைத்துள்ள பாற்கடல் எனவும், முடிமேல் அணிந்துள்ள மிகுந்த வெண்மை நிறத்தையுடைய பிறைச் சந்திரனிடமிருந்து ஒளி வெள்ளம் சுரந்து வெண்தாரையாக வழிவதனை நிகர்ப்பவும், சுடர்விட்டுப் பிரகாசிக்கின்ற வெண்பொடியின் அழகு நிறைந்த, சுந்தரச் சடைமுடிக் கடவுளாகிய சிவன், மணம் மிகுந்த குவளை மலர்களின் மடல்விரிய அதனின்றும் வழியும் தேனினை அருந்தும் வண்டுகளின் மிகுதியை உடைய மாலையை அணிந்தவனும், மேகங்கள் படியும் குளிர்ந்த சோலைகள் நிறைந்த குருகை நகரின் தலைவனும், கோபாலனின் வடிவமாகத் திகழ்பவனும், கவளத்தை வாயிற் கொண்ட இளமையான களிறு போன்ற தலைவனான சுப்ரமண்யனின் நல்ல அழகிய குழந்தை எனும் படிப் பிறந்த கற்பகத்தருவும் ஆகிய திருவேங்கட நாத அரசன் மேல் பாடுகின்ற இசை பொருந்திய பிள்ளைத் தமிழைக் காக்க.

## குறிப்புரை

வடவரை-மந்தரமலை; தவளம்-வெண்மை; வெண்பொடி-திருநீறு; கொள்ளை-மிகுதி, கூட்டம், தண்டலை-சோலை; அதிபதி-தலைவன்; விம்பம்-வடிவம், கவளம்-யானைக்கு அளிக்கும் உணவு; மழ-இளமை, துரை-தலைவன்.

'பவளநெடுவரை......சுந்தரச் சடை முடிக் கடவுள்காக்க' எனும் பகுதி மாலையுவமையாக மிளிருகிறது. ஒரு பொருட்குப் பல உவமை வந்து அவை தம்முள் ஒன்று அடுத்ததுடன் இடைவிடாது தொடர்ச்சியுடையனவாக அமைந்து, இறுதியானது மீண்டும் முதலுவமையுடன் பொருந்தி மாலையாகி வருவது மாலையுவமையாகும். இங்குப் பவளமலையினை வெண்மையான துகில் மூடியுள்ளதுபோல் பனிப்படலம் விரிந்துள்ளது. இக்காட்சி சூரியனின் செல்கதியைத் தடுக்கும்படியாக உயர்ந்துள்ள வடவரையைப் பாற்கடல் சூழ்ந்துள்ளமையை ஒத்துள்ளது. இது சிவனின் முடிமேல் உள்ள மிகுந்த வெண்மையான பிறைச் சந்திரனிடமிருந்து அமுதகலை சுரந்து வழிவதை நிகர்க்கிறது. மற்றும் இது சுந்தரச் சடைமுடிக் கடவுளின் சிவந்த மேனியில் பூசியுள்ள வெண்பொடியின் அழகினைப் போன்றுள்ளது. இதில் இறுதியானது முதலாவதுடன் மீண்டும் ஒப்பமைந்து நிற்கக் காணலாம்.

தலைவனின் தாரும், ஊரும் மூன்றாம் அடியில் சிறப்பிக்கப் படுகின்றன. வண்டுகள் மாலையில் தேன் அருந்துவதை உழுவதாகச் சுட்டியிருப்பது கவி நயத்துடன் அமைந்துள்ளது.

### நம்மாழ்வார்

முத்திக்கு வழிதரும் தென்குருங் காபுரி
முதற்பரஞ் சுடர்நம்பிதாள்
முளரியிற் கைகூப்பி நங்கைப் பிராட்டிபன்
முறைவலங் கொண்டுமழலை
தித்திக்கு மென்மொழி மகப்பேறு நல்கெனத்
தென்குருகை நம்பியாகத்
திருவவதரித் துபய வேதாந்த நிலையிட்ட
திருமகிழப் பருதிகாக்கப்
புத்திக்கு யூகிசுப் பிரமணிய பூபதிசு
புத்திரன் விசித்ரரூபன்

பூசக்ர முழுதுந் தனிக்கொற்ற வெண்குடைப்
புதுநிழல் விரித்துநேமி
எத்திக் கினுந்தனது திருவாணை மேற்கொள்ள
இராசரீ கஞ்செய்யுமிந்
திராதிபதி திருவேங் கடநாத பூபாலன்
இசைபெற்ற செந்தமிழையே. 3

## பொழிப்பு

வீடுபேறு அடைதற்கு வழிகாட்டும் தென்குருங்காபுரியில் கோயில் கொண்டெழுந்தருளியுள்ள, மும்மூர்த்திகளிலும் முதல்வரான மேலான ஒளி வடிவாகிய திருமாலின் தாமரைத் திருவடிகளைக் கைகுவித்து வணங்கி, பன்முறை வலம்செய்து இனிக்கும் மழலையான மென் மொழிகளைப் பகரும் குழந்தைச் செல்வத்தைத் தருவாய் என நங்கைப் பிராட்டியார் வேண்ட, தென் குருகை நகரின் தலைவனாகத் திருவவதாரம் செய்து, இருமொழிகளிலும் வேதங்களின் முடிவினை உறுதி செய்த, சிறந்த மகிழம்பூ மாலை யணிந்த சூரியனான நம்மாழ்வார், புத்தியில் யூகியைப் போன்றவனும், சுப்பிரமணிய பூபதியின் நன்மகனும், பேரழகுடையவனும், இப்புவி முழுவதும் தன் வெண்கொற்றக் குடையின் ஒப்பற்ற சிறப்புடைய நிழலின் பாற்படுமாறு அதனை விரித்து, பூமியின் எத்திசையும் தனது திருவாணையை மேற்கொள்ளும்படி அரசு செய்யும் மேன்மைகட்கெல்லாம் தலைவனுமான திருவேங்கடநாத பூபாலனின் புகழைப்பாடும் செந்தமிழ்ப் பாவைக் காத்தருள்வாராக.

## குறிப்புரை

முத்தி-வீடுபேறு; நம்பி-கடவுள்; தாள்-திருவடி; முளரி-தாமரை; கைகூப்பி-கைகுவித்து வணங்கி; நங்கைப்பிராட்டி-உடைய நங்கைப் பிராட்டி; நம்மாழ்வாரின் தாயார்; மழலை-குழந்தைகளின் திருந்தாச்சொல்; உபயவேதாந்தம்-வடமொழி தென்மொழி வேதங்களின் முடிவு-நம்மாழ்வார் நான்கு வேதங்களின் சாரமாகத் தன் பாடல்களைப் பாடினார் என்பர். இருக்கு வேதச் சாரமாக திருவிருத்தத்தையும், யசூர் வேத சாரமாகத் திருவாசிரியத்தையும், சாமவேத சாரமாகத் திருவாய் மொழியையும், அதர்வணவேத சாரமாகத் திருவந்தாதியையும் குறிப்பிடுவர். இதனால் இவர் வேதம் தமிழ் செய்த மாறன் சடகோபன் எனப் போற்றப்படுகின்றார். மகிழம்-மகிழம்பூ

நம்மாழ்வார் மகிழமாலையுடையவராதலால் அவரை வகுளாபரணன் என்றும் அழைப்பதுண்டு; யூகி-பெருங்கதைத் தலைவனான உதயணனின் அமைச்சன்; சிறந்த அறிவுடையவன்; சூழ்ச்சி பலபுரிந்து அரசனைக்காத்தவன். சுபுத்திரன்-நன்மகன்; விசித்ரரூபன்-பேரழகுடையவன்; இராசரீகம்-அரசாட்சி, இந்திரம்-மேன்மை.

தலைவனின் அறிவும், ஆற்றலும் இங்குப் புனைந்துரைக்கப் பட்டுள்ளன. மகிழப்பருதி-உருவகம்; நம்மாழ்வாரும் திருமாலின் திருவடிகளை 'அடிச்சோதி நீ நின்ற தாமரையாய் அலர்ந்தது வோ?' எனச் சிறப்பித்துள்ளார்.

**நம்மாழ்வார் வரலாறு**

திருக்குருகூர் பதியில் காரியார் என்ற குறுநில மன்னர்க்கும் உடைய நங்கைக்கும் திருமகனாகத் தோன்றியவர் காரியார் வேளாண்மரபினர் என்றும் கூறுவர். திருக்குறுங்குடிப் பெருமானை இவர்கள் வழிபட்டுப் பிள்ளைவரம் வேண்ட அப் பெருமான் தானே புதல்வனாக மாறன் என்ற பெயரில் திருவவதாரம் செய்தார் என்பர். பிறந்ததிலிருந்து பால் உண்ணல், அழுதல், கண் விழித்தல் இன்றி இருந்தார். அது கண்டு தவித்த பெற்றோர், பன்னிரண்டாம் நாள் குழந்தையைத் தூநீராட்டி ஆதிநாதக் கோயிலுக்கு எடுத்துச் சென்றனர். கோயிலை அடைந்தவுடன் மாறனார் தவழ்ந்து சென்று பிரகாரத்தில் இருந்த புளிய மரத்தடியில் அமர்ந்து கொண்டார். அதுமுதல் பதினாறு வயதுவரை அவ்விடத்திலேயே மௌனியாக அமர்ந் திருந்தார்.

இந்நிலையில் வடநாட்டுக்கு யாத்திரை சென்றிருந்த மதுரகவி என்னும் அந்தணர் தென் திசையில் ஒரு பேரொளியைக் கண்டு அதனைப் பின்பற்றியே வந்து புளியமரப் பொந்துள் இருந்த மாறனாரைக் கண்டார். அவரைச் சோதிக்க, சில கேள்விகளைக் கேட்டார். அவர் கூறிய பதில்களைக் கேட்ட மதுரகவியார் அவரை மகா ஞானி என்றுணர்ந்தார். அந்த மகா ஞானியே நாளடைவில் திருவாய்மொழி, திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி ஆகிய திவ்வியப் பிரபந்தங் களை அருளிய நம்மாழ்வார். வேதம் தமிழ் செய்த வித்தகர். உலகுய்யத் தோன்றிய குருமூர்த்திகளுள் முதன்மையானவர். மதுரகவியாழ்வார் மாயவனைப் பாடாது நம்மாழ்வாரையே

பாடி மகிழ்ந்தார். இத்துணைப் பெருமை மிக்க நம்மாழ்வார் அவதரித்த பதியாதலால் இக்குருகூர், ஆழ்வார் திருநகரி என்றும் வழங்கப்படுகிறது.

## நான்முகன்

கடவா ரணத்தந்த முகமெய்த லாலுர
கமண்டலங் கைக்கொள்ளலாற்
கமலத் துதிக்கையாற் பாரத வளந்தந்த
கருணைமெய்க் கடவுளெனலாற்
றிடவாணி தழுவுமங் குசபாச மேவலாற்
செகதலத் தஞ்சமுறலாற்
தெய்வவல் லவையிடம நித்த கணபதியனைய
திசைமுகத் திறைபுரக்கக்
குடவா ரணத்திரளு குத்திலகு முத்தமுங்
கோட்டுவா ரணமுத்தமும்
கூட்டியலை வாரிச்சு ருட்டித் திரட்டியிரு
கோட்டு டொதுக்கிமீறு
மடவா ரெனப்பழகு பொருநா நதித்துறைவனை
வளமைதிகழ் குருகூரில்வாழ்
மகராச துரைதிருவேங் கடநாத பூபதியை
வாழ்த்துமென் கவிவளரவே. 4

### பொழிப்பு

மதம் வழிகின்ற தந்தத்தினையுடைய யானையின் முகத்தினைப்பெற்று, ஞானமாகிய கமண்டலத்தைக் கையில் தாங்கி, தாமரை போன்ற துதிக்கை கொண்ட, மாபாரதக் கதையைத் திடமான தந்தமாகிய ஆணியால் எழுதிய அருளுடை உண்மைக் கடவுள் எனச் சிறப்புடைய, அங்குசம் பாசம் இவற்றை ஏவி அசுரனை அழித்த, இவ்வுலகம் தஞ்சம் எனச் சரணடைகின்ற தெய்வத் தன்மை நிரம்பிய வல்லவையை இடப்பக்கத்தில் கொண்ட கணபதியை ஒத்த நான்முகன் வளைந்த சங்குகளின் கூட்டம் உதிர்க்கின்ற பளபளப்பான முத்துகளையும், தந்தங்களையுடைய களிறுகளின் முத்துகளையும் அலைகளால் ஒருங்கு சேர்த்து திரட்டி, வாரிச்சுருட்டித் தன்கரைகளில் ஒதுக்கி மேற்செல்கின்ற, மங்கையர் போல் உறவாடுகின்ற பொருநைநதி பாயும் வளமை நிறைந்த குருகூரில் வாழும் மகராசதுரை திருவேங்கடநாத பூபதியை வாழ்த்தும் என் கவி வளரக் காக்க.

## குறிப்புரை

கடம்—யானைமதம்; வாரணம்-யானை; உரம்-ஞானம்; பாரதம்-மாபாரதக் கதை; அங்குசபாசம்-விநாயகர் கையில் உள்ள பாசம், அங்குசம் எனும் படைக்கலங்கள்; சிந்து எனும் அசுரனை வதைக்க விசவபிரமா இவற்றைப் படைத்து விநாய கருக்கு அளித்தான். செகதலந்தஞ்சம்-செகதலத்தஞ்சம்; திசை முகன்—நான்முகன், குடவாரணம்-வளைந்த சங்கு. இலகு-பள பளப்பான; உகு-பிறப்பிக்கின்ற; கோட்டு வாரணம்-தந்தங்களை உடைய யானை; மீறு-மேற்செல்கின்ற.

இப்பாடலில் விநாயகருக்கும் நான்முகனுக்கும் சிலேடை அமைந்துள்ளது. வேதத்தை மொழிந்த முகம் கொண்டவன், கமண்டலத்தைக் கையில் ஏந்தியவன், திருமாலின் உந்திக் கமலத்தில் உதித்தவன், மாபாரதம் படைத்த அருளுடைக் கடவுளானவன், (வியாசரைப் பிரம்மாவின் அவதாரமாகச் சொல்வதுண்டு) கலைவாணி தழுவும் சீர் பெற்றவன்; அழகிய தருப்பைப் புல்லினைப் பற்றியுள்ளவன்; பூமியைப் படைத்தவன் என நான்முகனுக்குப் பொருந்தக் காணலாம். தலைவன் நாட்டின் நீர்வளம் பொருநை நதியின் வழிச் சிறப்பிக்கப் பட்டுள்ளது. 'பொன் திணிந்த புனல் பெருகும் பொருநை எனும் திருநதி' (4476) எனக் கம்பனும் இவ்வாற்றினைச் சிறப்பித்துள்ளான்.

#### விநாயகர் பாரதம் எழுதியது

பாரதக் கதையை உலகிலே நிலைநிறுத்த வேண்டும் என்று வியாசர் எண்ணினார். எழுதுவோர் கிடைத்தால் எழுதி விடலாம் என முடிவு செய்தார். பிறகு ஆனைமுகக் கடவுளைக் கண்டு தம்முடைய விருப்பினைத் தெரிவித்தார். ஆனைமுகக் கடவுளும் வியாசருடைய வேண்டுகோளுக்கு இணங்கினார். வியாசர் பாரதக் கதையைக் கூறிக்கொண்டிருந்தால் தாம் எழுதி விடுவதாக ஒப்புக் கொண்டு, போர்க்களத்தில் முறிந்துபோன தம்முடைய தந்தத்தை எழுத்தாணியாகவும், மேரு மலையை எழுதும் ஏடாகவும் கொண்டு பாரதத்தை எழுதி முடித்தார்.

நீடாழி உலகத்து மறைநாலொடு
ஐந்தென்று நிலை நிற்கவே
வாடாத தவவாய்மை முனிராசன்
மாபாரதம் சொன்ன நாள்

ஏடாக மாமேரு வெற்பாக
வங்கூ ரெழுத்தாணிதன்
கோடாக எழுதும் பிரானைப்ப
ணிந்தன்பு கூர்வாமரோ.

எனப் பாரதம் நவிலும்.

**கடவாரண முகம் பெற்றது**

திருக்கயிலாய மலையில் ஏழு கோடி மந்திரங்கள் அடங்கிய மந்திர சித்திர மண்டபம் இருந்தது. அங்குப் பார்வதியும் பரமசிவனும் எழுந்தருளினார்கள். ஏழு கோடி மந்திரங்களுக்கு நடுவே சமஷ்டிப் பிரணவம், வியஷ்டிப் பிரணவம் என்ற இரு பிரணவங்கள் ஒளி செய்து கொண்டிருந்தன. அந்த இரு பிரணவ மந்திரங்களைச் சிவமும் சக்தியும் திருக்கண்சாத்தி அருளினார்கள். அக்காலையில் அப்பிரணவங்களிலிருந்து பிரணவாகார யானை முகத்துடன் பிள்ளையார் அவதரித் தருளினார்.

**வல்லபையை மணந்தது**

மரீசி முனிவர் தவமிருந்து விநாயகரிடம், அவரின் சக்தியே தனக்கு மகளாகப் பிறந்து பின் அவரே மணம் புரிந்து திருவருள் புரியவேண்டும் எனக் கேட்டு, அவ்வரமும் பெற்றார். ஓர் நாள் அம் முனிவர் நீராடச் சென்ற பொழுது தடாகத்தில் இருந்த தாமரை மலர் ஒன்றில் விநாயகரின் சக்தி குழந்தையாக உருக் கொண்டிருந்தது. முனிவர் அக்குழந்தையை எடுத்துக் கொண்டு வந்து தம்முடைய மனைவியாகிய தேவவல்லியிடம் கொடுத்து வளர்த்தார். வல்லபை என்று பெயரிட்டார். இவள் வளர்ந்து தவம் செய்து கொண்டிருந்த பொழுது ஆனைமுகக் கடவுள் அந்தணர் வடிவங் கொண்டு வந்து தவத்தைக் கலைக்க முயற்சித்து தோல்வியடைந்தார். பின் விநாயகர் தன் உண்மை உருவைக் காட்டித் திருமணம் செய்து கொண்டு வல்லபை கணேசர் எனப் பெயர் பெற்றார்.

## இந்திரன் முதலானோர்

நெடியமுழு வயிரப்ப டைக்குலிச னுங்கலை
நிலாவுமா காளியருநேர்
நிதியரசும் வேலவனும் வயிரவனு மைங்கரனும்
நித்யமுக் கட்கடவுளுங்

சுடியவிடை யாளர்பதி னொருவருஞ் சாத்தனுங்
கதிரவர்கள் பன்னிருவரும்
கருடனுந் திருமகளும் நாமகளும் உமையுமெழு
கன்னியரு மினிதுகாக்க
சுடிகையணி முடியரசர் கவிகையுஞ் சிவிகையுஞ்
சுற்றுகற் றைக்கவரியும்
சூழிவா ரணமுமிகு கொய்யுளைப் புரவியுஞ்
சூழவெதி ரிடுமடையலார்
கெடிபுகச் செகமுழுதும் வாழ்வித்து நீளுமெழிற்
கேதன முயர்த்தராசன்
கிளைபுகழ் வருதிரு வேங்கட நாதனன்புறக்
கேட்குமின் சொற்கவியையே. 5

## பொழிப்பு

நீண்ட வச்சிராயுதப் படையை உடைய இந்திரனும், கலையை ஒத்த மாகாளியரும், எல்லையில்லாச் செல்வத்திற்கு அதிபதியான குபேரனும், வேலவனும், வயிரவனும், கணபதியும், அழிவில்லாதவனாகிய முக்கண்களையுடைய சிவனும், விரைந்து செல்லும் ஆனேற்றினராகிய (அல்லது விடையளிப்போர் எனப் பாராட்டப் பெறும்) உருத்திரர் பதினொருவரும், சாத்தனும், கதிரவர்கள் பன்னிருவரும், கருடனும், திருமகளும், நாமகளும், உமையும், எழுகன்னியரும் காக்க, மகுடம் அணிந்த முடியரசர் தம் வெண்கொற்ற குடைகளும், பல்லக்குகளும், திரண்ட சாமரங்களும், முகபடாம் அணிந்த யானைகளும், மிகுந்த பிடரி மயிரினை உடைய குதிரைகளும் சூழ, மாறுபடுகின்ற பகைவர்களின் கோட்டையுள்ளும் தன் அதிகாரம் செல்ல, புவிமுழுவதையும் வாழ்வித்து நீண்ட அழகிய தன் கொடியை உயர்த்திய ராசன், சுற்றத்தோர் புகழ வருகின்ற திருவேங்கட நாதன் அன்புடன் கேட்கும் இனிய சொற்களால் ஆகிய இப்பிள்ளைத் தமிழை நன்றாகக் காக்க.

## குறிப்புரை

வயிரப்படை-வச்சிராயுதம்; குலிசன்-இந்திரன், நிலாவு-ஒப்பாகு; மாகாளியர்-சிவகணங்களுள் ஒருவர்; நேர்-மிகுதி; நிதியரசு-குபேரன்; வயிரவன்-தாருகாசுரனைக் கொன்ற சக்தியின் சினத்தீயினின்றும் தோன்றியவன்; ஐங்கரன்-கணபதி;

நித்யம்-அழிவில்லாதது; பதினொருவர்-உருத்திரர் (மாதேவன், அரன், உருத்திரன், சங்கரன், நீலலோகிதன், ஈசானன், விசயன், வீமதேவன், பவோற்பவன்; கபாலி, சௌமியன்) கதிரவர்கள் பன்னிருவர்-ஆதித்தர் பன்னிருவர் (வைகத்தன், வவச்சுதன், வாசன், மார்த்தாண்டன், பாற்கரன், இரவி, உலோகப் பிரகாசன், உலோககாட்சி, திரிவிக்கிரமன், ஆதித்தன், திவாகரன், அங்கிசமாலி) எழுகன்னியர்-சப்த மாதர்கள் (பிரமாணி, நாராயணி, மாயேசுரி, கௌமாரி, வராகி, உருத்திராணி, இந்திராணி) சுடிகை-மகுடம்; கவிகை-குடை; சிவிகை-பல்லக்கு; கவரி-சாமரம், சூழி-யானையின் முகபடாம்; வாரணம்-யானை; கொய்யுளை-கத்தரிக்கப்பட்டுள்ள குதிரையின் பிடரிமயிர்; புரவி-குதிரை; எதிரிடு-மாறுபடு, எதிர்த்தல், அடையலார்-பகைவர்; கெடி-கோட்டை, ஊர், அதிகாரம், கேதனம்-கொடி.

தலைவனின் வீரம் இப்பாடலில் புகழப்படுகிறது. மரபு கருதி காப்பாகப் பிள்ளைத்தமிழில் காட்ட வேண்டிய தெய்வங்கள் பலவற்றை இவண் ஒருங்கிணைத்துப் பாடியுள்ளார் எனலாம்.

## கருடாழ்வார்

காவித் தடங்கட் கடைப்புருவ மான்வினதை
கத்துரு வமைத்தசாப
காதையை முடிப்பதற் கமுதகல சத்தைக்
கணப்பொழுதினிற் கொணர்வதாய்த்
தாவிப் புடைத்துச் சினத்தெதிர்த் தோங்குமைந்
தருத்தலை வனைச்செயித்தோன்
சதுமறைப் பொருளான நாகா சனக்கடவுள்
சந்தத மகிழ்ந்துகாக்கச்
சேவிக்க வாழ்வித்த சடகோப னைப்புதிய
சேடப் புளிக்குள்வாழுந்
திருஞான முத்திரைக் கைத்தலத் தழகொழுகு
சீபராங் குசமுனிவனைத்
தூவிப் புலன்சிறைச் சூட்டெகின வாகனச்
சுடரடித் துணைபரவுவோன்
சுவையமிர்த மொழிபழகு துரைதிருவேங் கடநாத
துங்கன்முத் தமிழ்திகழவே. 6

## பொழிப்பு

கருங்குவளை போன்ற பெரிய கண்களையும் அவற்றின் கடைப்பகுதிவரை புருவங்களையும் கண்களையும் உடைய வினதைக்குக் கத்துரு கொடுத்த சாபத்தை முடிப்பதற்காக, (அடிமைத் தளையை நீக்குவதற்காக) அமுதகலசத்தைக் கணப் பொழுதினிற் கொண்டு வரத் தாவிப்புடைத்துச் செல்லுங்கால் எதிர்த்த ஐந்து மரங்களின் தலைவனான இந்திரனைக் கோபத்துடன் எதிர்த்து வெற்றி கண்ட, நான்மறைப் பொருளான நாகத்தினை உணவாகக் கொண்ட கருடக்கடவுள், தன்னை வணங்குபவர்களை வாழ்வித்த சடகோபரை, புதிய சேடனாகிய புளியமரத்துக்குள் திருஞான முத்திரையைத் தன் கைகளில் கொண்டு அழகு மிகும்படி வீற்றிருக்கின்ற சீபராங்குச முனிவனைப் பரவி; சிறகுகளையும், உச்சிக் கொண்டையினையும் உடைய அன்னப்பறவையை வாகனமாகக் கொண்ட, ஒளிவிடுகின்ற இணையடிகளை உடைய பிரமனின் துணையாகிய கலைமகளை வணங்குவோராகிய, அமிர்தம் போன்று இனிய மொழியையே பேசும் துரை திருவேங்கடநாததுங்கன்மீது பாடப்படும் முத்தமிழ் சிறக்க எப்பொழுதும் மகிழ்ந்து காக்க.

## குறிப்புரை

காவி-கருங்குவளை, தடங்கண்-குளிர்ந்தகண், வினதை-கருடனின் தாய்; கத்துரு-காசியப்ப முனிவர் மனைவி; சாபம்-தவமுடையார் கூறும் வசைமொழி; ஐந்தரு-இந்திரன் உலகில் உள்ள ஐந்து மரங்கள் (அரிச்சந்தனம், கற்பகம், சந்தானம் பாரிசாதம், மந்தாரம்) தலைவன்-இந்திரன், செயித்தோன்-வென்றோன்; சதுமறை-நான்குவேதம், நாகாசனக்கடவுள்-பாம்பினை உணவாக உடைய கடவுள், சந்ததம்-எப்பொழுதும். சேவிக்க-வணங்க; சடகோபன்-நம்மாழ்வார் (அவதரித்ததுமே சடம் எனும் வாயுவை முனிந்ததால் இப்பெயர் பெற்றார்) சேடன்-ஆதிசேடன், புளி-புளிய மரம்; திருஞானமுத்திரை-செங்கரம் உயர்த்தி நற்சின் முத்திரை காட்டுதல், சீபராங்குச முனிவர்-நம்மாழ்வார்.

தலைவனின் சொற்சிறப்புடன் நம்மாழ்வாரின் மேன்மையும் இவண் காட்டப்படுகிறது. திருமால் பள்ளி கொள்வது சேடன் மீது ஆதலால், அவனது அடியாரான நம்மாழ்வார் முழுநேரமும் தன் உறைவிடமாகக் கொண்ட புளிய மரத்தினைப் புதிய சேடன் என இவர் சிறப்பிக்கின்றார் எனக் கொள்ளலாம். நம்மாழ்வாரின் வாகனமாக அன்னப்பறவையைக் கொள்ளும் வழக்கிருப்பதால் (அன்ன வாகனக் கதிரவர்-சடகோபர்; திருக்குருகூர்த் திருப்பணி

மாலை பாடல் 72) இங்குச் சூட்டெடகின வாகனச் சுடரடியாளர் என்பது அவரைக் குறிப்பதாகவும் கொள்ளலாம்.

**நம்மாழ்வார் புளியமரம்**

இது திருக்குருகூரில் ஆதிநாதர் ஆழ்வார் கோயிலுக்குள்ளிருக்கிறது. வெளிப் பார்வைக்கு மூன்று மரம்போல் காணப்பட்டாலும் ஒரே மரந்தான். இம்மரத்தின் அடியில் நம்மாழ்வார் அமர்ந்து முப்பத்திரண்டு ஆண்டுகள் தவம் செய்து வீடு பேற்றையடைந்தார். இம்மரத்தின் அடியில் நம்மாழ்வார் தம்முடைய மாணவர் பலருக்கு அறிவுரை வழங்கினார். இம்மரம் மற்றைய மரங்களைப் போல் பூப்பதும் காய்ப்பதும் தவிரப் பழுப்பதேயில்லை. மேலும் அம்மரத்தின் எப்பக்கத்தையேனும் தீயிற் படும்படியாகச் செய்தால், உடனே அம்மரம் முழுவதும், மனிதர்களுடைய உடலில் கொப்பளங்கள் உண்டாவதைப் போல உண்டாகி ஒருவகையான கெட்ட மணத்தோடு சிவப்பும் வெண்மையுமான நிறத்தோடு கூடிய தண்ணீர் வடிவதுண்டு. இதற்குச் சந்தனம் அரைத்து அப்பினால் உடனே நின்று போகும். இம்மரத்தின் வயிரமாகவும் காய்ந்துபோயும் இருக்கிற ஒரு துண்டைச் சுத்த மனதுடன் தண்ணீர் விட்டரைத்துக் கொட்டைப் பாக்களவு உட்கொண்டால் எல்லா வகையான நோய்களும் குணமாகி விடும் என்பர். இம்மரம் வழிபடப்பெற்று வருகிறது. இம்மரம் ஆதிசேடனுடைய கூறுஎனவும், இலட்சுமணரே இவ்வாறு மரமாக இருக்கிறார் எனவும் கூறுவர்.

**கத்துரு சாப கதை**

காசிப முனிவருடைய மனைவியர்களுக்குள்ளே கத்திரு என்பவள் அநந்தன் முதலிய பாம்புகளைப் பெற்றாள். வினதை என்பவள் கருடன், அருணன் என்னும் இருவரைப் பெற்றாள். ஒரு நாள் வினதை, கத்துரு இருவரும் ஓரிடத்திலே அமர்ந்திருந்தார்கள். அப்பொழுது அங்கே சிறிது தொலைவில் இந்திரனுடைய உச்சைச்சிரவம் என்னும் குதிரை வந்தது. அக்குதிரையின் வாலைக் கத்துரு பார்த்துக் கருமை என்றாள். வினதை வெண்மை என்றாள். இவ்வாறு இருவரும் மாறுபட்டார்கள். எவளுடைய சொல் மெய்ம்மையாகுமோ அவளுக்கு மற்றவள் அடிமையாவது என்று ஓர் ஏற்பாடு செய்துகொண்டனர். பிறகு கத்துரு தன் மகனாகிய கார்க்கோடன் என்னும் பாம்பினால் அவ்வாலைச் சுற்றிக் கருமையாகக் குவித்துக் காண்பித்தாள். இவ்வாறு வினதையைத் தனக்கு அடிமையாக்கினாள். பிறகு கருடன் அமுதம் கொண்டு வந்து கத்துருவின் பிள்ளைகளுக்குக் கொடுத்துத் தாயின் அடிமையைப் போக்கினான்.

'அணைவிடர் தீர்த்தான் கருடன்' (ஆத்திசூடி வெண்பா) என்று புகழப் பெற்றான்.

கருடன் இந்திரனை வென்ற கதை

தாயின் அடிமை நீக்கத் தெய்வ உலகம் சென்று அமுத கலசத்தை எடுக்கையில் இந்திரன் கோபித்துக் கருடன்மேல் வச்சிரம் எறிந்தான். அதைக் கண்ட கருடன் வச்சிரத்திற்கு மரியாதையாக ஓரிறகு கொடுத்தான். இதனால் இந்திரன் களித்து நட்புக் கொள்ளக் கருடன் இந்திரனை நோக்கிச் சிறிய தாயின் சொற்படி இதனைக் கொண்டு போய் நாகருக்குக் கொடுக்கின்றேன். நீ கவர்ந்து கொள் என்றான். இதனால் இந்திரன் இவனுக்குப் பாம்புகளைத் தின்னும் வரம் அளித்தான்.

## வானமாமலை முனிவர்

அட்டகுல பர்வதத் திற்சிறப் பானபொன்
னசலமக மேருவென்ன
அணிதிகழ் வலம்புரித் திரளடர் சலஞ்சலம்
அரசுபெற் றொளிர்வதென்ன
வட்டமல ராளபல மலர்நடுச் செங்கமலம்
வாய்த்ததென வருள்மீறுசீ
வரமங்கை நகர்வாழு வானமா மலைமுனிவன்
மலரடி வணக்கமுறுவாம்
கட்டழகு பெற்றசுப் பிரமணிய பூபனருள்
கன்னாவ தாரதீரன்
கனகமழை மாரிபொழி மீனாட்சி நாதமால்
கருணைபெறு நரவாகனன்
இட்டமுற வளர்சாமி நாதமனு குலபோசன்
இவர்சகோ தரவசீரன்
இசைமருவு துரைதிருவேங் கடநாத பூபாலன்
இன்புற்ற தமிழ்தழையவே. 7

## பொழிப்பு

எட்டு மலைத் தொகுதியுள் பொன்மலையெனத் திகழும் பெரிய மேருமலை சிறப்புப் பெற்றிருப்பது போன்றும், அழகு பெற்ற வலம்புரிச் சங்குகளின் கூட்டத்துள் சலஞ்சலம் தலைமை பெற்று ஒளிர்வது போன்றும், வட்டமான அமைப்புப் பெற்ற பல மலர்களுக்கிடை செந்தாமரை மலர் அமைந்துள்ளது போன்றும் சிறப்புப்பெற்றுள்ள அருள் நிறைந்த நாங்குனேரி நகர்

வாழுகின்ற வானமாமலை முனிவனின் மலரடிகளை, கட்டழகு பெற்ற சுப்பிரமணிய பூபன் அருளிய கன்னாவதார தீரனும், மழைபோல் பொன்மழை பொழிகின்ற மீனாட்சி நாத வேளின் அன்பு நிறைந்த குபரேனும், மனுகுலத்திற்குரியவனான புகழுடன் வளர்கின்ற சாமிநாத வேளின் சகோதரனும், பிறராலும் விரும்பப்படுபவனும் ஆகிய புகழ் செறிந்த துரை திருவேங்கடநாத பூபாலன் இன்புற்ற தமிழ் தழைய வேண்டி வணங்குவோம்.

## குறிப்புரை

அட்டகுல பர்வதம்—கைலை, இமயம், மந்தரம், விந்தம், நிடதம், ஏமகூடம், நீலகிரி, கந்தமானம் எனும் எட்டு மலைகள்; அசலம்-மலை, சலஞ்சலம்-ஆயிரம் வலம்புரிச் சங்குகள் சூழ்ந்த பெரிய சங்கு; மீறு-மிகுதி; சீவரமங்கை- நாங்குனேரி-இவ்விடம் வானமாமலை என்றும் சிரீவரமங்கலம் என்றும் போற்றப்படும். இப்பதியில் நான்கு ஏரிகள் சூழ்ந்திருந்ததால் நாங்குநேரி; என்ற பெயர் உண்டாயிற்று. ஏரிக்கரையில் உள்ள பெருமாளை, நம்மாழ்வார் 'வானமாமலை' எனப் போற்றியதால் வான மாமலை என்றும், நாச்சியாரின் பெயரால் சிரீவர மங்கலம், சீவரமங்கை என்றும் அழைக்கப்படுகிறது. நம்மாழ்வார் சிரீவர மங்கலம் என்றும், திவ்வியக்கவிப்பிள்ளைப் பெருமாள் ஐயங்கார் 'சீவரமங்கை' என்றும் குறிப்பிட்டுப் போற்றியுள்ளார். வான மாமலை முனிவன்-வானமாமலை ஜீயர்; வானமாமலையில் உள்ள வைணவ மடத்தின் ஆச்சாரியார். இவர் தென்கலையினர். இம்மடத்திற்குத் தோததிரி மடம் என்றும் பெயர்வழங்கப்படு கிறது. கன்னாவதாரம்-கொடையிற் சிறந்த கர்ணனது அவ தாரம். கர்ணன் என்ற வடசொல் தமிழில் கன்னன் என வரும். வில்லி பாரதத்தில் காண்க. நரவாகனன்-குபேரன். வசீரன்-பிறரைத் தன்பால் ஈர்ப்பவன்.

இந்நூலாசிரியர் பாட்டுடைத் தலைவனைத் திருமாலாகவே காண்பதால் திருமாலின் அருளிச் செயல்களையும் அவனுக்கு ஏற்றியுரைக்கின்றார். இப்பாடலில் புலவர் பல்பொருளுவமை அமைத்துச் சிறப்பித்துள்ளார். ஒரு பொருளுக்குப் பல உவமை களைக் கூறுவது பல்பொருளுவமையாகும். இங்கு நான்குனேரி நகருக்கு மூன்று உவமைகளை அளித்துப்பெருமைப்படுத்துகிறார்.

சாமிநாதன் தலைவனின் பின் பிறந்தோன் என்பதனை,
'மன்னு
மருத்துன் றியதார்ச் சுவாமிநா தேந்திரன்
திருத்தமையன் என்ன வந்த செல்வன்–பெருத்தநிலைக்
கற்றான்பெண் ணாக மலர்க் காலாலு ருக்காட்டக்
கற்றான் திருவேங்கட நாதன்'

எனும் 'திருவேங்கட நாதன் வண்டுவிடு தூது' மூலமும் உணரலாம்.

## 2. செங்கீரைப் பருவம்

வள்ளமதி வட்டம் பரந்தனைய தேனிறால்
மடைதிறந் தருவிசொரியும்
மதுகரச் செழுந்தேறல் ஈற்றிளம் பேடைவாய்
மடுப்பத் துதைந்துகொள்ளைப்
பிள்ளைவரி வண்டுண்டு மிச்சிலுறு முச்சிவான்
பெருவெளியி னகடுகீறிப்
பின்னலிடு நெட்டிலைத் தீங்கரும் புடைதொறும்
பிழியும் செழுஞ்சாறுகூன்
பள்ளநிறை தாழியிற் கோதுபடு நாவினுனி
பருகக் கனிந்தூறுதீம்
பாற்குழம் பனலிடைக் கொதித்தெழு மதர்தலாற்
பலகலைக் கடல்கடைந்த
தெள்ளமுத முத்தமிழ் கனிந்தொழுகு மழலையஞ்
செங்கீரை யாடியருளே
திருமருவு துரைதிருவேங் கடநாத பூபால
செங்கீரை ஆடியருளே. 8

### பொழிப்பு

குளிர்ந்த முழுமதியின் வட்டம் போன்று பரந்து விரிந்துள்ள தேனடைகளின் கண் திறந்து அதன் வழி அருவியாக ஒழுகுகின்ற செழுமையான தேறலை ஆண்வண்டு ஈன்றணிமை உடைய பேடைக்கு ஊட்ட அதன் மிகுதியைப் பிள்ளைவரி வண்டுக் கூட்டம் உண்ண எஞ்சும் மிச்சிலும், உச்சிவான் வரை எழும்பி ஆகாயத்தின் வயிற்றைக் கீறும் படியாக வளர்ந்துள்ள, ஒன்றோடொன்று பின்னியுள்ள நீண்ட இலைகளை உடைய கரும்புகள் மோதி உடைய அதனின்றும் வழிந்தோடும் செழுஞ் சாறும், அங்கு அமைந்துள்ள கூன் பள்ளத்தில் உள்ள தாழியில் நிறைய, அவ் இன்சுவைப் பாற்குழம்பினை வடிகட்டி, கோது நீக்கி அனலிடைக் காய்ச்ச, அதன் சுவை மேலும் அதிகரிப்பது போன்று இனிய பலகலைகளாகிய கடல்களைக் கடைந்து எடுத்த தெளிந்த அமிர்தமாகிய முத்தமிழ் கனிந்து ஒழுகுகின்ற மழலைச் சொல்லுடையவனே செங்கீரை யாடியருள். திருமகள் தழுவும் துரை திருவேங்கடநாத பூபாலனே செங்கீரையாடியருள்.

## குறிப்புரை

வள்ளம்-குளிர்ந்த; மடை-தொடை; மதுகரம்-ஆண் வண்டு; பேடை-பறவையின் பெண்பால்; மடுப்ப-ஊட்ட; துதை-மிகுதி; கொள்ளை-கூட்டம்; உறும்-எழும்பும்; பெருவெளி-ஆகாயம்; அகடு-வயிறு; நெட்டிலை -நீண்ட இலை; தாழி-வாயகன்ற சட்டி; கோது-சக்கை; அதர்தல்-முறைமை.

புலவரின் மொழிப்பற்றும், கற்பனை நயமும் இப்பாடலில் புலப்படுகின்றன. தலைவனின் வாய்மொழி மிக அழகாக உயர்வு நவிற்சிபடக் காட்டப்பட்டிருப்பது சிறப்பு.

2. புவிக்குந் திசைக்குந் திசைப்பரப் பேந்திய
பொலன்சிகர வடவரைக்கும்
புகழ்ப்படா மேறிட்டு மாறிட்ட வெங்கலிப்
புலிவலிதொ லைத்துவேந்தர்
குவிக்குஞ் சுடர்க்கனக மகுடநிரை படியநிறை
கொலுவீற் றிருக்குமெங்கோன்
கோலா கலப்பிரபல யோகமக ராசன்வண்
குருகா புரிக்குவேந்தன்
கவிக்குந் தனிக்கொற்ற வெண்குடை நிழற்றவளர்
கங்கா குலத்துதித்தோன்
கவிகற்ற வாணரிசை பெறுசுப்பிர மணியமார்க்
கண்டன்மகிழ் கொண்டுகேட்கச்
செவிக்குங் கருத்துக்கு மின்பரசம் விளையநீ
செங்கிரை யாடியருளே
திருமருவு துரைதிருவேங் கடநாத பூபால
செங்கிரை யாடியருளே. 9

## பொழிப்பு

புவனம் முழுவதிலும், எண் திசைகளிலும், பொன்போன்று மிளிரும் மலையுச்சியை யுடைய திசைப்பரப்புகளைக் காணும்படி உயர்ந்த வடவரையிலும் பிறர் புகழும் படியாகத் தன் பெரிய கொடியினை உயர்த்தியவன். பகைமை கொண்ட கடுமையான வறுமையாகியபுலியின்வலியைஅழித்து,மாற்றரசர்கள்குவிக்கின்ற சுடர் ஒளி வீசும் பொன் மகுடங்களின் வரிசைபடியச் சிறப்புடன் வீற்றிருக்கும், எம் தலைவன் ஆடம்பரம், புகழ், வல்லமை, அதிட்டம் நிறைந்த மகாராசனாவான். வளம் நிறைந்த குருகாபுரிக்கு அரசனாவான். புவி முழுதும் தன்னுள் அடங்கும் படி வளைத்து நிழல் செய்யும் ஒப்பற்ற வெண் கொற்றக் குடையையுடைய வளர்கின்ற கங்கை குலத்து உதித்தவன்.

இத்தகு சிறப்புப் பெற்ற கவிபாடுவதில் வல்லமை பெற்ற புலவர்களின் பாராட்டுதல் பெறுகின்ற சுப்பிரமணிய மார்க் கண்டன் மகிழ்வுடன் கேட்க, செவிக்கும் கருத்திற்கும் இனிய சுவை விளையும்படி செங்கீரை ஆடியருள். செல்வம் நிறைந்த துரை திரு வேங்கடநாத பூபாலனே செங்கீரையாடியருள்.

## குறிப்புரை

சிகரம்-மலையுச்சி; படாம்-பெரிய கொடி; ஏறிட்டு-உயர்த்தி; மாறிட்ட-பகைமை கொண்ட; வெம்-கடுமை; கலி-வறுமை; நிரை-வரிசை; நிறை-மாட்சிமை; கோலாகலம்-ஆடம்பரம்; பிரபலம்-புகழ்; யோகம்-அதிட்டம்; கவித்தல்-வளைந்து மூடுதல்; கங்காகுலம்-வேளாளர் குலம்.

மூவேந்தர்களின் வீரத்தினைச் சிறப்பிக்க இமயத்தில் தம் கொடியினை ஏற்றியதாக இலக்கியங்கள் நவில்வதைக்கொண்டு தன் தலைவனை அதனால் சிறப்பிக்கிறார் எனலாம். 'மலிதிரை யூர்ந்துதன் மண்கடல் வௌவலின் மெலிவின்றி மேற்சென்று மேவார் நாடிடம்படப் புலியொடு வின்னீக்கிப் புகழ் பொறித்த கிளர் கெண்டை, வலியினான் வணக்கிய வாடாச்சீர்த் தென்னவன்'-கலி-104; 'இமையவர் உறையும் சிமையப்பிடர்த்தலைக் கொடுவரியொற்றிக் கொள்கையின் பெயர் வோற்கு' –சிலம்பு 5:96-97; 'விற்றலைக் கொண்ட வியன்பேரிமயத்து'-சிலம்பு 25:118.

### கங்காகுலம்

சிவபிரானுடைய சடைமுடியில் விளங்கும் கங்கையில் சிவபிரானுடைய திருவருளால் வேளாளர்கள் தோன்றினார்கள். அவர்களுக்குத் திருமாலின் திருவடிக் கங்கையில் தோன்றிய பெண்களைச் சிவபெருமான் கட்டளைப்படி தேவர்கள் அனைவரும் கூடித் திருமணம் செய்து வைத்தார்கள். நிலவுலகில் பயிர்த்தொழில் செய்து உயிர்த்தொகைகள் எல்லாவற்றையும் காப்பாற்றுமாறு வாழ்த்துரை வழங்கி அவர்கட்கு வேளாளர் எனவும், பூபாலர் எனவும், கங்கைகுலம் எனவும் பெயர் கொடுத்து அனுப்பினார்கள். அவர்கள் நாற்பத்தெண்ணாயிரம் முனிவர்களுடைய அடிகளில் பணிந்தபோது தங்கள் தங்கள் பெயரை அவரவர்களுடைய கோத்திரமாகப் பின்பற்றுமாறு வரம் கொடுத்தார்கள். பிறகு போதாயன முனிவரைப் பணிந்த போது அவர் தம்மாற் செய்த நூல்களைப் பின்பற்றிநடக்குமாறு இவர்களுக்கு அருள் செய்தார். அதனால் இவர்கள் போதாயன சூத்திரமும் உடையவர்களானார்கள்.

3. ஆறாடு கங்கைகுல வங்கிசபதி யிவனென்ன
அனைவருங் கொண்டாடநீள்
அணிமகர குண்டலக் குழையூச லாடவெய
ராடவரை மார்பில்முத்தம்
மாறாட வணிரெத்தின மாலிகை துவண்டாட
வச்சிரமணி மாலையாட
வாணுதலில் மரகதச் சுட்டிபொற் பட்டமேல்
வானொளி பரப்பியாட
வீறாடு தோரணத் தெருவீதி யிற்புழுதி
விளையாடி நெடியபச்சை
மேனியும் தொந்தியும் பண்டியு மசைந்தாட
வேதித்த வாசசந்தச்
சேறாடு மருமமிசை திருமங்கை யாடநீ
செங்கீரை யாடியருளே
செகமுழுது மரசசெய வருதிருவேங் கடநாத
செங்கீரை யாடியருளே. 10

## பொழிப்பு

பிற ஆறுகளை வெற்றி கொள்கின்ற கங்கைகுலத்தின் தலைவன் இவன் என அனைவரும் சிறப்பித்துக் கொண்டாட, பெருமை வாய்ந்த அழகிய மகர குண்டலக்குழை ஊசலாட, மெய்யில் வியர்வை சிந்த, மலை போன்ற மார்பில் முத்துமாலை மாறிமாறி ஆட, அழகுபடுத்தப்பட்ட நிரம்பிய அழகியரெத்தின மாலை துவண்டாட, வச்சிர மணிமாலையாட, ஒளிபொருந்திய நெற்றியின் மரகதச்சுட்டி பொற்பட்டமேல் வான் ஒளி பரப்பி ஆட, விளக்கமாக அசையும் தோரணம் கட்டப்பட்ட தெருவீதி யில் புழுதியில் விளையாடி, நெடிய பச்சை நிறமான மேனியும், தொந்தியும் வயிறும் அசைந்து ஆட, தீற்றிய மணமுடைய சந்தனச் சேறாடுகின்ற மார்பில் திருமங்கையாட நீ செங்கீரை யாடி யருள்க. புவிமுழுதும் அரசு செய்ய வந்துள்ள திருவேங்கட நாதனே செங்கீரையாடி யருள்க.

## குறிப்புரை

ஆறாடுதல்-பிற ஆறுகளை வெற்றிகொள்ளுதல்; ஆடு-முதல் நீண்ட முதல் நிலைத் தொழிற் பெயர்; வங்கிசம்-குலம்; பதி-தலைவன்; நீள்-பெருமை; அணி-அழகு; மாலிகை-மாலை; வச்சிரம்-வைர இரத்தினம்; வாணுதல்-ஒளி பொருந்திய நெற்றி; சுட்டி-நெற்றி அணி; பட்டம்-நெற்றியில் அணியும் பொன்தகடு; வீறாடுதல்-விளக்கமாக அசைதல்; தோரணம்-அலங்காரத்

தொங்கல்; தொந்தி-பெருவயிறு; வேதித்த-தீற்றிய; சந்தம்-சந்தனம்; சேறு-குழம்பு; மருமம்-மார்பு.

ஆறாடு கங்கை குளம்

டாக்டர் உ. வே. சாமிநாதய்யர் நூல் நிலையத்தில் காணப் படும் 'நயினார் அகவல்'* எனும் சுவடியில்,

கங்கையாற் சுத்தங் கண்டவ ராதலால்
கங்கா குலரென கதித்திடுங் குலத்தோர் (132—133)

என்று கங்கையில் மூழ்கித் தம் புனிதத்தை வெளிக்காட்டியதாகக் குறிப்பு வேளாளர்களைப் பற்றி அமைந்துள்ளது. கரிகாற் சோழன் வரலாற்றோடு தொடர்பு கொண்டமையும் இந்நூலின் ஆசிரியர் கம்பர் எனவும் குறிக்கப்பட்டுள்ளது.

மைக்கட் கருங்கெண்டை மகரப் பொலன்குழை
மடுத்தரி படர்ந்துநீண்டு
மறியும் படர்முலை மடந்தையர் தடங்கையின்
வளைத்தழும் பிடைகிடந்து
பக்கத்தி னாம்பசுங் குவளைபூத் தழகொழுகு
பணைநெடும் புயபூதரன்
பாராள வருசுமுகன் மீனாட்சி நாதனன்
பாய்மன மகிழ்ந்துவப்பத்
தக்ககன கீர்த்திபெறு வெண்ணைநல் லூரில்வரு
சடையனென வாழ்வுபெற்றோன்
சரசகுண வாரிசுப் பிரமணிய பூபனாத்
தானத் திருந்துகேட்கச்
செக்கச் சிவந்தசெம் பவளவாய் மணமொழுகு
செங்கீரை யாடியருளே
செகமுழுது மரசுசெய வருதிருவேங் கடநாத
செங்கீரை யாடியருளே. 11

## பொழிப்பு

மையெழுதிய கருங்கெண்டைகளாகிய கண்கள் செவ்வரி படர்ந்து, மகரப்பொற்குழை யணிந்துள்ள செவியளவும் நீண்டு மறியும், தேமல் நிறைந்த நகிலுடைய மடந்தையரின் வளைந்த கைகளின் வளையல் அழுந்திய தழும்பின் பக்கத்தில்,அன்றலர்ந்த பசுமையான குவளைமலர்கள் அழகு மிகும்படி பூத்திருக்கும்படி யாக மாலையணிந்த, பருத்து உயர்ந்த தோள்களையுடைய பூதரன்; இப்புவியாள வருகின்ற இன்முகன், மீனாட்சிநாதன் அன்புடன் அகமகிழவும், தன்னுடைய உண்மையான தகுதியால்

* இந்நூல் அச்சானதாகத் தெரியவில்லை.

மிகுந்த உறுதியான புகழைப் பெற்றவனே, இனிய குணக்கடலான சுப்பிரமணிய பூபன் தன் அரசவையிலிருந்து கேட்க, செக்கச் சிவந்த செம்பவள வாய்மணம் கமழும் திருவேங்கடநாதனே செங்கீரையாடி யருளே. இப்புவி முழுவதும் ஆணை செலுத்த வந்தவனே செங்கீரை யாடியருளே.

## குறிப்புரை

கண்டை > கெண்டை; தடங்கை-வளைந்தகை; நாம் பசுங் குவளை- அன்றலர்ந்த பசுமையான குவளைமலர்; பணை-பருமை; புயம்-தோள்; சுமுகன்-இன்முகம் உள்ளவன்; தக்க-தகுதி; கன- மிகுதி; சரசகுணம்-இனிய நல்ல குணம்; ஆத்தானம்-அரசவை.

செங்கீரைப் பருவத்தின் செயல்களாகக் குறிக்கப்படும் மழலை மொழிதலையும், செங்கீரை ஆடலையும் ஒருங்கே கொண்டு, தலைவன் யார் யார் விரும்பிக் கேட்கும்படி செங்கீரை ஆட வேண்டுமெனக் குறிப்பிட்டிருப்பது இப்பாடலின் சிறப்பு. சுப்பிரமணிய பூபன் தந்தையும், மீனாட்சிநாத வேள் உடன் பிறப்பும் ஆவர். புலவருக்குக் கம்பன் மீதுள்ள பற்றை அவரை ஆதரித்த வள்ளலைப் புகழ்ந்திருப்பதன் மூலம் உணரலாம். தலைவன் புலவர்களை நன்கு ஆதரிப்பவன் என்பதனையும் இதனால் குறிப்பிடுகிறார் எனலாம்.

5. சங்கோ விடுந்தடங் கரைவிசிறு திவலைத்
தரங்கவெண் டிரைசுருட்டுந்
தண்டுறைப் புனல்வையை நாடர்பெரு மான்விசைய
சமரக் கொடிக்கெண்டையும்
வெங்கோப மொழுகுநிழ லுழுதுமழை முகிறடவு
விகடப் பருத்தடக்கை
வேழக் கடற்படைப் பூழியன் குனிசிலையும்
விரிதிரைப் பொன்னிநன்னீர்ப்
பொங்கோதை வளமலி உறந்தைப் பிரான்கொடிப்
புலியும் பழித்துமேருப்
பொலன்சிகர வடவரையில் மேழியந் துவசம்
பொறித்துலக முழுவதுக்கும்
செங்கோல் நடாத்திமணி முடியரசர் புகழநீ
செங்கீரை யாடியருளே
செகமுழுது மரசுசெய வருதிருவேங் கடநாத
செங்கீரை யாடியருளே. 12

## பொழிப்பு

சங்குகள் ஒலிக்கின்ற அகன்ற கரைகளில் திவலைகளைச் சிதறி வெண்மையான அலைகளைச் சுருளச் செய்யும் குளிர்ச்சி

யான துறைகளை உடைய புனல் நிறைந்த வையை பாயும் பாண்டிய நாட்டுப் பெருமானின் வெற்றி பொருந்திய போர்க் கொடியாகிய கெண்டையினையும், மிகக் கடுமையான கோபம் பொருந்திய, தன் நிழலையே உழுது மழை முகிலினைத் தடவி முட்டுப்படுத்தும் அழகிய பருத்த தடக்கை கொண்ட களிறுகள் நிறைந்த கடல்போன்ற படையுடைய சேரனின் வளைந்த வில்லினையும், பரந்த அலைகளையுடைய காவிரி நன்னீரின் பெருகிவரும் ஓசையும் வளமும் நிறைந்த உறந்தை நகருக்குத் தலைவனான சோழனின் புலியையும் வென்று பொலன் சிகர வடவரையில் தன் அழகிய கலப்பைக் கொடியைப் பொறித்து, உலகம் முழுவதையும் தன் செங்கோலின் கீழ் சிறப்புற நடாத்தி மணிமுடி புனைந்த அரசர் புகழ நீ செங்கீரையாடி யருள். புவி முழுதும் ஆணைசெலுத்திவரும் திருவேங்கட நாதனே நீ செங்கீரையாடியருள்.

## குறிப்புரை

ஒலிடும்-சத்தம் செய்யும்; தடம்-அகன்ற; விசிறு-வெளித் தள்ளு; திவலை-சிறுதுளி; தரங்கம்-அலை; திரை-அலை; சுருட்டு-சுருளச் செய்; தண்-குளிர்ந்த; சமரம்-போர்; நிழல்-பிரதி பிம்பம்; விகட-அழகு; பூழியன்-சேரன்; குனிசிலை-வளைந்தவில்; பொன்னி-காவிரி; மேழி-கலப்பை; துவசம்-கொடி.

தலைவனின் வெற்றி இவண் தசாங்கத்துள் ஒன்றான கொடியை ஏற்றியுரைப்பதன் மூலம் போற்றப்படுகிறது.

ஒட்டக் கூத்தர், விக்கிரம சோழனுலாவில் அவன் பட்டத்து யானையை.

தானே முழங்குவ தன்றித் தனக்கெதிர்
வானே முழங்கினுமவ் வான்றடவி-வானுக்
கணியு மருப்பும் அடற்கையும் இன்மைத்
தணியும் யமராச தண்டந்-தணியாப்
பரிய பெருங்கோ டிணைத்துப் பணைத்தற்
குரிய தொருதானே யாகிக்-கரிய
மலைக்கோ டடைய மடித்திடியக் குத்தும்
கொலைக் கோட்டு வெங்கால கோபம் (105-112)

என்று பாடியிருப்பதுடன் இந்நூலார் காட்டும் சேரனின் வேழங்களை இணைத்து நோக்குக.

6. கூரிட்ட முள்ளெயிற் றனல்விழிப் பொறியுடற்
குனிதலைக் குறுகவைக்காற்
கொலைமடுக் குந்தடப் பகுவா யிடங்கர்பற்
கொண்டுகவ் விப்பிடிக்க

வீரிட் டெழுந்துமும் மதத்தாரை யருவிசொரி
வெள்ளமடை வாய்திறப்ப
வெருவிப் பயந்தொரு தடக்கைக் கடாக்கயம்
விரைந்தாதி மூலமென்னக்
காரிட்ட மறிபுனற் குண்டகட் டெற்றுதிரை
கதறுதண் பாலாழியிற்
கண்டுயில் மறந்தெழுந் தழகுகுடி கொண்டசெங்
கைத்துணைத் தாமரையினாற்
சீரிட்ட சக்ராயு தப்படை தொடுத்தவா
செங்கீரை யாடியருளே
திருமருவு துரைதிருவேங் கடநாத பூபால
செங்கீரை யாடியருளே. 13

## பொழிப்பு

வளைந்த கூர்மையான முள்ளைப் போன்ற பற்களையும், கோபத்தீ சிந்தும் கண்களையும், வரிகளையுடைய உடலினையும், குனி தலையினையும், குறுகிய பிளந்த கால்களையும் துன்புறுத் தலைச் செய்யும் பெரிய பிளந்த வாயினையும் உடைய முதலை தன் பற்கொண்டு கவ்விப்பிடிக்க, அதனால் அலறி எழுந்து மும்மதத்தாரை அருவியாகச் சுரந்து வீழ்கின்ற வெள்ளம் மதகின் வாய் திறக்க, மிகவும் அஞ்சிப் பெரிய கையாகிய தும்பிக் கையைக் கொண்ட மத நீர் வழியும் யானை விரைந்து 'ஆதி மூலமே' என, கருமைபொருந்திய நீரைத் தன்னிடத்தே அடக்கிக் கொண்டுள்ள அகன்ற ஆழமான அலைமோதும் குளத்தில் கதறுதலைக் கேட்டு, பாற்கடலில் தன் கண் துயிலைக் களைந்து எழுந்து, அழகு வீற்றிருக்கின்ற தன்னுடைய சிவந்த கையாகிய தாமரையினால் சிறப்புப்பொருந்திய சக்ராயுதப் படையை விடுத்தவனே செங்கீரையாடியருள். திருமகள் தழுவும் துரை திருவேங்கட நாத பூபாலனே செங்கீரையாடியருள்.

## குறிப்புரை

கூரிட்ட-வளைந்த, (அ) கூர்மையுள்ள; எயிறு பல்; பொறி-வரி; கவை-பிளவு; கொலை-துன்புறுத்தல் செய்; இடங்கர்-முதலை; மும்மதம்-கன்னமதம், கபோலமதம், பீஜமதம்; வெருவி-அஞ்சி; தடக்கை-தும்பிக்கை; கடாக்கயம்-மதகளிறு.

### கயேந்திரனுக்கு மோட்சம் அருளிய கதை

இந்திரத்துய்ம்மன் என்னும் அரசன் திருமாலைப் பூசை செய்து கொண்டிருந்தான். அப்பொழுது அந்த இடத்திற்கு அகத்தியர் சென்றார். அரசன் தன்னுடைய கருத்தைப் பூசையிற்

செலுத்தியிருந்தபடியால் அகத்தியர் வருகையை உணர்ந்து அவரைப் போற்றாதிருந்தான். அகத்தியர் இதனால் சினங் கொண்டு 'நீ யானையாகக் கடவை' என்று சாபம் வழங்கினார். அதனால் அரசன் யானையானான். அவ்வாறு யானையான பிறகும் திருமால் பூசையை விடாமல் செய்து கொண்டிருந்தான். ஒரு நாள் தாமரை மலர் பறிப்பதற்காகத் தடாகம் ஒன்றிற்குச் சென்று இறங்கினான். இஃது இவ்வாறாக ஹூஹூ என்னும் பெயரையுடைய கந்தருவன் பலவிடங்களிலும் விளையாடிக் கொண்டு ஒரு தடாகத்திற்குச் சென்றான். அத்தடாகத்திலே தேவலன் என்னும் முனிவர் ஒருவர் நின்று தவம் செய்து கொண்டிருந்தார். கந்தருவன் அம்முனிவருடைய காலை விளையாட்டாகப் பற்றியிழுத்தான். அதனாற் சினங்கொண்ட முனிவர் அக் கந்தருவனை முதலையாகுமாறு சாபமிட்டார். அவன் அப்பொழுதே முதலையாகி அத்தடாகத்திலே திரிந்து கொண்டிருந்தான். அகத்தியர் சாபத்தால் யானையான அரசன் தாமரை மலர் பறிக்கச் சென்று இறங்கிய தடாகம் அம்முதலை கிடந்த தடாகமாகும். கந்தருவனாகிய முதலை அரசனாகிய யானையின் காலைப் பிடித்துத் தண்ணீருக்குள் இழுத்தது. இதனைக் கண்ட அரசயானை 'ஆதி மூலமே' என்று அலறியது. உடனே திருமால் காட்சி தந்து ஆழிப்படையால் முதலையைக் கொன்று அரசயானையை விடுவித்து வீடுபேற்றைக் கொடுத் தார். கந்தருவ முதலையும் சாபம் நீங்கித் தன்னுடைய பழைய உருவத்தைப்பெற்றது.

திருப்பாற்கடல்

ஏழு பெருங் கடல்களுள் ஒன்று. இதில் திருமால் ஆலிலை மீதும், திரு அநந்தாழ்வான் மீதும் எழுந்தருளி அடியவருக்கு அருள்புரிந்திருக்கின்றார். உபமன்னியுவுக்காகச் சிவபெருமானால் பானம் செய்ய அளிக்கப்பட்டது.

7. பாரகத் தோருள முவந்துகொண் டாடவெழு
பகிரண்ட கூடமட்டும்
பட்டுருவி நின்பெருங் கீர்த்திமே லாடவடர்
பாடற் சுரும்பாடுபூந்
தாரகப் புயசயிலன் மீனாட்சி நாதமால்
தனயன் மகிழ்ச்சியாடச்
சங்குசக் ராயுதப் படைநெடுங் கதிர்கள்செந்
தாமரைக் கையிலாட
வாரகத் தரளமணி வடமிறுகு முலைமகளிர்
மணிமுறுவ லாடரெத்ன
மரகதக் குழையாட வொழுகுகத் தூரிநுதல்
வைத்திட்ட சுட்டியாடச்

சீரகத் தமிழ்வலவ ரினியகவி பாடநீ
செங்கீரை யாடியருளே
திருமருவு துரைதிருவேங் கடநாத பூபால
செங்கீரை யாடியருளே. 14

## பொழிப்பு

நில உலகில் உள்ளோர் மன மகிழ்ந்து கொண்டாடவும்,ஏழு பெரிய உலகங்கள் முழுமையும் பொருந்தி நிற்கின்ற நின்னுடைய மிகுந்த புகழ் பரவவும், பூவிதழ்களில் இசைபாடுகின்ற சுரும்புகள் ஆடும் பூமாலையை இடங்கொண்ட தோளாகிய மலையினை உடைய மீனாட்சி நாதனின் மாட்சிமை பொருந்திய மகனாகிய சுப்பிரமணியன் உவகை கொள்ளவும், சங்கு சக்ராயுதப் படைகளாகிய நெடுங்கதிர்கள் சிவந்த தாமரை போன்ற கைகளில் ஆடவும், கச்சினில் முத்துமணி வடங்கள் இருந்து இறுக்கும் மார்பினையுடைய மகளிர் அழகிய முறுவலைச் செய்யவும், ரத்தின மரகதக் குழையாடவும், கத்தூரி மணம் வீசும் நெற்றியில் சூடிய சுட்டியாடவும், பெருமை பொருந்திய தமிழ் வலவர்கள் இனிய பாடல்களைப் பாடவும் நீ செங்கீரை ஆடியருள். அழகு நிறைந்த துரை திருவேங்கட நாத பூபால நீ செங்கீரை யாடியருள்.

## குறிப்புரை

எழுபகிரண்டகூடம்-ஏழு மேல் உலகங்கள் (பூலோகம், புவலோகம், சுவலோகம், சனலோகம், தபோலோகம், மகாலோகம், சத்தியலோகம்) அடர்-பூவிதழ்; பாடல்-பாடுதல்; சுரும்பு-வண்டு; தனயன்-மகன்; தரளமணிவடம்-முத்துமணி மாலை; ஒழுகு-பரந்த; நுதல்-நெற்றி.

## 3. தாலப்பருவம்

செங்கம லம்பொதி விண்டுந றாமழை
சிந்துத டந்தோறும்
செறிகன முகில்கண் டிளமயி லகவுந்
தேமாந் தண்காவிற்
பைங்கமு கம்பூம் பாளைவி ரிக்கும்
படுகாப் பழனத்திற்
பனிமலர் துற்றிய முல்லைக் கொல்லைப்
பரிய வரம்பருகில்
முங்கிய பிரசத் தழைமட லுடையு
முத்தா ழைத்தூரில்
மோது வராலெதிர் பாய்பொரு னைத்துறை
மொய்த்த கரைத்திடரில்

சங்கமொ லித்துல வுங்குரு கூரா
தாலோ தாலேலோ
தருமத் துரைதிரு வேங்கட நாதா
தாலோ தாலேலோ.

## பொழிப்பு

சிவந்த தாமரை முறுக்கு அவிழ்ந்து மலர அதில் நிறைந்துள்ள தேன் மழையாகச் சிதறும் நீர்நிலைகளிலும், கருத்த மழை மேகங்கள் நிறைந்துள்ளமை கண்டு மயில்கள் மகிழ்ச்சியாக அகவி ஆடித்திரியும் தேன் பொருந்திய மரங்களையுடைய சோலைகளிலும், குளிர்ந்த பசுமையான கமுகம் மரங்கள் தம் பூம்பாளையை விரித்து நிற்கும் பரந்த பழனப் பகுதிகளிலும், குளிர்ந்த நெருங்கி மலர்ந்துள்ள முல்லை மலர்கள் உதிரும் கொல்லைப் புறங்களிலும், தேன் நிரம்பித் தொங்குகின்ற தேனடைகளின் பகுதிகள் உடையும் மூன்று வகையான தாழைகள் நிறைந்துள்ள புதர்களில் வரால் மீன்கள் மோதி பின் எதிர் பாயும் துறைகளையுடைய பொருநை நதியின் கரையில் உள்ள மேடுகளிலும் சங்குகள் ஒலித்துத் திரியும் சிறப்பு உடைய குருகூரின் தலைவனே தாலோ தாலேலோ. தருமங்கள் செய்வதில் சிறந்த திருவேங்கடநாதனே தாலோ தாலேலோ.

## குறிப்புரை

பொதி-முறுக்கு, கட்டு; நறா-தேன்; அகவல்-மயில் கூவுதல், ஆடல்; கமுகம்—பாக்குமரம்; பாளை-தென்னை இன மரங்களின் பூமடல்; படு-பரந்த; கா-அசைச் சொல்; பனி-குளிர்ச்சி; துற்றிய-நெருங்கிய; கொல்லை-வீட்டின் திறந்த வெளி,பிற்பகுதி; பரிய—உதிர; முங்கிய-தொங்குகின்ற; மடல்-பகுதி; மொய்த்த-நெருங்கிச் சுற்றுகின்ற; திடர்-மேடு.

தலைவன் நகரினைச் சிறப்பிக்க எண்ணும் கவிஞர் சங்குகள் காணப்படும் இடங்களைத் தொகுத்துரைப்பதன் மூலம் காட்டியிருப்பது புதுமையாகும்.

2. திண்டிறல் விசையா வசிகர சுமுகா
தியாக சமுத்திரமே
செல்வத் துரைவளர் கல்விக் கரசே
செகதல கற்பகமே
கொண்ட லெனத்தரு மன்னா கன்னா
கொற்றவர் கண்மணியே
குஞ்சர முகன்வந் தஞ்ச லெனப்பகர்
கோசலை பாலகனே

வண்டம ருஞ்சிறு கெண்டை விழித்துணை
மாதர்கள் மடலெழுது
மனுபதி சுப்பிர மணிய நரேந்திரன்
வரபுத் திரசுமுகா
தண்டமி ழன்புறு தென்குரு கூரா
தாலோ தாலேலோ
தருமத் துரைதிரு வேங்கட நாதா
தாலோ தாலேலோ 16

## பொழிப்பு

வலிமையான வெற்றியை உடைய அர்ச்சுனனே, பிறரைக் கவரும் தன்மையனே, அழகுடையவனே, பிறருக்குக் கொடுத்துதவுவதில் கடலைப் போன்றவனே, செல்வங்களுக்குத் தலைவனே, வளர்கின்ற கல்விக்கு அரசனே, பூமியின் கேட்டதையருளும் கற்பகத்தருவே, மழை போன்று அனை வருக்கும் வாரி வழங்கும் மன்னனே, கொடையில் கண்ணனே, புவி அரசர்களுக் கெல்லாம் கண்ணின் கண்மணி ஆனவனே, யானை முகம் கொண்ட கணபதி வந்து அஞ்சல் எனப் பகரும் கோசலையின் மைந்தனே, மலரோ என மயங்கித் தேனருந்த அமரும் சிறிய கெண்டை மீன் போலும் கண்களையுடைய மாதர் மடலேறுதற்காக உருவத்தை எழுதும்படியான அழகுடைய மனுபதி சுப்பிரமணிய நரேந்திரனின் அழகான தவப்புதல்வனே' தண்டமிழின் மீது அன்பு கொண்ட தென் குருகூரனே தாலோ தாலேலோ. தருமத்துரையே திருவேங்கட நாதனே தாலோ தாலேலோ.

## குறிப்புரை

விசையர்-அர்ச்சுனர்; வசிகர-கவர்கின்ற; சுமுகர்-அழகுடையவர்; குஞ்சரமுகன்- யானைமுகன்; விழித்துணை > துணைவிழி- இருவிழி.

தலைவனின் கொடை, வீரம் முதலிய பண்புகள் இங்கு உணர்த்தப்படுகின்றன. மொழிப்பற்றும் காட்டப்படுகிறது.

மடல்:

மடலேறல் என்பது, ஒரு பெண்ணைக் கண்டு காமுற்ற ஒருவன் குறையிரந்தும், அப்பெண்ணை அடைய முடியாத நிலையில் பனைமடலினால் குதிரை செய்து, அப்பெண்ணின் வடிவினை எழுதிக் கையில் தாங்கி, உடம்பு முழுவதும் நீறுபூசி, எருக்கம் பூ, எலும்பு முதலியவற்றை மாலையாக அணிந்து, அக்குதிரை மீதேறி மனிதனுக்கு உயிரென விளங்கும் நாணத்தைத் துறந்து தெருவில் வலம் வருதலாகும்.

பொதுவாகப் பெண்கள் மடலேறுதல் மரபன்று. எனினும், இறைவன் தலைவனாக வரப்பெறின் ஏறுவர் என்று பன்னிரு பாட்டியல் தருகின்ற விதிவிலக்கினையும் (இ. 63), திருமங்கை யாழ்வார், திருமாலைக் குறித்து ஒரு பெண் மடலேறுவன் எனக் கூறுவதாகத் தம் சிறிய திருமடல், பெரிய திருமடற் பிரபந்தங் களில் பாடியுள்ளமையும் நோக்கின், புலவர் பாட்டுடைத் தலைவனைத் திருமாலின் அவதாரமாகவே கொள்வதால் இங்குப் பெண் மடலேறற் குறிப்பைக் காட்டுகிறார் எனலாம்.

3. அருணக் கனகக் குழை வெயில் வீசும்
அசோதை யவாவியெடுத்
தருமைப் புதல்வ வழேலென மார்போ
டணைத்து மடித்தலைமேல்
வருணக் களப மணக்குங் குமமுலை
வள்ளத் தமுதிளகி
வழியும் பிதிர்கடை வாய்வழி யொழுக
வளந்தரு பாலூட்டி
கருணைத் திருமுக வேர்வை சுவற்றிக்
கவின்மட் குறியிட்டுக்
கமல விழிக்கஞ் சனமெழு திச்செவி
கனியத் தாலாட்டுந்
தருணக் கிரணத் தனிமர கதமே
தாலோ தாலேலோ
தருமத் துரைதிரு வேங்கட நாதா
தாலோ தாலேலோ. 17

## பொழிப்பு

சூரியன் போன்று ஒளிவிடுகின்ற பொற்குழை அணிந்த அசோதை விரும்பி எடுத்து, 'என் அருமைப் புதல்வனே நீ அழ வேண்டாம்' எனத் தன் மார்போடணைத்து, வாசனை மிகுந்த சந்தனக் குழம்பு மணத்தோடு குங்கமமும் உள்ள நகிலாகிய கிண்ணத்தில் உள்ள அமுது கடைவாய் வழியாக உதிர்ந்து வழியும்படி வளந்தரு பாலூட்டி, கருணை வழியும் அழகிய முகத்தில் வழியும் வேர்வையினைத் துடைத்து, நெற்றியில் அழகிய மட் குறியிட்டு, தாமரை விழிகளில் மையெழுதி, செவியினிக்கத் தாலாட்டும் இளமையுடைய ஒளிவிடுகின்ற ஒப்பற்ற சிறப்புடைய மரகதமே தாலோ தாலேலோ. இரப்

போருக்கு இல்லையெனாது வழங்கும் தரும துரை திருவேங்கட நாதனே தாலோ தாலேலோ.

## குறிப்புரை

அருணன்-சூரியன்; கனகம்-பொன்; குழை-காதணி; வெயில்; ஒளி; அசோதை-கண்ணனின் வளர்ப்புத்தாய்; அவாவி-விரும்பி; வருணம்-மணப்; களபம்-சந்தனக் குழம்பு; வள்ளம்-கிண்ணம் பிதிர்-உதிர்தல்; சுவற்றி-துடைத்தல்; கவின்-அழகு; மட்குறி-வைணவர்கள் இட்டுக்கொள்ளும் திருநாமம்; கனிய-இனிக்க; தருணம்-இளமை; கிரணம்-ஒளி.

கண்ணனை அசோதை
'ஆலை நீள்கரும் பன்னவன் தாலோ
அம்பு யத்தடங் கண்ணினன் தாலோ
வேலை நீர்நிறத் தன்னவன் தாலோ
வேழப் போதக மன்னவன் தாலோ
ஏல வார்குழ லென்மகன் தாலோ' (7:1)

எனத் தாலாட்டுவதாகக் குலசேகராழ்வார் பாடியிருப்பது சுட்டற்பாலது.

4. சோதி யிளங்கதி ராதவன் வலம்வரு
சொன்னக் கிரியன்ன
துளபத் தொடைநெடு மாமால் கருணை
சுரந்தருள் தென்குருகூர்
வீதி யுலாவர முன்பழ கும்புள்
வேந்த னலங்கார
மீறத் தங்கத் தனியுரு வாக
விளங்கும் படிநலமாய்
நீதியி னாலுட னேபிர திட்டைசெய்
நித்யம னோகரனே
நேச விலாச வுலாச பிரகாசமன்
னேநற் குணநிதியே
தாதொளிர் முளரித் திருமறு மார்பா
தாலோ தாலேலோ
தருமத் துரைதிரு வேங்கட நாத
தாலோ தாலேலோ. 18

## பொழிப்பு

ஒளி விடுகின்ற இளங்கதிர்களை உடைய சூரியன் பொன் மலையான மேரு மலையை வலம் வருதல் போல், துளசிமாலை

அணிந்த திருமால் கருணை மிகுந்து கனிவுடன் அருள்கின்ற தென்குருகூர் வீதிகளில் உலாவர, திருமாலுடன் அனுமனுக்கு முன்பே தொடர்பு கொண்டுள்ள பறவைகளின் வேந்தனாகிய கருடனைப் பொன் உருவில் அலங்காரம் நிறைந்து நிகரற்று விளங்கும்படிச் சிறப்பாக முறைப்படி பிரதிட்டை செய்த அழிவில்லாத அழகுடையவனே! அன்பான அழகான, மகிழ்ச்சி யான புகழ் நிறைந்தவனே! நல்ல குணங்களின் இருப்பிட மானவனே, தேன் நிறைந்த தாமரை மலரில் திருமகள் ஒளிவிடு கிறாள் என்பதனை மறுத்து அவள் இங்கே உறைகிறாள் எனக் கூறும் படியாக மார்பில் கொண்டவனே! தாலோ தாலேலோ. வறியாருக்கு வழங்கும் தருமத் துரையே தாலோ தாலேலோ.

## குறிப்புரை

சோதி-ஒளி; ஆதவன்-சூரியன்; சொன்னக்கிரி-மேருமலை; துளபம்-துளசி; தொடை-மாலை; மா-அழகு, பெருமை; தனி-ஒப்பற்றது; புள் வேந்தன்-கருடன்; நீதி-முறைப்படி; பிரதிட்டை-நிலைபெறச் செய்தல்; நித்யம்-அழிவில்லாதது; மனோகரன்-அழகன்; நேச-அன்பான; விலாச-அழகான; உலாச > உல்லாச-மகிழ்ச்சியான, பிரகாச-புகழ், தாது-தேன், முளரி-தாமரை; மறு-மறுத்தல் செய்.

தலைவன் கருடனைப் பிரதிட்டை செய்த வரலாற்றுச் செய்தி இவண் காட்டப்பட்டுள்ளது.

சொன்னகிரி

மேருமலைபொன்னால் ஆகியது எனும் நம்பிக்கையால் இப்பெயர் பெற்றது. சூரிய சந்திரர்கள் இம்மலையைச் சுற்றி வருவதாலேயே இராப்பகல்கள் உண்டாகின்றனஎன்று புராணங் கள் நவிலும்.

5. அசனத் தருபா லசினிகற்கண்
டரும்பா கொடுமுக் கனிபலவும்
அமைத்து விருந்தாய் வருபவர்க்கும்
அடுத்துத் தொடர்ந்த அதிதியர்க்குங்
கெசநட் பொழித்துப் பிறைநட்பாங்
கிளைஞோர் தமக்கும் பகுத்தளிக்குங்
கிருபைக் கடலே திருக்குருகூர்க்
கிறைவா நிறைவா னொளிர்மேழித்

துசநட் டுலகம் புரந்தருளுந்
துங்கா மறுவி லகளங்கா
துகள்மாற் றியநா வலர்துதிக்குஞ்
சோமா வீமா சுவைபெறுநல்
வசனத் தமிர்த மொழுகு சிந்தா
மணியே தாலோ தாலேலோ
மதனா திருவேங் கடநாத
மாலே தாலோ தாலேலோ. 19

## பொழிப்பு

சாதம், பால், அசினி கற்கண்டு, சர்க்கரைப்பாகு இவற்றுடன் மா, பலா, வாழை எனும் முக்கனி பலவும் அமைத்து, புதிதாய் வந்தவர்களுக்கும் தொடர்ந்து வந்த விருந்தினர்களுக்கும், யானைபோன்றார் நட்பை ஒழித்துப் பிறை நட்பு கொண்ட அன்புடை நண்பர்களுக்கும் பகிர்ந்தளிக்கும் அருட் கடலே! திருக்குருகூரின் தலைவனே! வலிமையான புகழ் பெற்ற மேழிக் கொடி ஒளிர்விடும்படி உயர்த்திப் புவியினைக் காத்தருளும் பெருமை வாய்ந்தவனே! குற்றமில்லாதவனே! களங்கமில்லா தவனே! குற்றத்தை மாற்றிய புலவர்கள் போற்றும் குபேரனே! வீமனே! சுவையான நல் அமிர்தம் ஆகிய இனிய சொற்களை நவிலும் விரும்பியதைத் தரவல்ல சிந்தாமணியே தாலோ தாலேலோ. அழகிய மன்மதனைப் போன்றவனே! திருவேங்கட நாதன் எனும் பெருமையோனே தாலோ தாலேலோ.

## குறிப்புரை

அசனம்-சாதம்; அடுதல்-சமைத்தல்; அசினி-பாகு; சர்க்கரைப் பாகு; விருந்து-புதிது; அதிதியர்-விருந்தினர்; கெசம்-யானை; கிளைஞோர்-நண்பர்; கிருபை-அருள்; நிறை-வலிமை; வாள்-புகழ்; துசம் > துவசம்-கொடி; துங்கா-குற்றமில்லாதவன்; அகளங்கா-களங்கமில்லாதவன்; துகள்-குற்றம்; நாவலர்-புலவர்; சோமா-குபேரன்; வீமன்-பாண்டவர் ஐவரில் ஒருவன், மிகுந்த வலிமை வாய்ந்தவன். வசனம்-சொல்; சிந்தாமணி-வேண்டுவோர் வேண்டுவதை ஈயுமோர் இரத்தினக்கல்; மதன்-மன்மதன்; மால்-பெருமையோன்.

தலைவனின் விருந்தோம்பலை இப்பாடலில் புகழ்கிறார். யானையானது பல நாள் பழகியிருந்தும், தன்னை வளர்த்த பாகனிடம்கூட, குற்றங் கண்டக்கால் பொறுத்துக் கொள்ளாது

அவனைக் கொல்லும் தன்மையது. எனவே யானையனையவர் நட்பினை விலக்க வேண்டும் என நாலடியும்'

யானை யனையவர் நண்பொரீஇ, நாயனையார்
கேண்மை கெழீஇக் கொளல் வேண்டும்-யானை
அறிந்தறிந்தும் பாகனையே கொல்லும், எறிந்தவேல்
மெய்யதா வால் குழைக்கும் நாய் (213)

என நவிலும். சான்றோரிடம் கொண்ட நட்பு வளர்பிறை போன்றது என்பதனை வள்ளுவரும்,

நிறைநீர நீரவர் கேண்மை பிறைமதிப்
பின்நீர பேதையார் நட்பு (782)

என விளக்குவார்.

6. பாவேந் தருக்குஞ் சதுமறைச்சொற்
பயில் வேந்தருக்கும் இரவலர்க்கும்
பரிந்தா துலர்க்குங் கலிக்குறும்பிற்
படலங் கிழித்து நிலவலயப்
பூவேந் தருக்கு மிக்காகப்
புயல்போற் றருசிந் தாமணிபோற்
புதிய நிதிய மழைசொரியும்
புழைக்கைக் களிறே யிரத்தினமுடிக்
கோவேந் தருக்கும் இருபானோர்
கொடைவேந் தருக்கும் பணப்பாந்தட்
குலவேந் தருக்குந் தருநீழற்
கொண்மூ வேந்தன் தனக்குமிக்க
மூவேந் தருக்குந் தழைத்தபுகழ்
முதல்வா தாலோ தாலேலோ
முகுந்தா திருவேங் கடநாத
முகிலே தாலோ தாலேலோ. 20

## பொழிப்பு

கவி பாடுவதில் வல்ல புலவர்களுக்கும், நான்கு வேதங்களில் தேர்ந்த அந்தணர்களுக்கும், தன்னிடம் இல்லை என்று வந்த இரவலர்களுக்கும், நோயுற்றவர்களுக்கும் அன்புடன் அவர்களை வருத்துகின்ற வறுமையாகிய பகையை அழித்து, இப்புவியுலகில் தோன்றிய மன்னர்கள் தந்த கொடையைவிட அதிகமாகக் கார்போன்றும், கற்பகத்தரு, சிந்தாமணி போன்றும் புதிய நிதியாகிய மழையை விடாது பொழிகின்ற தும்பிக்கையுடைய

களிறே! இரத்தின முடியணிந்த பெரிய வேந்தர்க்கும் இருபத்தொரு கொடைவள்ளல்களுக்கும், படத்தையுடைய பாம்புகுல வேந்தருக்கும், கற்பகத் தருவின் நிழலில் அரசு வீற்றிருக்கும் இந்திரனுக்கும் சேர சோழ பாண்டியர் எனும் மூவேந்தருக்கும் அதிகமான புகழை உடைய முதல்வனே! தாலோ தாலேலோ. திருமாலே, முகிலே, திருவேங்கட நாதனே தாலோ தாலேலோ.

## குறிப்புரை

சதுமறை - நான்மறை; பரிந்து - அன்புடன், ஆதுலர் - நோயுற்றோர்; கலி-வறுமை; குறும்பு-பகை; நிலவலயம்-பூ மண்டலம்; பூ - தோன்றிய; புயல்-மழை; தரு-கற்பகத்தரு; புழைக்கை-தும்பிக்கை-துளையுடைய கையானதால் தும்பிக்கை; இருபானோர்-21 பேர்-முதல், இடை, கடை ஏழு வள்ளல்கள் முதல்-குமுணன், சகரன், சகாரன், செம்பியன், துந்தமாரி, நளன், நிருதி; இடை-அக்குரன், அந்திமான், அரிச்சந்திரன், கன்னன், சந்திமான், சிசுபாலன், துந்துவச்சிரன்; கடை-எழினி.ஓரி, காரி, பூரி, நள்ளி, பேகன், மலையன்; பணப்பாந்தட் குலவேந்தன்-நாகர் குலத்தின் அரசனாகிய ஆதிசேடன்;மூவேந்தன்-இந்திரன்; முகுந்தன்-திருமால்.

தலைவனின் கொடைச் சிறப்பு இங்கு மிகுவிக்கப்படுகிறது. தன்னுடைய தலைவன் யாரினும்,எதினும் மிக உயர்ந்தவன் எனக் காட்டுவதில் உள்ள புலவரின் பெருவிருப்பு இங்குத் தெளிவாகிறது. 'புதிய நிதிய மழை சொரியும் புழைக்கைக் களிறே' என்பது கவிநயம் மிக்கது.

> 'செந்தமிழ்ப் பாவாணர் கலியாற்ற வொரு, சூற் கொண்ட
> மேகமெனத் தோன்றினான்' எனத் தூதும் பாராட்டும்.
> (திருவேங்கட நாதன் வண்டுவிடுதூது)

7. தொழுது புகழ்ந்து மருவலர்போற்
றுகிலு மணியுந் திறைகுவிப்பத்
துரைமக் களும்வேந் தருமணியத்
துறைக்கு வளைந்து தோரணச் சீட்டு
எழுதும் படிநின் சமட்சமங்காத்(து)
இருப்பமருப்புப் பருப்பதங்கள்
இருபக் கமுநின் றணிதரவிட்
டெறிக்குங் கதிர்ச்செம் மணிகுயிற்றிக்

குழுமும் பவள நெடுங்காம்பிற்
குடுமி திரண்ட சந்திரவட்டக்
குடைக்கீ ழரசு புரிந்துநிறை
கொலுவீற் றிருந்து பூவலய
முழுதுந் தனதாம் படிபுரந்த
முதல்வா தாலோ தாலேலோ
முகுந்தா திருவேங் கடநாத
முகிலே தாலோ தாலேலோ. 21

## பொழிப்பு

வணங்கிப் புகழ்ந்து பகைவர்கள் போல் துகிலும், நவமணியும் திறைப் பொருளாகத் தலைவனாகிய நீ அணிவதற்குக் கொண்டு வந்து கொடுக்க மிகுந்தவளம் பெற்ற துரைமக்களும், அரசர்களும் தங்களை அறிமுகப்படுத்தும் அடையாளச் சீட்டுகளை எழுதி அனுப்பி நின் திருச்செவ்விப் பார்க்க சபையிலே காத்து நிற்க, தந்தங்களையுடைய பெரிய யானைகளை இருபக்கமும் அழகு தரும்படி அமைத்து ஒளிவிடுகின்ற கதிர்களையுடைய சிவந்த மணிகள் பதிக்கப்பட்ட ஆசனத்தில் அமர்ந்து, பவளத்தாலாகிய நீண்ட காம்பினையும், திரண்ட குடுமியினையுமுடைய சந்திர வட்டக் குடையின் கீழ் அரசு புரிந்து, அரசவையின் கண்ணே நிறைவாக வீற்றிருந்து இப்புவி முழுதும் உனக்குக் கீழ்ப்படியும்படி பாதுகாத்த முதல்வனே தாலோ தாலேலோ. முகுந்தனே, திருவேங்கட நாதமுகிலே தாலோ தாலேலோ.

## குறிப்புரை

திறை-கப்பம்; துரை-தலைவன்; மருவலர்-பகைவர்; மணி-நவமணி; சமட்சமம் > சமட்சம்-சபை;குயிற்றி-பதித்து;முகுந்தன்-திருமாலைக் குறிக்கும் பெயர்.

தலைவனின் கொலு வீற்றிருக்கையை இங்குக் காட்சிப் படுத்துகிறார் புலவர். தலைவனை அரசவையில் காணச் செல்லும் பொழுது தான் யார் என்பதைக் கூறி அவன் அனுமதி பெற்றே உட்செல்லல் மரபு. திருவேங்கட நாதனின் கொலு விருக்கையைத் தம் தூதிலக்கியத்தில் இப்புலவர்,

'விசைய மென்
மாகதர் நின்றேத்த மறை வல்லோர்களாசி சொல
வேகதமரா னோர் இனிதிருப்பப்-பாகுமொழி
மின்னார் இருபுறமும் வெண்சாமரை யிரட்டப்

பொன்னால வட்டம் புடைதயங்க-முன்னாக
ஏவற் றொழிலோர் கடைகாப்பப்-பூவுலகத்
தெண்டிசையு மோர் குடைக்குள்ளே யடக்கி யாண்டுபுகழ்
கொண்ட கனராச கொலுவினான்'

எனச் சிறப்பித்துள்ளார்.

## 4. சப்பாணிப் பருவம்

தேமலர்க் குவளைக் குறுங்கண்டு சூட்டுபொற்
சிகழிகைக் குஞ்சியசையத்
திலகமெழு தியநுதலில் இட்டபொற் சுட்டிசெந்
தினகரச் சுடரெறிப்பக்
காமரக் களிதூங்கு மழலைவாய்க் குறுநகைக்
கதிர்முத்த நிலவரும்பக்
கருணைவிழி வழிசுரந் தலையெறிய முழுவயிர
கங்கணச் சுவடொலிப்பப்
பூமரக் கணையம் பணைக்குந் துணைத்தடம்
புயவரைக் கிடைக்கிடந்து
புதியவயி டூரியக் குழையூச லாடமழை
பூசலாடிய கொடைச்செந்
தாமரைக் கரதலத் திடைசிவப் பேறவே
சப்பாணி கொட்டியருளே
தகுதிபெறு குருகைநகர் வருதிருவேங் கடநாத
சப்பாணி கொட்டியருளே. 22

### பொழிப்பு

தேன் நிறைந்த குவளைப்பூ போன்ற குறுங்கண்டு சூட்டிய பொற்சிகழிகை அணிந்த தலை அசைய, திலகம் வைத்த நெற்றியில் சூடிய பொற்சுட்டி சிவந்த சூரிய ஒளிச்சுடர் போன்று ஒளிதர, சீகாமரம் என்ற பண்ணிசையினால் வரும் மகிழ்ச்சி தங்குகின்ற மழலைச் சொற்களைப் பொழியும் வாயில் குறுநகை பூரணச் சந்திரனின் ஒளிபோன்று தோன்ற, அருள் விழிகளின் வழி சுரந்து வெளிப்பட, பருத்த வயிரங்களையுடைய கைகளில் சுவடுகளைப் பதித்துள்ள கங்கணம் ஒலிக்க, பொலிவுடைய கணையமரத்தை ஒத்த வலிமையுடைய பருத்த அகன்ற இரு தோள்களுக்கு இடையிலும் புதிய வயிடூரியக் குழை யூசலாட, கொடைத் தன்மையில் தன்னை மிகுந்து நிற்பதால் மழை

பூசலாடிய சிவந்த தாமரைக் கரதலம் சிவப்பு ஏற சப்பாணி கொட்டியருள். மேன்மை பெற்ற குருகை நகரில் வாழும் திருவேங்கடநாதனே சப்பாணி கொட்டியருள்.

## குறிப்புரை

தேமலர் > தேம்மலர்-தேன் நிறைந்த மலர், குறுங்கண்டு-ஒரு வகையணி; சிகழிகை-தலையில் அணியும் அணி; குஞ்சி-தலை' சுட்டி-குழந்தையின் நெற்றியணி; தினகரன்-சூரியன், காமரம்–சீகாமரம் என்ற பண்; கங்கணம்-ஒருவகைக் கைவளை; கணையம் கோட்டை மதிற் கதவுக்குத் தடையாகக் குறுக்கிடும் மரம்; தடம்-அகன்ற; பணைத்தல்-பருத்தல்; புயம்-தோள்; கிடை-பொருந்த; பூசல்-வருந்துகின்ற, புலம்புகின்ற; தகுதி-மேன்மை கருணை விழிவழி சுரந்து அலையெறிய, மழை பூசலாடியக் கொடைச் செந்தாமரைக் கரதலத்திடை போன்ற தொடர்கள் கவித்துவம் மிக்கன. 'அந்தம் புடை பரந்து நீண்டமிர்தம் போல் கருணை வெள்ளம் கடை பரந்த செங்குவளைக் கண்ணான் எனத் தூது நூல் இவனைக் காட்டும்.

2. மங்கலத் தொளிர்சந்த னாடவிப் பூங்கொம்பர்
மதியகடு கிழியவோங்கு
மாரிதவழ் பொதியமால் வரையுந் துறைப்பொருனை
மாநதியும் வழுதிநாடும்
செங்கமல மங்கைகுடி கொண்டிலக வளமீறு
தென்குருகை மாநகரமும்
செயமதக் களிறுமடர் சரகதிப் புரவியும்
செம்பொன்மே ழித்துவசமும்
எங்குமொத் ததிரும் முரசமும் பிரசமொய்த்
தேடவிழ் பசங்குவளையும்
இசைதவறி லாவான மாமலைத் தவமுனிவன்
இருபதாம் புயத்தாணையும்
தங்கிநிலை பெற்றுவளர் கங்கைகுல திலகனே
சப்பாணி கொட்டியருளே
தகுதிபெறு குருகைநகர் வருதிரு வேங்கடநாத
சப்பாணி கொட்டியருளே. 23

## பொழிப்பு

பொலிவுடன் ஒளிர்கின்ற சந்தனக் காடுகளின் மலர்நிறைந்த கொம்புகள் வானில் உலாவுகின்ற நிலவின் நடுப்பகுதியினைக்

கிழிக்கும்படி ஓங்கி உயர்ந்துள்ள மழை மேகங்கள் தவழ்கின்ற பொதிய மலையும், பல குளிர்ந்த துறைகளை உடைய பெருமை வாய்ந்த பொருணை நதியும், வழுதிநாடும், செந்தாமரை மலரில் வீற்றிருக்கும் திருமகள் தன் இருப்பிடமாகக் கொள்ளும் சிறப்புப் பெற்ற வளம் நிறைந்த பெரிய தென் குருகை நகரமும், வெற்றி பொருந்திய மதக்களிறும், அம்புபோல் மிகவாக விரைந்து பகைவரைத் தாக்கும் குதிரையும், சிவந்த பொன்னால் ஆகிய கலப்பைக் கொடியும், எங்கும் தாளத்துடன் ஒலிக்கும் முரசமும், வண்டுகள் மொய்க்கும் மடலவிழ்ந்த பசுங்குவளை மாலையும், புகழில் குறைவிலா வானமாமலைத் தவமுனிவரின் இரு தாமரைத் திருவடிகளின் ஆணையும் ஓரிடத்திலிருந்து நிலை பெற்று வளர்கின்ற கங்கை குலத்திற்குத் திலகம் போன்றவனே சப்பாணி கொட்டியருளே. சிறப்புப் பெறுகுருகை நகரில் உள்ள திருவேங்கட நாதனே சப்பாணி கொட்டியருளே.

## குறிப்புரை

மங்கலம்-பொலிவு; அடவி-காடு; அகடு-நடுப்பகுதி; சரம்-அம்பு; கதி-விரைவு; அடர்-தாக்கும்; ஒத்து - இசையில் தாளம்; பிரசம்-வண்டு; இசை-புகழ்; பதம்-பாதம்; அம்புயம்-தாமரை.

தலைவனின் தசாங்கத்தினை இப்பாடலில் பேசியிருப்பது குறிப்பிடற்பாலது. தலைவன் பத்து அங்கங்களாக மலை, நதி, நாடு, நகர், களிறு, புரவி, கொடி, முரசம், தார், ஆணை ஆகியவை உணர்த்தப்பட்டுள்ளன.

தாமிரபரணி நதிக்கரையில் உள்ள ஒன்பது திருமால் பெரும் பதிகளடங்கிய பகுதிக்கு 'திருவழுதி வளநாடு' என்ற பெயர் வழங்கிவந்தது. குருகன் மரபினர் பாண்டிய மன்னனுக்கு உட்பட்டுக் குறுநில மன்னராக இருந்து திருவழுதி வள நாட்டை ஆண்டு வந்ததாகக் கூறுவர்.

தென்கலை வைணவர்களுக்கு நாங்குநேரி வானமாமலை மடத்தின் ஜீயர் முக்கியமான தலைவராவார். எனவே இங்கு அவரது ஆணை சிறப்பிக்கப்படுகிறது.

பாண்டியன் மேகங்களைச் சிறை செய்தபோது, அவற்றைச் சிறை மீட்க இந்திரனால் போரிட்டும் முடியாத போது,வேளாளர்கள் அம் முகில்களுக்காகப் பாண்டியனிடத்தில்பிணையாக இருந்து கொண்டு முகில்களைச் சிறைவிடச் செய்தார்கள். அதனால் உலகத்தில் மழை பெய்தது. இதனால் வேளாளர் வெள்ளை

யானையும், வெண்குடையும், மேழிப் பதாகையும், செங்குவளை மலர் மாலையும், பூமிபாலர் என்னும் சிறப்புப் பெயரும் இந்திரனிடமிருந்து பெற்றார்கள் என்ற கதையும் உண்டு.

3. கொங்குமக் கந்தலுக் காரியங் கேவடமேற்
குடகமா றாடமீழங்
குழூஉக்கொண்டு கடகரியும்பேரியு முறைமுறை
கொணர்ந்துதிறை கொட்டவாகைத்
தொங்கல் கற்றியபடைத் தலைவர்கடை வாய்வழி
தொறுங்குருதி கொட்டவயிரச்
சுடர்முடி வணங்காத் தரியலர் கனெஞ்சகந்
துண்ணென்று பறைகொட்டவான்
திங்கள்வட் டக்குடை கவிக்குநின் னாடெலாம்
செம்பொன்மழை மாரிகொட்டத்
திண்புயக் கிரியினிற் றண்பனிக் குவளைசெந்
தேனாறுகொட் டவருள்செய்
சங்கநிதி மீனாட்சி நாதமால் மகிழ்தரச்
சப்பாணி கொட்டியருளே
தகுதிபெறு குருகைநகர் வருதிருவேங் கடநாத
சப்பாணி கொட்டியருளே. 24

## பொழிப்பு

கொங்கு, மக்கம், துலுக்கம், ஆரியம், கேவடம், மேலைக் குடகு, ஆறாடம், ஈழம் போன்ற நாடுகளின் வேந்தர்கள் மதக் களிற்றின் கூட்டத்தினையும், தங்களின் வெற்றிமுரசினையும் முறைப்படி திறையாகக் கொணர்ந்து அளிக்கவும், வெற்றிமாலை அணிந்த படைத் தலைவர்களின் கடைவாய் வழியாகக் குருதி வழியவும், வயிரங்கள் சுடர்விடும் மகுடமணிந்த தன்னை வணங்காத பகைவர்களின் நெஞ்சம் அச்சத்தினால் துண்ணென்று பறை போன்று ஓங்கி ஒலிக்கவும், வானில் வலம் வரும் திங்கள் போன்ற ஒளியுடைய வட்டமான வெண்கொற்றக்குடை கவிந்துள்ள நின்னுடைய நாட்டில் முழுவதும் சிவந்த பொன் மழையே மாரியாகப் பெய்யவும், வலிமையான தோள்களாகிய மலையினில் பூத்துள்ள குளிர்ந்த நீர்த்துளிகளையுடைய குவளை மலர்களினின்றும் தேன் ஆறாக வழியவும், அருளுள்ளம் கொண்ட சங்கநிதியுடைய மீனாட்சிநாதமால் மகிழ்ச்சி கொள்ளவும் சப்பாணி கொட்டியருள்வாயாக. தகுதி பெறு குருகைநகர் வரு திருவேங்கடநாதனே சப்பாணிகொட்டியருள்வாயாக.

## குறிப்புரை

மக்கம்-மக்கா (அரேபியா நாட்டகத்து நகரம்) துலுக்கம்> துலுக்கானம்-துருக்கி; கடகரி-மதயானை; பேரி-பேரிகை, வாகைத் தொங்கல்-போர், கல்வி, கேள்வி, கொடைகளில் வென்றோர் அணியும்மாலை; சங்கநிதி-குபேரனது நவநிதியுள் ஒன்று, சங்குருவாய் கிடக்கும் பொன்.

தன் தலைவன் கடல் கடந்தும் வெற்றி வாகை சூடியவன் என்பதனை மக்கம்,ஈழம் போன்ற நாடுகளைச் சுட்டுவதன் மூலம் உணர்த்துகிறார்.

'வம்புமீறு கொங்கர்
சேரு மிந்துனராகலிங்க தேசாங்க-ராருநின்று
கை குவிக்க வீழ்த்தார் கப்பலேறக் குவளை
மை பிடித்த வேற்கண் மடமாதரொடு-மெய்பதறி
வங்கர் குடகர் வடுகர் கருநாடர்
சிங்களர் மராட்டர் சிந்து தேசத்தா ரங்கங்கே
செம்பொன் குவித்துத் திறையளக்க'

எனத் தன் தலைவன் பெற்ற சீராக, 'வண்டுவிடுதூதிலும்' இப் புலவர் இயம்பியுள்ளார்.

4. ஒத்தொழுகு சுவைமதுர நீருற்றிருந்து பொரு
ளுறையுமைந் திணையளாவி
ஒங்குதலை வரையகன் றணைதலைப் பெய்துவள
முள்ளபல துறைபடிந்து
கொத்திலகு சந்தங் கலந்துதிரை வாரிசூழ்
குவலயமெலாம்பரந்து
கூடற் பெருஞ்சங்க முழுவதுங் கைக்கொண்டு
கூண்டசை வலமடுத்து
முத்தக வலங்கார மேய்ந்து பொன்பூமணி
முதற்சீ ரகத்தடக்கி
முத்தமிழ்ப் பாவாணர் நின்புகழ் வளம்பாடு
முதுகவிதை போற்றெளிந்து
தத்திய தடந்திரைப் பொருனா நதித்துறைவ
சப்பாணி கொட்டியருளே
தகுதிபெறு குருகைநகர் வருதிருவேங் கடநாத
சப்பாணி கொட்டியருளே. 25

## பொழிப்பு

இனிமையான இசையுடன் வழிகின்ற தேன்போன்ற சுவை யான நீருற்றிலிருந்து ஐந்திணை நிலங்களிலும் உள்ள பொருள்

களையெல்லாம் தன்னுள் கலந்து, உயர்ந்துள்ள மலையினைக் கடந்து, அணையில் வீழ்ந்து, வளம் நிறைந்த பல துறைகளில் படிந்து, திரண்டு விளங்குகின்ற சந்தன மரங்களின் மணங் கலந்து, அலைகடல் சூழ்ந்த பூமி முழுவதும் பரந்து, திரளான பெரிய சங்குகளை முழுமையாகக் கைப்பற்றி, கூண்டசை வல மடுத்து, முத்தக அலங்காரம் பொருந்தி, பொன், பூ, மணி முதலான சிறந்த பொருள்களைத் தன்னகத்தே அடக்கி, முத்தமிழில் வல்ல பாவாணர் நின் இசையினை, வளத்தினைப் பாடுகின்ற இனிமையில் முதிர்ந்த கவிதைபோல் தெளிந்து, குதித்துத் தாவிச் செல்லும் குளிர்ந்த நீர் ததும்பி வழியும் பொருனை நதியை உடையவனே சப்பாணி கொட்டியருள். சிறப்பு பெறு குருகை நகர் வரு திருவேங்கட நாதனே சப்பாணி கொட்டியருள்.

## குறிப்புரை

கொத்து-திரள், சந்தம்>சந்தனம், திரை-அலை; வாரி-கடல்; குவலயம்-பூமி, கூடல்-திரள், முத்தகம்-செய்யுள் வகை நான்கனுள் ஒன்று, இதனுள் ஒவ்வொரு செய்யுளும் தனியே நின்று ஒரு பொருள் பயந்து முற்றுப் பெறுவதாகும்.

இப்பாடல் பொருனைக்கும், கவிதைக்கும் சிலேடையாகப் பொருந்துகிறது. இனிமையான இசையுடன் கூடிய, தேன் போன்ற சுவைமிகுந்த நவில்தொறும் புதுநயம் பயக்கும் சொற்களாகிய ஊற்றுகளிலிருந்து, முதல், கரு, உரிப்பொருள்களைத் தன்னிடத்தே கொண்ட குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை எனும் ஐந்திணைகளையும் பெற்று, மிகுந்த சிறப்புடைய தலைவரைத் தன்னுள்ளே புகழ்ந்து, பொருள்வளம் நிரம்பிய பல துறைகளில் (திணைகளின் உட்பகுப்புகள்) படிந்து, பலவகை ஓசைகளை (சந்தம்) இணைத்து, கடல் சூழ்ந்த உலகம் எலாம் புகழ்பெற்று, மதுரை நகர் வளர்த்த சங்கங்களின் நூல்களை யெல்லாம் கைக்கொண்டு (சிறந்த நூல்களின் கருத்துகளைப் பாடல்கள் உட்கொளலை இவண் சுட்டுவதாகக் கொள்ளலாம்) கூண்டசை வலமடுத்து, முத்தக வலங்காரம் பொருந்தி, பொன், பூ, மணி முதலானவற்றைப் பாடலின் முதற் சீராகக் கொண்டு, அமைதல், எனும் நிலையில் கவிதை இங்குச் சிறப்பிக்கப் படுகிறது.

தலைவன் நாட்டின் நீர்வளம் இங்குப் புகழ்ந்துரைக்கப் படுகிறது. கவிதையைக் கோதாவரியுடன் இணைத்து நோக்கியக் கம்பனின் கவிதையே இப்பாடலுக்கு அடிப்படை என்பது வெளிப்படை. கம்பனின் அப்பாடல்.

புவியினுக்கு அணியாய் ஆன்ற பொருள் தந்து புலத்திற்றாகி
அவியகத் துறைகள் தாங்கி ஐந்திணை நெறி அளாவி,
சவியுறத் தெளிந்து தண்ணென் ஒழுக்கமும் தழுவி, சான்றோர்
கவியென கிடந்த கோதாவ ரியினை வீரர் கண்டார்

(ஆரணிய. சூர்ப். 1)

பாடலின் முதற்சீராக அமையக் கூடியனவற்றைப் புலவர் சுட்டியிருப்பது, அச்சீர் பத்துப் பொருந்தங்களும் பெற்று தலைவனுக்குத் தீங்கு நேரா வண்ணம் பாடல் அமைய வேண்டும் எனும் குறிப்பினைப் புலப்படுத்தி நிற்கிறது எனலாம்.

5. கொந்தலர் மலர்க்குழல் பேதைமட வாரிருகை
கொட்டுநெடு வீதிதோறுங்
குங்குமச் சந்தனக் கலவை திகழ்பன்னீர்க்
குடமொண்டு கொட்டவிண்ணோர்
கந்தநறு மலர்மாரி கொட்டமனை தோறுமிக்
கானமண முரசுகொட்டக்
கற்பக தருசுரபி என்னக் கொடுப்பதாற்
கறங்கு கொடை முரசுகொட்ட
நிந்தனை புரிந்தமாற் றலர்கெடி கலங்கநன்
நெறிவிசய முரசுகொட்ட
நிருபர்மன மகிழ்சுப்ர மணியமக ராசன்மனு
நீதிதவ றாதுவந்த
சந்ததி நிறைந்தமதி கொண்ட மதரூபனே
சப்பாணி கொட்டியருளே
தகுதிபெறு குருகைநகர் வருதிருவேங் கடநாத
சப்பாணி கொட்டியருளே. 26

## பொழிப்பு

கொத்தாக மலர்கின்ற மலர்களைச் சூடிய கூந்தலை உடைய பேதைப் பருவ மகளிர் தம் இருகை கொட்டி விளையாடும் நீண்ட வீதிகள் தோறும் குங்குமமும், சந்தனமும் கலந்த கலவையினை உடைய பன்னீரைக் குடத்தால் மொண்டு கொட்டவும் தேவர்கள் மிகுந்த வாசனையுடைய நல்ல மலர்களை மழையாகக் கொட்டவும், வீடுகள் தோறும் சிறப்பான மணமுரசு கொட்டவும் கற்பகத்தரு போன்றும், காமதேனு போன்றும் வறியோர்க்கு

வழங்குவதால் ஒலிக்கின்ற கொடை முரசு கொட்டவும், இகழ்ச்சி செய்த பகைவர்களின் ஊரார் கலங்க சிறந்த நெறியின் வழிச் செல்லும் வெற்றிமுரசு கொட்டவும், அரசர்கள் மனமகிழ மனுநீதி தவறாதபடி ஆளும் சுப்பிரமணிய மகராசனின் சந்ததியான அறிவு நிறைந்த அழகிய வடிவினனே சப்பாணி கொட்டியருள். தகுதி பெறு குருகை நகர் வரு திருவேங்கடநாத சப்பாணி கொட்டியருள்.

## குறிப்புரை

கொந்தலர்-கொத்தாக மலர்கின்ற; மொண்டு-எடுத்து; கந்தம்-வாசம்; சுரபி-காமதேனு; நிந்தனை-இகழ்ச்சி; மாற்றலர்-பகைவர்; கெடி-ஊர்; கறங்கு-ஒலி; நிருபர்-அரசர்; மனுநீதி-தருமநூல் பதினெட்டனுள் ஒன்றான மனுதர்ம சாத்திரம்.

6. சுந்தர மழுந்திக் கடைந்த பவளப்பொலன்
தூணிடத் தும்பளிங்குச்
சுவர்த்தல நெருக்குமணி மாடத்தி னீலத்
துகிற்கொடி விசும்படர்ந்து
செந்தழற் பொறிகக்கும் ஓராயி ரங்கதிர்ச்
சேட்டிளம் பருதிவெம்மைச்
செம்மையுட லந்தழீஇத் தைவரல் விளங்குமத்
தினகரக் கடவுளைச் சென்று
உந்திய கணபணச் சிறுவரிப் பரியநெட்
டுடல்விடப் பகுவாயெயிற்று
உக்கிரக் கரும்பாம்பு தீண்டிக் கிடந்தன்ன
உயர்நெடும் புரிசைநேமிச்
சந்திரப்பட லத்தளவு தென்குருகை யூர்கிறைவ
சப்பாணி கொட்டியருளே
சரசகுண மீறுதுவசன் றுரைதிருவேங் கடநாத
சப்பாணி கொட்டியருளே. 27

## பொழிப்பு

அழகு பொருந்திக் கடையப் பெற்ற பவளம் பதிக்கப்பட்ட பொன் தூணிடத்தும், பளிங்குச் சுவர்த் தலத்திலும் செறிவாகப் பதிக்கப்பட்டுள்ள மணிகளையுடைய மாடத்தின் உயர்த்தப் பட்ட நீலநிறத்துணிக் கொடியானது ஆகாயத்தைப் பொருந்தி, சிவந்த நெருப்புப் பொறிகளை வெளிப்படுத்துகின்ற ஓராயிரம் கதிர்களையுடைய வெகுதொலைவில் உள்ள இளம்

சூரியனது வெம்மையும் செம்மையும் உடைய உடலைத் தழுவித் தடவுதலால் விளக்கம் பெறுகின்ற அந்த ஞாயிற்றுக் கடவுள்; அடிவயிற்றிலே புள்ளிகளையும், சிறிய வரிகளையும், பெரிய நெடியஉடலையும் விடம் கக்குகின்ற பிளந்த வாயினையும், பற்களையும் உடைய கொடிய பாம்பினால் தீண்டப்பட்டுக் கிடப்பது போன்று, உயர்ந்த நெடிய மதில் ஆனது வட்ட வடிவமான திங்களை அடைந்து அதனை அளாவிக் கிடக்கின்ற தென் குருகையூர்த் தலைவனே சப்பாணி கொட்டியருள். இனிய குணங்களை மிகுதியாக உடைய, கொடியுடைய துரை திருவேங்கட நாதனே சப்பாணி கொட்டியருள்.

## குறிப்புரை

சுந்தரம்-அழகு; நெருக்கி-செறிவாக; துகில்-துணி; விசும்பு-ஆகாயம்; கக்கும்-வெளிப்படுத்தும்; உந்தி-வயிறு; பகுவாய்-பிளந்தவாய்; எயிறு-பல்; உக்கிரம்-கடுமையான கோபம்; புரிசை-மதில்; நேமி-வட்டம்;

தலைவனின் கொடியினையும், மதிலையும் சிறப்பிக்கும் இப்பாடலில் சூரியன் சந்திரனுக்கும், பாம்பு மதிலுக்கும் உவமையாக்கப் பட்டுள்ளது. 'நெடுங்கொடி நிழன் மதி நெற்றி தைவர' (88) எனச் சிந்தாமணியும் சிறப்பிக்கும்.

7. மருவொழுக் கும்பொருட் பாகங் கனிந்ததமிழ்
வாணர்க்கு மாதுலர்க்கு
மறையவர்க் கும்பொற் சரக்கறை திறந்துமுழு
மாணிக்க வெயில்பரப்பும்
குருமணிக் குன்றுமுதல் நவமணிக் குன்றமும்
குன்றாத தமனியப்பொற்
குன்றமும் பவளநெற் குன்றமு மருந்துகிற்
குன்றமும் சத்தமேகக்
கருவென்ன வள்ளலிரு பத்தொரு குழாமென
காமதே னுவுமெனச்சொற்
கன்னனென வொளிர்சங்க நிதிபற்ப நிதிஎனக்
கப்புவிடு கற்பகப்பூந்
தருவெனத் தருகொடைக் கங்கை குலதிலகனீ
சப்பாணி கொட்டியருளே
தகுதிபெறு குருகைநகர் வருதிருவேங் கடநாத
சப்பாணி கொட்டியருளே. 28

## பொழிப்பு

கற்கக் கற்கப் புதிய புதிய சுவைகளைத் தரும் பொருள் செறிந்த தமிழ்ப் பாடல்களைப் பாடும் புலவர்களுக்கும் வறியவர் களுக்கும், அந்தணர்களுக்கும், பொன் நிறைந்த அறையைத் திறந்து பருத்த மாணிக்கங்கள் ஒளி பரப்பும் சிறிய மணிக்குன்று முதல், நவமணிகள் நிறைந்த குன்றினையும், வற்றாதபொற் குன்றத்தினையும், பவளம் போன்ற நெற் குவியலையும். அருமை யான துகில் நிறைந்த குன்றத்தையும் ஒலிக்கின்ற நீர் நிறைந்த மேகங்களைப் போன்றும், இருபத்தொரு வள்ளல்களின் குழாம் போன்றும், காமதேனு போன்றும், கொடையில் சிறந்தவன் எனச் சிறப்பிக்கப்படும் கர்ணன்போன்றும், சங்கநிதி, பதும நிதி, போன்றும், கிளைகள் சூழ்ந்த கற்பகத்தரு போன்றும் வாரி வழங்குகின்ற, கொடையிற் சிறந்த கங்கை குலத்திற்குத் திலகம் போன்றவனே, சப்பாணிகொட்டியருளே. தகுதி பெறு குருகை நகர் வருகின்ற திருவேங்கட நாதனே சப்பாணி கொட்டியருளே.

## குறிப்புரை

ஆதுலர்-வறியவர்; சரக்கறை-பொன் முதலானவற்றைப் பாதுகாக்குமிடம்; நவமணி-கோமேதகம், நீலம், பவளம், புட்ப ராகம், மரகதம், மாணிக்கம், முத்து, வைடூரியம், வைரம்; தமனியம்-பொன்; சத்தமேகம்-ஒலிக்கின்றமேகம்; வள்ளலிருபத் தொரு குழாம்-முதல், இடை, கடையேழு வள்ளல்கள், கன்னன்-கர்ணன், சங்கநிதி-குபேரனது நவநிதியுள் ஒன்று.

பற்பநிதி > பதுமநிதி தாமரை வடிவினதாகிய ஒருநிதி. இது பாற்கடலில் தோன்றியது. எடுக்க எடுக்கக் குறையாது வளரும் தன்மையுடையது.

தலைவனின் கொடைத்தன்மை இப்பாடலில் புகழ்ப்படு கிறது. தலைவனைச் சிறப்பிக்கப் பல உவமைகளை அடுக்கியுரைத் திருப்பது தலைவன் பால் நூலார் கொண்டுள்ள பற்றை உணர்த்துகிறது.

### 5. முத்தப் பருவம்

கழையீன்ற முத்தந் திறங்காம சாபங்
கலந்தமுத் தென்றுகருதேம்
கதலிமுத் தந்தலை விரிக்குங் குருத்திற்
கருத்தங்கு மென்றுகொள்ளேம்

புழையீன்ற வேய்முத்த மாயர்செங் கனிவாய்ப்
புறத்தெச் சிலென விரும்பேம்
பூங்கமல முத்தங் கருஞ்சேற்று நாற்றம்
புகுந்ததென் றாசைப்படேம்
தழையீன்ற பச்சிளங் கமுகமுத் தங்குலைத்
தலைதூங்கு மென்றுமதியேம்
தன்னடிக் கீழ்விழுந் தரியுண்டு கட்டுண்ட
சாலிமுத் தங்கைத்தொடேம்
மழையீன்ற முத்தமொரு முத்தமோ செம்பவள
மணிவாயின் முத்தமருளே
வளமைதிகழ் குருகைநகர் வளர்திருவேங் கடநாத
மணிவாயின் முத்தமருளே.

## பொழிப்பு

ஆற்றலுடைய மன்மதனுக்கு வில்லாகப் பயன்பட்டுப் பிறருக்குத் துன்பம் தருதலால் கரும்பு நல்கும் முத்தினை விரும்ப மாட்டோம். வாழையின் முத்து விரிகின்ற குருத்தில் அதன் கரு தங்குமாதலால் எடுக்க மாட்டோம். துளையுடைய மூங்கில் தந்த முத்தம், இடையர்களின் சிவந்த கனிவாய்ப் புறத்து எச்சில் பட்டது என்று மதிக்க மாட்டோம். தாமரை தருகின்ற முத்தில் கறுத்த சேற்றின் நாற்றம் புகுந்தது என்று அதன் மீது ஆசைப்பட மாட்டோம். தளிர்களை உடைய பசுமையான இளமைத் தன்மையுடைய கமுக மரத்தில் தோன்றும் முத்து அதன் பாளையில் தூங்குவதால் பொருட்படுத்தமாட்டோம். தன்னடியின் கீழத்தலை சாய்ந்து, அரிவாளால் அரியப்பட்டுக் கட்டுண்டதால் சாலி நெல்தரும் முத்தைத் தொடமாட்டோம். நீருண்ட மேகத்தில் தோன்றும் முத்தும் முத்தாகுமோ? ஆதலால் உன்னுடைய சிவந்த பவளம் போன்ற வாயினால் எங்களுக்கு முத்தம் தந்தருள். வளமை நிறைந்த குருகைநகர் வளர் திருவேங்கடநாதனே உன் அழகிய வாயினால் முத்தம் தந்தருள்.

## குறிப்புரை

கழை-கரும்பு; காமசாபம்-மன்மதன் பெற்ற சாபம்; கதலி-வாழை; புழை-துளை; வேய்-மூங்கில், ஆயர்-இடையர்; தழை-தளிர்; மழை-நீருண்ட மேகம்;

முத்தின் பிறப்பிடங்களைச் சுட்டி அவற்றின் சிறுமையினையும் தலைவன் தரும் முத்தத்தின் சிறப்பினையும் காட்டிப்

பாடுதல் பிள்ளைத்தமிழ்ப் புலவர்களிடையே பரவலாகக் காணப்படும் ஒன்று. மணவைத் திருவேங்கடமுடையான் பிள்ளைத்தமிழ் தரும்

சீத நறுங்கடல் விளை முத்து வலைப்படும்
சிறுமுத் தேகண்ணார்
செங்கழை தங்கிய முத்தெனி லாலை
செறிந்துடை படுமுத்தே
தாதுறு பங்கய முத்தோ பங்கந்
தானுறு கறைமுத்தே
தந்தா வளமுத் தாமிட நடுவுட்
டங்கிய குறைமுத்தே
சோதி நறுங்கழை முத்தோ தீவாய்ச்
சுடுதுளை படுமுத்தே
சொரிமுகில் முத்தோ விடியுறு முத்தே
தோமில் குணத்தொளிசேர்
முதுரை வேதம் கனிகனி வாயால்
முத்த மளித்தருளே
முகிலே புகழ்மண வாபுரி மாலே
முத்த மளித்தருளே.

என்னும் பாடலை இங்கு ஒப்பு நோக்கலாம்.

இந்நூலார் பிறவற்றினை நீக்குவதற்கு நவிலும் காரணங்கள் சிறப்புடையனவாக அமைகின்றன.

2. சுழிக்கும் பெருக்காறு தலைவைத்த கனைகடற்
சுரிமுகச் சங்கமீன்ற
சுடர்முத்த முரிதிரைக் கையா லொதுக்குண்டு
சுறவுமுட் கீறியுடலங்
கழிக்கும் புலால்மணங் கமழுமன் றிச்சுவை
கனிந்துமது ரங்குழையுமோ
கரடதட மடையருவி கான்றொழுக் குங்கட
களிற்றுவெண் கோட்டுமுத்தங்
கொழிக்கும் பனிப்படல நெடுவரைக் கல்லதர்
கொதித்துவெப் பழலுமல்லாற்
குருகைநர வீரன் பெரும்புகழ்ச் சரிதைக்
கொழும்பரி மளங்கமழுமோ
வழிக்கும் பசுந்தே னுவட்டறா தமுதொழுகு
மழலைவாய் முத்தமருளே
வளமைதிகழ் குருகைநகர் வளர்திருவேங் கடநாத
மழலைவாய் முத்தமருளே. 30

## பொழிப்பு

சுழித்துச் செல்லும் வெள்ளத்தினையுடைய ஆற்றினைத் தன் தலைவாயில் கொண்டுள்ள ஒலிக்கின்ற கடலின் சுருண்ட முகத்தினையுடைய சங்குகள் ஈன்ற ஒலியுடைய முத்துகள் அலைகளாகிய கைகளால் ஒதுக்குண்டு, சுறா மீனின் முட்கள் கீறலால் தன் பகுதி குறைந்து, புலால் மணம் பெறுமே யன்றி இன்சுவை நிறைந்து இனிமை தழைக்குமோ? தழைக்காது. கபாலத்துளைகளிலிருந்து மதமாகிய அருவி ஒழுக்கும் மதகளிற்றின் வெண்கோடு தரும் முத்தம், பனிப்படலம் சூழ்ந்த நெடிய மலைகளையுடைய பாதையிலே சிதறிக் கிடப்பினும் வெப்பத்தால் கொதித்து எரிவது அல்லால் குருகை நகர வீரனின் மிகுந்த புகழையுடைய வரலாற்றிற்கு உள்ள நறுமணம் பெற்று வீசுமோ? வீசாது. வடிக்கும் பசுமையான தேன்போன்று தெவிட்டாது அமுது ஒழுகுகின்றமழலைபேசும்வாயினால்முத்தம் தந்தருள். வளமை நிறைந்த குருகை நகரில் வளர்கின்ற திருவேங்கட நாதனே முத்தம் தந்தருள்.

## குறிப்புரை

கனை-ஒலி; சுரிமுகம்-சுருண்ட முகம்; சுறவு-சுறாமீன்; கழிக்கும்-உடைக்கும்; குழைதல்-தழைத்தல்; கரடம்-யானையின் கபாலத்தில் மதநீர் வழியும் துளைகள்; சரிதை-வரலாறு பரிமளம்-மணம்.

3. ஆறாத வெங்கலிக் கோடைக்கு நிழலாக
ஆலிளஞ் சோலைசுற்றி
ஆர்வநிறை மணவைநகர் வருசுப்ர மணியமால்
அன்புபெறு செல்வமருகா
பேறா தரிக்குநதி குலதீப மிவனென்று
பெயர்படைத் திசைநிரப்பும்
பிள்ளைமா ணிக்கமா மீனாட்சி நாதவேள்
பின்வந்த தொட்டயோகா
தேறாத பருவலர் குழாங்கொண்டு வேண்டுவன
திறைகுவித் தடிபராவத்
தென்பாண்டி நாடாள வருசாமி நாதேந்தர
செல்வன்மெய்த் துணையானவா
மாறாத கனயோக நரவாக னாதிபதி
மணிவாயின் முத்தமருளே
வளமைதிகழ் குருகைநகர் வளர்திருவேங் கடநாத
மணிவாயின் முத்தமருளே. 31

## பொழிப்பு

நீங்காத துன்பந் தருகின்ற வெம்மையுடைய கோடைப் பருவத்திற்கு நிழல் தரும் படியாக ஆலமரங்களை ஆங்காங்கே வளர்த்து, உன்பால் விருப்பம் நிறைந்த மணவை நகர் சுப்பிரமணியமாலின் அன்பினைப் பெற்ற செல்வ மருகனே! பெரிய ஆதரவினை நல்கும் கங்கா குலத்தின் விளக்கு இவன் என்று பெயர் பெற்று, எத்திசையிலும் புகழ் நிரப்புகின்ற பிள்ளைக் குலத்தின் மாணிக்கம் போன்று சிறந்த மீனாட்சி நாதவேளின் பின் தோன்றிய தொட்டதெல்லாம் சிறப்பாகத் துலங்குகின்ற மேன்மையினை உடையவனே! பொருந்தாத பகைவர் கூட்டம் நீ வேண்டுவனவற்றைக் கொண்டுவந்து திறையாகச் செலுத்தி உன் திருவடிகளைப் போற்ற, தென்பாண்டி நாட்டினை ஆளவந்துள்ள சாமிநாதேந்திர செல்வனின் உண்மை யான துணைவனே! நீங்காத மிகுந்த யோகத்தினை உடைய குபேரனே! நின் அழகிய வாயின் முத்தம் அருள். வளமை திகழ் குருகை நகரில் வளர் திருவேங்கட நாதனே உன் அழகிய மணி வாயினால் முத்தமருளே.

## குறிப்புரை

ஆறாத- குறையாத; கலி-துன்பம் தருகின்ற; வெம்மை-வெப்பம்; ஆல்-ஆலமரம்; ஆர்வம்-விருப்பம்; பேறா தரிக்கும் > பேராதரிக்கும்-பெரிய ஆதரவினை நல்கும். இசை-புகழ்; தொட்ட யோகன்-வழக்குச் சொல்; தேறா-பொருந்தாத; நரவாகனாதிபதி-நரன் என்னும் இயக்கனை வாகனமாகக் கொண்ட குபேரன்.

4. பதிக்குந் தடந்திரைப் பாற்கடல் கடைந்தநின்
பத்மரே கைக்கர தலப்
பத்மரா கத்தையல் லால்வணிகர் விலையிடும்
பத்மரா கத்தைவேண்டோங்
கதிக்கும் பொருட்சுவைச் செம்பாக முத்தமிழ்க்
கவிஞர்பால் வயிரங்கொளேம்
கல்லா திருப்பவர் விருப்பவள முஞ்சென்று
கைக்கொளேம் மிக்கபுலவோர்
மதிக்குந்தி யாகமழை மாரிசுப் பிரமணியன்
வளர்குருகை மாநகர்க்கு
மரபுபெறு கங்கா குலத்திற்கும் வண்பொதிய
மால்வரைக் கும்பொருனைமா

நதிக்கும் புகழ்ப்பாண்டி நாட்டுக்கு மனுவேந்த
நகைபழகு முத்தமருளே
நடனமிடு பரிநகுல துரைதிருவேங் கடநாத
நளினவாய் முத்தமருளே. 32

## பொழிப்பு

சுருண்டு நீண்ட அலைகளை எழுப்பும் பாற்கடலைக் கடைந்த நின்பத்மரேகை பாய்ந்த கரமாகிய பத்மராகத்தை யல்லாமல் வணிகர்கள் விலைபேசுகின்ற பத்மராகத்தை வேண்டோம். மிகுந்த பொருட்சுவை செறிந்துள்ள இனிமையான முத்தமிழ்க் கவிஞர்களின்பால் பகைமை கொள்ளோம். கல்லாதிருப்பவர் விரும்புதற்குரிய பவளங்களைத் தரினும் அவர்களிடம் சென்று அதனைப் பெறமாட்டோம். புலமையில் சிறந்த பெரியோர்கள் மதிக்கின்ற தியாகத்தன்மையுடைய மாரி போன்று வழங்குகின்ற சுப்பிரமணியனால் வளர்ச்சி பெறுகின்ற குருகை மாநகர்க்கும். மேன்மை பெறு கங்கா குலத்திற்கும், வளம் நிறைந்த பொதிய மலைக்கும், பெருமை பொருந்திய பொருனை நதிக்கும் புகழிற் சிறந்த பாண்டி நாட்டிற்கும் நீதி வழுவாத மனு வேந்தனே! உன்னுடைய அன்பு கலந்த முத்தமருள். குதிரையைச் செலுத்துவதில் சிறப்புப் பெற்ற நகுலன் போன்ற துரை திருவேங்கடநாதனே உன் அழகிய வாய் முத்தம் தருவாயாக.

## குறிப்புரை

பதிக்கும்-எழுப்பும்; தடந்திரை-சுருண்ட அலை; பத்மரேகை தாமரைரேகை, ஒருவனது அதிட்டத்தைக் குறிப்பதாகக் கருதப் படும் தாமரை வடிவமான கைரேகை; பத்மராகம்-மாணிக்க வகையுள் ஒன்று; கதிக்கும்-நிறைக்கும்; செம்பாகம்-இனிமை; வயிரம்–பகை; நகுலன்-பாண்டவர் ஐவரில் ஒருவன்.

புலவர்கள் தம் புலமை யறிந்து புரவலன் நல்கும் பொருளையே பெற்றுக் கொள்வர். தன் பெருமையறியாது எப்பொருள் வழங்கினும் பெறார்.

பெருஞ்சித்திரனாரின்,

குன்று மலையும் பலபின் னொழிய
வந்தவெண் பரிசில் கொண்டனென் செலற்கென
நின்ற என்னயந் தருளி யீதுகொண்
டீங்கனஞ் செல்க தானென வென்னை
யாங்கறிந் தனனோ தாங்கருங் காவலன்

காணா தீத்த விப்பொருட் கியானோர்
வாணிகப் பரிசில னல்லேன் பேணித்
தினையனைத் தாயினு மினிதவர்
துணையள வறிந்து நல்கினர் விடினே (புறம்: 208)

எனும் இப்பாடல் அதனைத் தெளிவுறுத்தக் காணலாம்.

5. உழவுகொழு மீதியிற் செல்வம் படைத்தாறில்
ஒன்றரசர் கூறுதள்ளி
உள்ளவே வகையினிற் றென்புலத் தேவருக்
கொருகூறு மெக்காலமும்
விழைவுமலி தரநின்று வழிபடுங் கடவுட்கு
வேண்டுமொரு கூறுமன்றி
வெங்கலிப் புலிதொடர மெலிவொடு வரும்புது
விருந்தினர்க் கொருகூறுமுற்
பழமைதழு வியதமர்க் கொருகூறு நின்றுனது
பாகமொரு கூறுமாகப்
பகுத்துண் டுடுத்துமணி வாசலிற் கட்டிய
பசும்பொன்மே ழிக்கொடியின்மேல்
குழவிமதி தவழ்மதிற் குருகைநக ராதிபதி
கொவ்வைவாய் முத்தமருளே
கொடைமீறு துரைதிருவேங் கடநாத பூபால
கொவ்வைவாய் முத்தமருளே. 33

## பொழிப்பு

வளமை நிறைந்த வேளாண்மைத் தொழிலில் கிடைத்த மிகுதியான செல்வத்தை ஆறுகூறுகளாக்கி, ஒன்றினை அரசர்க்கும், தென்புலத்தவராகிய முன்னோருக்கு ஒரு கூறும், மிகுதியான விருப்பத்துடன் நின்று தான் வழிபடுகின்ற தெய்வத்திற்கு ஒருகூறும், மிகக்கொடிய வறுமையாகிய புலி தன்னைத் தொடர ஆற்றாது தளர்ச்சியுடன் வரும் புதிய விருந்தினருக்கு ஒருகூறும், முன்பிருந்தே பழகி உறவில் பழமை கொண்டுள்ள சுற்றத்தாருக்கு ஒரு கூறுமாக ஒதுக்கி, மீதியுள்ள ஒரு கூறினை உனது பங்காகக் கொண்டு, தன்னிடம் உள்ளதை அனைவருக்கும் பகுத்து உண்டு உடுத்து வாழ்கின்ற, மணிவாசலில் கட்டிய பசுமையான பொன்னாலாகிய மேழிக் கொடியின்மேல் இளமையுடைய பிறைச்சந்திரன் தவழும்படி உயர்ந்துள்ள மதிலையுடைய குருகை நகருக்கு உரிமையாளனே, உன்னுடைய கொவ்வைப் பழம்போன்று சிவந்த வாயினால் முத்தம் தந்தருளே. கொடையில் நிறைந்த துரை திருவேங்கடநாத பூபாலனே உன்னுடைய கோவைப்பழ நிறவாய் திறந்து முத்தம் அருளே.

## குறிப்புரை

கொழு-செழிப்பு; வகையினில் - முறையாக; தென்புலத் தேவர்-இறந்த முன்னோர்;இவர்களுக்குப் பிண்டோதகக் கிரியை பண்ணுதல் தொன்று தொட்டுவரும் மரபாகும். 'தென்புல வாழ்நர்க் கருங்கடனிறுக்கும் பொன்போற் புதல்வர்' என்பது புறநானூறு. (9) விழைவு-விருப்பம்; மலி-மிகுதி; கலி-வறுமை; மெலிவு-தளர்ச்சி.

பகுத்துண்டு பல்லுயிர் ஓம்பும் தலைவனின் மாண்பு இவண் விளக்கம் பெறுகிறது. இல்லறத்தான் கடமையாக வள்ளுவர்,

> தென்புலத்தார் தெய்வம் விருந்துஒக்கல் தான்என்றாங்கு
> ஐம்புலத்தாறு ஓம்பல் தலை (43)

என்று குறித்திருப்பதும் நோக்கற்பாலது.

6. தெறிக்குந் திவலைத் தரங்கநெடுந்
திரைநீ ருவரி சுவறிடவெண்
டிசைக்குந் தனிக்கால் நிறுத்துமெட்டுத்
திரிகட் கரடந் தடுமாறப்
பொறிக்குங் கனகத் தகட்டுநெட்டுப்
பொருப்புந் திருகி நிலைபெயரப்
பொருந்தார் புரத்திற் புகுந்துமதிட்
புரிசை இடியத் தயங்குநிலா
வெறிக்குந் தடங்கோ புரத்தைவளைத்து
இடியே றென்ன முழக்கிவெகுண்
டிடித்து நிகளந் தெறிப்பஒன்னார்க்கு
இலக்காம் விசய நெடுங்கொடியை
முறிக்குந் தடக்கைக் கடாக்களிற்று
முகிலே முத்த மளித்தருளே
முறைமைத் திருவேங் கடநாத
முகிலே முத்த மளித்தருளே. 34

## பொழிப்பு

சிறிய நீர்த்துளிகள் தெறிக்கின்ற சுருண்ட நீண்ட அலைகளையுடைய கடல்நீர் வற்றவும், எண்டிசைகளிலும் பூமியைத் தாங்கும் ஒப்பற்ற வலிமை மிக்க கால்களாக நிற்கும் எட்டுத்திக்கு யானைகளும் தடுமாறவும், பொன்தகட்டினைப் பதித்தது போன்று விளங்குகின்ற மிக நீண்ட மலையும் இருப்பிடத்தை விட்டுப் பிறழ்ந்து தடுமாறவும், பகைவரின் ஊருள் புகுந்து உயர்ந்த மதில் இடியவும், ஒளிவிடுகின்ற வெண் நிலவு பொழியும் பெருமை வாய்ந்த கோபுரத்தை வளைத்து,

இடிபோன்று முழக்கிக் கோபங் கொண்டு இடித்து, தன் காலில் கட்டியுள்ள சங்கிலி அற்று வீழும்படி பகைவர்களின் குறிப் பொருளாகிய வெற்றி நெடுங் கொடியை முறிக்கும் தும்பிக்கை யினையுடைய மதகளிற்றுக்கு உரிமை யுடைய முகிலே முத்தம் தந்தருளே. நல்ஒழுக்கம் நிறைந்த திருவேங்கடநாதனே முத்தம் தந்தருளே.

## குறிப்புரை

*தரங்கம்-அலை; திரை-சுருண்ட; உவரி-கடல்; எட்டுத்திரி கட்கரடம்-எண்திசை யானைகள் - ஐராவதம், புண்டரீகம், வாமனம், குமுதம், அஞ்சனம், புட்பகந்தம், சார்வபூமம், சுப்பிர தீபம். நெட்டு-மிகநீண்ட; பொருந்தார்-பகைவர்; தயங்கு-ஒளி விடு; நிகளம்-யானைகளின் கால்களில் கட்டும் சங்கிலி; ஒன்னார்-பகைவர், இலக்கு-குறிப்பொருள்; முறைமை-ஒழுக்கம்.*

*தலைவனின் பத்து அங்கங்களுள் ஒன்றான களிற்றின் பெருமை இவண் விரித்துரைக்கப்படுகிறது.*

*இந்நூலார் தன் தூது நூலில் தலைவனின் தசாங்கத்தைப் பாடுகையில் களிற்றினை,*

*தறியைத் தகர்த்துருட்டிச் சங்கிலியைத் தூளாக்கி*
*முறியநிக ளந் தெறிக்க மோதிக்—கறுவிச்*
*சினத்துவீ ரிட்டுத் திகழமத முற்றிக்*
*கனத்தமே கத்தைக் கலக்கிப்-பணைக்கையினா*
*லட்டகிரி வெற்புநிர்த்தூ ளாகப் பிசைந்துதிர்த்து*
*வட்ட நெடு வாரிதியை வாய்மடுத்து-முட்டிமுட்டி*
*யண்டத் தையுங்குலுக்கி யாக்கிரமித் தடாசிருவ*
*கண்டத்தையும் புரட்டிக் கண்டித்து-விண்டலத்தை*
*யெட்டியெட்டி யெற்றியெற்றி யிட்டகற்ப கச்சினைக்குள்*
*முட்டியிப்பு றப்படுத்தி மொய்த்துரத்து,—வட்டமிட்ட*
*சக்கர வெற்பினைக் கடக்க சத்தமுளத்தியக் கடற்சி*
*லக்கியுக்கிரமத் திருப்புலக்கையிட்ட-துக்கியக்கிர*
*மத்தரைத் துரத்தியுற்ற மச்சரைக் குமட்டிமற்ற*
*வெத்தரைக் குடற்கிளப்பி யெக்களித்து வித்தரித்து*
*மாறுகொண்ட ராசர்மண்டை மார்புகண்கள் கால்கள்சிந்த*
*வீறுகொண்டு தூளிமண்டி வேகமண்டி-யேறுசண்ட*
*..........................*
*விகடதட குஞ்சரத்தான்*

எனச் சிறப்பித்துள்ளமையை இவண் ஒப்பிட்டு நோக்கலாம்.

7. செகம்பார்த் தளந்த துணைக்காலிற்
சிலம்பு புலம்ப வரைமார்புந்
திரண்ட வயிறுந் துவண்டாடச்
செழும்பொற் குழையூடாட மெய்யி
னகம்பார்த் தணிந்த தரளவடம்
அசைய மணிவா யணிமுறுவல்
அரும்பத் திலக நுதல்வியர்ப்ப
ஆங்கு விரைவிற் றவழ்ந்தோடி
மகம்பார்த் துயர்மே டையிற்குயிற்று
மணியிற் புகுந்த நிழலைஒரு
மலர்க்கை யணைப்ப வாராத
வடிவைக் குறித்துத் தாயர்திரு
முகம்பார்த் திருகண் பிசைந்தேங்கு
முகிலே முத்த மளித்தருளே
முறைமைத் திருவேங் கடநாத
முதல்வா முத்த மளித்தருளே. 35

## பொழிப்பு

உலகளந்த இருகால்களில் சிலம்பு புலம்பவும், மலைபோன்று அகன்ற மார்பும் திரண்ட வயிறும் துவண்டாடவும், சிவந்த பொற்குழை ஊசலாடவும், மார்பில் அணிந்த முத்துமாலை அசையவும், அழகிய வாயில் அதனை மேலும் அழகு படுத்தும் முறுவல் அரும்பவும், திலகம் அணிந்துள்ள நெற்றி வியர்க்கவும் விரைவாகத் தவழ்ந்து ஓடி ஆங்கு ஆகாயத்தை நோக்கி உயர்ந்துள்ள மேடையில் பதித்துள்ள மணியில் தெரியும் தன் நிழலை மலர் போன்ற மென்மையான ஒரு கையால் அணைக்க, வாராத அவ்வடிவைப் பெறுவதற்காக, தாயின் அழகிய முகத்தைப் பார்த்துத் தன் இரு கண்களைப் பிசைந்து ஏங்குகின்ற முகிலே முத்தம் அளித்தருள். முறைமைத் திருவேங்கடநாதனே முத்தம் அளித்தருள்.

## குறிப்புரை

செகம்-பூமி; தரளவடம்-முத்துவடம்; மாகம்>மகம்-வானம்

#### செகம் பார்த்தளந்தது

திருமால் வாமன அவதாரம் எடுத்த போழ்து உலகையளந்தார். காசிபருக்கு அதிதியிடம் புரட்டாசித் திங்கள் சுக்கில பட்சத்தில் வாமனராகத் தோன்றினார். இவர் தோன்றிய காலத்தில் கதிரவன் சாவித்திரி மறையை உரைத்தருளினான். பிரகஸ்பதி பிரம சூத்திரத்தை உரைத்தார். காசிபர்

முஞ்சியைக் கொடுத்தார். நிலம் கிருட்டிணாசனம் கொடுத்தது திங்கள் தடி கொடுத்தான். அதிதி கௌபீனங் கொடுத்தாள். நான்முகன் கமண்டலங் கொடுத்தான். பார்வதி பிச்சை கொடுத் தாள். இவர் பரத்துவாசரிடம் மறையை உணர்ந்தவர். இவர் மாவலியின் செருக்கை அடக்க எண்ணினார். குறுகிய உருவாகச் சென்று மூவடி மண் கேட்டார். அசுர குருவாகிய வெள்ளி கொடுக்கக்கூடாது என்று தடுத்தான். மாவலி கேளாது தானம் செய்தான். பிறகு இவர் பெருவடிவம் கொண்டு மூவுலகத்தை யும் ஈரடியால் அளந்தார். ஓர் அடிக்கு இடமில்லாத படியால் மாவலியின் தலையில் வைத்துப் பாதாளலோகம் வரையில் அழுத்தி அங்கு எல்லா வகையான இன்பங்களையும் நுகரச் செய்தார்.

இவ்வவதார நிலையைப் பெரியாழ்வார்,

மாவலி வேள்வியில் மாணுரு வாய்ச்சென்று
மூவடி தாவென்று இரந்துஇம் மண்ணினை
ஓரடி இட்டுஇரண் டாமடி தன்னிலே
தாவடி இட்டானால் இன்றுமுற்றும்
தரணி அளந்தானால் இன்றுமுற்றும் (219)

என அழகாகக் காட்சிப் படுத்துகிறார்.

## 6. வாரானைப் பருவம்

செல்லனைய கார்பாரி யெங்கள்மா லைப்பிள்ளை
தெய்வநா யகமகீபன்
செகதலம் புகழ்பெரிய திருவடி நராதிபன்
செப்புமெய்த் துணைவன்வருக
வல்லப மிகுந்தசங் கரநார ணேந்திரன்
மதியூகி தையல்பாக
மைப்புய லெனத்தருதி யாகிசுப் பிரமணிய
மால்சீனி வாசபூபன்
இல்லறம் வழாதிவர்கள் மருகேச னென்றழைத்
தின்பமுற விரைவில்வருக
இரவலர்கள் மெலிவகல நிதிமழை விடாதுசொரி
இருகைமுகி லினிதுவருக
நல்லவ னெனப்புவி புகழவந் தருள்செய்நன்
நயகுணா லயன்வருகவே
நதிமரபு தழையவுயர் துரைதிருவேங் கடநாத
நாகரி கன்வருகவே 36

## பொழிப்பு

மேகம் போன்று வரையாது வந்தோர்க்கு வழங்குகின்ற கார்பாரியாகிய எங்கள் மாலைப்பிள்ளையும் தெய்வநாயக மகீபனும் உலகத்தார் புகழ்கின்ற பெரிய திருவடி நராதிபனும் ஆகிய இவர்கள் தங்களின் உண்மைத் தோழன் எனக் கூறும் திருவேங்கடநாதனே வருக. வலிமை மிகுந்த சங்கர நாரணேந் திரனின் அறிவுடை அமைச்சனான யூகி போன்ற தையல் பாகன், இருண்ட மேகம் போன்று கைம்மாறு கருதாது தருகின்ற தியாகி சுப்பிரமணியமால், சீனிவாசபூபன் முதலியோர் இல்லறம் வழாது சிறப்புப் பெற்று, மருமகனே என்றழைத்து இன்பமுற விரைவில் வருக. வறுமையுற்றோர் தம் வறுமை தீர நாடி வருங்கால் அவர்களின் வறுமை அகலும்படி நிதியாகிய மழை யினை விடாது பொழிகின்ற இரு கைகளை உடைய முகிலே இனிது வருக. இவன் நல்லவன் என்று உலகத்தார் புகழ்ந்து போற்றும்படி வந்து அருள் செய்கின்ற நல்ல சிறந்த குணங்களை உடையவனே வருக. வேளாள மரபு செழிக்கும்படி உயர்ந்த துரை திருவேங்கடநாத நாகரிகனே வருக.

## குறிப்புரை

செல்-மேகம்; செகதலம்-உலகம்; வல்லபம்-வலிமை; மைப் புயல்-இருண்ட மேகம்; நன்நயம்-நன்மை; குணாலயன்-நற்குண முள்ளவன்.

கார்பாரி என்பது கார்வாரி என்பதன் திரிபு. தலைவனது இல்லத்தின் நிகழ்வுகளை மேற்பார்ப்போன். காறுபாறு எனவும் வழங்கப்படுவன். தலைவனின் உறவினர்களைத் தூது நூல்,

செல்வமிகு
நந்தமராம் சங்கரநா ராயணமா லைப்பெரிய
தந்தையெனச் சொல்லும் சவுந்தரவேள்,—சுந்தரவி
பேக துரைமாலைப் பிள்ளையையும் எங்கள்தெய்வ
நாயக மகீபனையும் நாகரிக - யோகப்
பெரிய திருவடி விபேகனையும் நாளும்
உரிமைச் சகோதரரா யுள்ளோன் - வரிசைமுகில்
பொங்குதவம் மீறுசிவ பூசா துரந்தரனாம்
சங்கரநா ராயணத யாளுவுக்கும் - தங்குபத
பாகருணமீறுதையல் பாகமா லுக்கும்நல்வி
வேகமுகில் சுப்பிரமணிய வேந்தனுக்கு - வாகு
மருமருவு தார்ச்சீனி வாசமா லுக்குந்

திருமருக னென்னவந்த தீரன் - முருகலர்தார்ச்
சங்கர மூர்த்திக்கும் சகோதரர்க்கும் செங்கமல
நங்கைவளர் வைகுந்த நாதனுக்கும் - இங்கிதம்சேர்
நன்மைத் துனனாம் நரபாலன்

என எடுத்துக் காட்டும்.

2. நிறைமதிப் பிறைநுதற் கழகுதர ஒளிர்சுட்டி
நெற்றியிற் கட்டவருக
நீலக் குழற்கு ழிகைக்குமல் லிகைமுல்லை
நேர்பெறச் சூட்டவருக
துறைவிரிக் கும்புதுப் புனலிலழி யாதசாந்
தொடுதிலத மணியவருக
துணைவரிவி ழிக்கஞ்ச னந்தீட்ட வருகவிரு
தோள்வளை திருத்தவருக
கறைவிரிக் குஞ்சுடர்ப் படையேந்து செங்கையிற்
கடகமிட வருகவிரலிற்
கணையாழி தொடவருக நவரத்ன தண்டையொடு
காற்சிலம் பணியவருக
நறைவிரிக் குந்துணர் தரித்தசுப் பிரமணிய
நரபதிகண் மணிவருகவே
நதிமரபு தழையவுயர் துரைதிருவேங் கடநாத
நாகரி கன்வருகவே. 37

## பொழிப்பு

பூரணச்சந்திரன் போன்ற முகத்தில் பிறையைப் போன்ற நுதலில் மேலும் அழகு செய்ய ஒளிவிடுகின்ற சுட்டியைக் கட்ட வருக. இருண்ட குழலை யுடைய உச்சிக் கொண்டைக்கு மல்லிகை, முல்லை மலர்களை அழகுபெறச் சூட்ட வருக. நீர்த்துறைகளில் பரந்துள்ள புதுப்புனலால்கூட அழிக்க முடியாதபடி சந்தனம் பூசித் திலகம் அணிய வருக. வரிபடர்ந்த இருவிழிக்கு அஞ்சனம் தீட்ட வருக. இருதோள்களிலும் அணிந்துள்ள வளையைத் திருத்த வருக. தீயோரின் இரத்தத்தைப் பரப்பும் சங்கு சக்கராயுதச் சுடர்ப் படைகள் ஏந்தும் சிவந்த கைகளில் கடகம் அணிய வருக. விரலில் கணையாழி இட வருக. நவரத்னத்தால் இயன்ற அணியொடு கால்களில் சிலம்பு அணிய வருக. தேன் சிந்தும் மாலை அணிந்த சுப்பிரமணிய அரசனின் கண்மணி வருக. வேளாளமரபு தழைய உயர்ந்த துரை திருவேங்கட நாதனே வருக.

## குறிப்புரை

நீலக்குழல்-இருண்ட குழல்; இவ்வாறு குறிப்பிடுதல் மரபு. சூழிகை-உச்சிக் கொண்டை; துணை-இரு; வளை-தோளணி; கறை-இரத்தம்; சுடர்ப்படை-சங்கு, சக்கராயுதப்படை; கடகம்-கையணி; கணையாழி-மோதிரம்; தண்டை, சிலம்பு-காலணிகள்; நறை-தேன்.

கேசாதிபாத வருணனையில் இப்பாடலைப் பாடியிருத்தல் இதன் சிறப்பாம். முதலில் நுதலைச் சுட்டிப் பின் கேசத்தை இவர் குறித்திருப்பதும் சுட்டற்பாலது.

3. ஏற்றமிகு சிந்துரக் குறிநுதலில் ஒளிரவண்
டிசைமுரலு முல்லைபோல
எங்கணும் பத்திபாய்ந் தகமகிழ முறுவலித்
திளநிலாக் கதிர்பரப்ப
ஊற்றிருந் திதழ்வழி பசுங்குமுழி யெறியமுத
முதரத்தில் வழியஒளிகான்று
உபயபுய வரையில்மக ரக்குழை கிடந்துபொன்
னூசலா டப்பரந்த
கீற்றுவரி மணிநா வரற்றுபொன் னரைவடக்
கிண்கிணிக் குரலெழுப்பக்
கிரணமர கதமேனி யழகுதர வெண்ணிலாக்
கிளர்கொற்ற வெண்குடைக்கீழ்
நாற்றிசைக் குப்புகழ் செலுத்துசுப் பிரமணிய
நரபதிகண் மணிவருகவே
நதிமரபு தழையவுயர் துரைதிருவேங் கடநாத
நாகரி கன்வருகவே. 38

## பொழிப்பு

சிறப்பு மிகுந்த சிவப்புத் திலகக்குறி நெற்றியில் ஒளிர, வண்டுகள் இசைபாடுகின்ற முல்லைமலர் போன்று எங்கும் அலங்காரம் அமைந்து, மனமகிழ் கொண்டு முறுவலித்தலில் இளமை வாய்ந்த நிலா தன் ஒளிக்கதிர்களைப் பரப்ப, வாயூற்று களிலிருந்து ஊறி இதழ்களின் வழியே தெறித்த நீர்க்குமிழிகள் வயிற்றில் வழிய, இருதோள்களிலும், காதுகளிலணிந்த மகரக் குழை கிடந்து ஒளிசிதறிப் பொன் ஊசலாட, அரையில் கட்டியுள்ள பிளந்த வரியினை உடைய மணிகள் பொருந்திய பொன் னரைவடக்கிண்கிணி குரல் எழுப்ப, ஒளி சிந்தும் மரகத நிறமேனி அழகு தர, வெண்ணிலவை ஒத்த ஒளி சிந்தும் கொற்ற வெண்குடைக் கீழ் நான்கு திசைக்கும் புகழைச் செலுத்துகின்ற

சுப்பிரமணிய நரபதியின் கண்மணியே வருக. வேளாளர் மரபு தழைய உயர்துரை திருவேங்கடநாதனே வருக.

## குறிப்புரை

சிந்துரம்-சிவப்புத்திலகம்; முரலும்-பாடும்; பத்தி-அலங்காரம்; முறுவல்-புன்னகை; கதிர்-ஒளி; உதரம்-வயிறு; கான்று-ஒளி; உபய-இரு; கீற்று-பிளந்த; கிண்கிணி-காற்சதங்கை; அரைவடம்-அரையில் கட்டியுள்ள அணி; கிரணம்-ஒளி; மரகதமேனி-பச்சை வண்ணமேனி, திருமாலை மரகத மேனியனாகக் குறித்தல் மரபு. இந்நூலாசிரியர் தலைவனைத் திருமாலாகவே காண்பதால் இவ்வாறு குறிப்பிடுகிறார் எனலாம்.

4. குளஞ்சேர் பழனத் தெளியிலுழுங்
கொழுக்கால் வழியில், முதுவரம்பிற்
குறித்த கவர்வாய் மடைத்தலையிற்
குலவுந் திரைநீர்த் தடங்கரையில்
இளஞ்சேல் குதித்து விளையாட
இன்னெண் டிருந்து புடைக்கடைசென்று
எடுத்துத் திறப்பக் கண்டுவரால்
இகலிட்டெதிர்த்த வரிவாளை
களஞ்சேர் திடரிற் சூலாமைக்
கடைவாய் விரித்துச் சினைத்தேரை
கவ்வி யொதுக்கி யதுக்கிவிழுங்
காமுன் சினத்து வெடிதாவும்
வளஞ்சேர் குருகைப் பதிபுரந்த
மதனா வருக வருகவே
வரிசைத் திருவேங் கடநாத
மகிபா வருக வருகவே. 39

## பொழிப்பு

குளத்தை அடுத்துள்ள தாழ்ந்த வயலில் கலப்பையால் உழுகின்ற பகுதியில் பழமையான வரம்பில் உள்ள பலவாகப் பிரிந்துள்ள வாயினை உடைய மதகுகளில் பரந்துள்ள அலைகளையுடைய நீர் நிறைந்துள்ள குளிர்ந்த கரையில் இளமை வாய்ந்த சேல் மீன்கள் குதித்து விளையாட, இனிய நண்டு ஒரு பக்கத்தின் ஓரமாகச் சென்று அதனை எடுத்து உண்ணுதற்கு முயற்சிப்பதைக் கண்டு வராலுடன் பகைகொண்டு எதிர்த்த வாளை நெற்களத்தைச் சாரவும், மேட்டுப் பகுதியில் சூல் கொண்டுள்ள ஆமையானது தனது கடைவாயினை விரித்துச் சினையுடைய தேரையைக் கவ்வி வாயில் ஒதுக்கி விழுங்குவதற்கு முன் தப்ப முயன்று அச்சத்துடன் தாவுகின்ற வளமை நிறைந்த

குருகைப் பதியைக் காக்கும் மன்மதனே வருகவே. மேன்மையான சிறப்புகள் பெறுகின்ற திருவேங்கடநாத மகிபனே வருகவே.

## குறிப்புரை

எளி-தாழ்மை; குலவும்-நெருங்கி விளையாடும்; சேல்-கெண்டை; ஞெண்டு > நண்டு; சினம்-போர் (தப்ப முயன்று); இகல்-பகைமை; களம்-நெற்களம்; வெடி-அச்சம்.

தலைவனின் நாட்டுவளம் இப்பாடலில் சிறப்பிக்கப்படுகிறது.

5. வஞ்சியப ரஞ்சிநிகர் மங்கையர் விரும்பியுன்
வரல்பார்க்க வேண்டிநின்றார்
மறுகியடி தறுகிச் சுவர்த்தலம் பற்றிமென்
மலரடி பெயர்த் தொதுங்கிக்
கொஞ்சிவர லிபநடைக் கஞ்சவே தளர்நடைக்
கொண்டுவந் தேவராத
குற்றம்யா தென்னவறி கின்றிலேம் உள்ளக்
குறிப்பினதெ னக்கூறிலாய்
செஞ்சிவடகாசிதென் குமரிமேல் மலையாள
தேசமெங் குந்தோற்றமாம்
சித்திரசிலை வடிவழக நீமகிழ்ந் தின்பமாய்
சித்தந் திரும்பிவருக
பஞ்சினு மனிச்சமென் பூவினும் சோகமலர்
பாரித் திருப்பதிதன்மேல்
பயப்பய நடந்துவளர் துரைதிருவேங் கடநாத
பராக்கும துரைவருகவே.

## பொழிப்பு

வஞ்சிக் கொடி போன்ற பெண்ணாகிய அபரஞ்சியை ஒத்த மகளிர் மிகுந்த விருப்புடன் உன் வரவினை வேண்டி நின்றார். நடையானது சுழன்று, சறுகி சுவரினைப் பற்றிக் கொண்டு மலர் போன்ற மென்மையான பாதத்தினைப் பெயர்த்து வைத்து ஒதுங்கி, கொஞ்சி, யானையானது அஞ்சும்படி தளர்நடை கொண்டு நீ முன் வந்துள்ளாய். இப்பொழுது வராமைக்கு எமது குற்றம் எது என அறிகின்றிலேம். உன் உள்ளக் குறிப்பு இது எனவும் குறிப்பிடவில்லை. செஞ்சி, வடகாசி, தென்குமரி, மேலை மலையாளநாடு எங்கும் புகழ் பெற்றுள்ள சித்திர சிலை போன்ற சிறந்த அழகனே! நீ மகிழ்வுடன் இன்பமாக உன் மனம் மாறி திரும்பி வருவாயாக. பஞ்சினாலும், அனிச்ச மலராலும், பிற மென்மையான மலர்களாலும், அசோக மலராலும் பரப்பப்

பட்டு ஆயத்தப் படுத்தப்பட்டுள்ள பூமியின் மேல் மிக மெதுவாக நடந்து, வளர் திருவேங்கட நாதன் எனும் வல்லமை பொருந்திய துரையே வருக.

## குறிப்புரை

வஞ்சி-ஒருகொடி; மறுகுதல்-சுழலுதல்; தறுகி > சறுகி; இபம்-யானை; அனிச்சம்-மோப்பக் குழையும் மென்மையுடைய மலர்; பாரித்தல்-ஆயத்தப் படுத்துதல்; பதி-பூமி; பராக்குமம் > பராக்கிரமம்-வல்லமை.

தலைவனின் தளர்நடை கவினுற இப்பாடலில் காட்டப் பட்டுள்ளது.

6. பழக்கு மதுவண் டிசைமிழற்றப்
பரிய மடற்பா சடைப்பொகுட்டுப்
பங்கே ருகத்தின் முகைதெறித்துப்
பரக்குந் துளித்தேன் சொரிதடத்தின்
உழக்குங் கவைக்காற் பணைத்தமருப் (பு)
உடைய கருமே திகள்விளையாட்(டு)
ஒழித்துக் குவளைப் போதுபறித்(து)
உண்ண மடுவிற் சுரந்திடத்தன்
மழக்கன் றயல்வந் துடனடிப்ப
வருடு முலைக்கண் டிறந்துபிதிர்
வழியுங் குளங்கால் வழியாக
வளைந்த நெடுங்கூன் வலம்புரிகள்
முழக்கும் பொருனைத் துறைக்குருகூர்
முகுந்தா வருக வருகவே
முதன்மைத் திருவேங் கடநாத
முகிலே வருக வருகவே. 41

## பொழிப்பு

தேனில் உறவாடுகின்ற வண்டு இசைபாடவும், பசிய இலைகளையும் பருத்த இதழ்களையும், பொகுட்டினையும் உடைய தாமரையின் மொட்டு விரிய, துளித் துளியாக வழியும் தேன் பரந்துள்ள நீர்நிலையில் கலக்கித் திரிகின்ற பிளந்த கால்களையும் பருத்த கொம்புகளையும் உடைய கறுத்த எருமைகள் விளையாடுதலை ஒழித்துக் குவளை மலர் பறித்து உண்ண, மடுவில் பால் சுரக்கத் தம் அருகில் வந்த இளமையான கன்றுகள்

தடவ, நகிலின் கண் திறந்து உதிர்கின்ற பால் அதன் கால் வழியாகக் குளத்தில் வழியும் வளைந்த நீண்ட கூன் உடைய வலம்புரிகள் முழக்கித் திரியும்படியான இத்தகைய சிறப்புடைய பொருநைத் துறையினை உடைய குருகூரின் திருமாலே வருக வருக. முதன்மைபெறும் திருவேங்கட நாத முகிலே வருக வருக.

**குறிப்புரை**

பழக்கும்-உறவாடுகின்ற; பழகும் என்பது எதுகைக்காகப் பழக்கும் என வந்தது. மது-தேன்; பரிய-பருத்த; பாசடை-பசிய இலை; பொகுட்டு-தாமரையின் கொட்டைப்பகுதி; பங்கேருகம்-தாமரை; முகை-அரும்பு; தெறித்து-பிளந்து; உழக்கும்-கலக்கும்; கவைக்கால்-பிளந்த கால்; பணை-பருத்த; மருப்பு-விலங்கின் கொம்பு; கருமேதிகள்-கருத்த எருமைகள்; போது-மலர்; வருடு-தடவு; பிதிர்-உதிர்.

இப்பாடலிலும் நிலவளம் காட்டப்படுகிறது. எருமைகள் நீர்நிலையைக் கலக்கித் திரிவதைப் பலபாடல்கள் தருகின்றன. சங்க இலக்கியம் காட்டும்,

சேற்றுநிலை முனைஇய செங்கட் காரான்
ஊர்மடி கங்குலின் நோன்றளை பரிந்து
கூர்முள் வேலி கோட்டின் நீக்கி
நீர்முதிர் பழனத்து மீனுடன் இரிய
அந்தூம்பு வள்ளை மயக்கித் தாமரை
வண்டூது பனிமலர் ஆரும் ஊர (அகம். 46)

எனும் இக்காட்சி சிறப்புடைத்து. குளத்திலிருக்கையில் கன்றினை நினைக்க அதனால் சுரந்திட்ட பாலை ஆங்குள்ள அன்னக்குஞ்சு அருந்தியதாக ஓவியப்படுத்துவர் கம்பர்.

சேல்உண்ட ஒண்க ணாரின் திரிகின்ற செங்கால் அன்னம்
மால்உண்ட நளினப் பள்ளி, வளர்த்திய மழலைப் பிள்ளை,
கால்உண்ட சேற்று மேதி கன்றுஉள்ளிக் கனைப்பச்சோர்ந்த
பால்உண்டு, துயிலப் பச்சைத் தேரை தாலாட்டும் பண்ணை
(பால. 44)

என்பது அவ்வழகிய பாடல்.

7. தேசாதி பத்தியஞ் செலுத்துமர சுரிமையாற்
சிந்தைமகிழ் சனயோகவான்
திரமான வாழ்வுபெறு நரவாக னாதிபதி
திக்குதே சங்களெங்கும்

வாசால கத்தினாற் றிட்டவட் டஞ்செய்து
மனுமுறை நடத்துதிறலான்
வங்கணமு மிங்கித மங்களவி சேடமும்
வாய்த்தபூ சாபலத்தான்
தாசரதி தாசனா கப்பணிப வர்க்கெலாந்
தாயகம் போலுதித்துத்
தருமநெறி பழகுசுப் பிரமணிய மாலுளஞ்
சந்தோஷ மாகவருக
ஆசார மீறுதுரை மீனாட்சி நாதமால்
அகமகிழ இனிதுவருக
அருமைபெற வளர்திருவேங் கடநாத பூபதியுள்
அன்பாக எதிர்வருகவே. 42

## பொழிப்பு

நாட்டின் தலைமையான அதிகாரம் செலுத்துகின்ற அரசுரிமையால் மனம் மகிழ்கின்ற மிகுந்த யோகத்தை உடையவன், தன் நிலையினின்றும் மாறாத உறுதியான வாழ்வு பெற்ற குபேரன், அனைத்துத் திக்குகளிலும் உள்ள நாடுகளி லெல்லாம் தன்னறிவுத்திறனால் செம்மையாக மனு முறையின்படி ஆட்சி நடத்தும் திறலையுடையவன், அன்பும் இனிமையான நடத்தையும் மங்கள விசேடங்களும் வாய்த்த தவப்பயனுடை யவன் ஆகிய நீ தசரத மைந்தனின் பக்தனாகப் பணிபவர்க்கு எல்லாம் தாய் வீடுபோல் அமைந்து தருமத்தின் வழியில் செல்கின்ற சுப்பிரமணிய மாலின் உளம் மகிழும்படி வருவாயாக; சாத்திர முறைகளின் படியும் குலமுறைகளின் படியும் நிறைவாக நடக்கின்ற மீனாட்சிநாத மால் உளம்களிக்க இனிமையுடன் வருவாயாக. அருமைபெற வளர் திருவேங்கடநாத பூபதியே உள்ளன்புடன் எதிர்வருவாயாக.

## குறிப்புரை

ஆதிபத்தியம்-அதிகாரத் தலைமை; திரமான >திடமான-உறுதியான, தன் நிலையினின்றும் மாறாத; வாசாலகன்-அறிவுத்திறனுடையவன்; திட்டவட்டம்-செம்மை; வங்கணம்-நட்பு; இங்கிதம்-இனிமையான நடத்தை; பூசாபலன்-தவப்பயன்; தாசரதி-தசரதனின் உயிராக இராமன் விளங்கியமையால் இராமனுக்குத் தாசரதி என்ற பெயரும் உண்டு. குலசேகராழ்

வார் தம் பாடலில் 'தாராளும் நீண் முடியென் தாசரதீ! தாலேலோ' (8:5) எனப் பாடி மகிழக் காணலாம். தாசன்-பக்தன், வைணவ மரபுச் சொல்; அகம்-வீடு; உதித்து-அமைத்து; ஆசாரம்-சாத்திரமுறை, குலமுறை.

## 7. அம்புலிப் பருவம்

மண்டலத் தரவணைப் பாலாழி பெற்றுலக
மலையாதளித் தருள்வைநீ
மனமகிழ்ந் தரவணைப் பாலாழி பெற்றுலக
மலையா தளிப்பனணியன்
எண்டிசைக் குங்கலை நிலாவிரித் தெழுவைநீ
எறிதிரைப் பரவைஞாலத்
திவனுங் கொழுந்துவிட் டேறும் பெருங்கீர்த்தி
எனும்வெண் ணிலாவிரிப்பான்
விண்டலத் திற்புகழ் குபேரனீ புவியிலிவன்
மிக்கசெல் வக்குபேரன்
வெண்மதிக் குடையவ னீயிவன் சகலர்க்கும்
விற்பன மதிக்குடையவன்
அண்டர்பர வுங்குருகை நகர்வேந்த னுடன்மகிழ்ந்து
அம்புலீ யாடவாவே
அருள்மாரி பொழிதிருவேங் கடநாத பூபனுடன்
அம்புலீ யாடவாவே. 43

### பொழிப்பு

மண்ணுலகத்தைத் தழுவிய பாற்கடலால் பெறப்பட்டு உலக உயிர்களுக்கு ஒளியைச் சலிக்காது அளிப்பவன் நீ; மனமகிழ்வுடன் பாம்பணையின்மீது பாற்கடலில் பள்ளி கொண்டு, மயக்கம் கொள்ளாது உலகத்தைக் காக்கும் ஆபரணங்களை அணிந்த திருமால் இவன். எட்டுத்திசைகளிலும் ஒளிநிறையும்படி உன் பதினாறு கலைகளையும் பரப்பி எழுவாய் நீ; அலைகளை வீசுகின்ற கடலால் சூழப்பட்ட இவ் உலகில் இவனும் வளர்கின்ற பெரிய புகழ் என்னும் வெண்மையான கதிர்களை வீசுபவன். விண்ணுலகில் புகழ்பெற்ற சந்திரன் நீ; இவன் நிலவுலகில் மிகுந்த செல்வம் உடைய குபேரனாவான். வெண்மையான ஒளிக் குடையை உடையவன் நீ; இவன் அனைவருக்கும் வித்தைக்கும், அறிவிற்கும் உடைமையாளன். ஆதலால் தேவர்கள் வழிபடும்

குருகை நகர அரசனுடன் மகிழ்வுடன் விளையாட அம்புலீ வா. கருணை மழை பொழிகின்ற திருவேங்கடநாத பூபனுடன் அம்புலீ விளையாட வா.

## குறிப்புரை

மண்டலம்-உலகம்; அரவணை-தழுவுதல்; மலையாது-சலியாது; அரவணை-பாம்பணை (ஆதிசேடன்); பாலாழி-பாற்கடல்; மலையாது-மயங்காது; அணியன்-ஆபரணங்களை அணிந்தவன்; கலை-சந்திரனின் பதினாறு பகுதிகளுள் ஒன்று; நிலா-ஒளி; பரவை-கடல்; ஞாலம்-உலகம்; குபேரன்-சந்திரன், பணக்காரன்; மிகுந்த செல்வம் உடையவர்களைக் குபேரன் எனக் குறித்தல் வழக்கு; விற்பனம்-கல்வியிற் சிறப்பு; மதி-இயற்கை அறிவு; அண்டர்-தேவர். இத்தலத்தில் எழுந்தருளியுள்ள திருமாலைப் பிரமன் வழிபட்டதாகக் கூறுவர்.

தேவர்களும் அசுரர்களும் அமுதிற்காகப் பாற்கடலைக் கடைந்த காலைத் தோன்றிய பொருள்களுள் சந்திரனும் ஒன்று.

குழந்தைக்கு அம்புலி காட்டி உண்ணச் செய்வதும், விளையாடச் செய்வதும் தொன்றுதொட்டு வரும் பழக்கமாகும். 'ஐய திங்கட் குழவி வருகென யான் நின்னை அம்புலி காட்டல் இனிது' எனப் பாடும் தாயரைச் சங்கப் பாவும் சுட்டும் (கலி. 80). அஃது ஓர் பருவமாகப் பிள்ளைத் தமிழ் நூல்களில் மலர்ந்துள்ளது. தலைவனுக்கும் திங்களுக்கும் உள்ள ஒப்புமைகளைச் சுட்டி, சமநிலை காட்டி, 'சாமம்' எனும் தன்மையில் அம்புலியை விளையாட அழைப்பதாக இப்பாடல் அமைகிறது.

2. தண்ணமுதம் விண்ணவர்க் குண்ணக் கொடுக்கச்
சடைப்படுவை நீமற்றிவன்
தமர்விருந் தெதிர்கொண்டு தினமு மமுதளித்துச்
சடைவுறான் திங்கள்தோறும்
எண்ணியொரு காற்செழும் பருதியிடம் வருவைநீ
இருக்காலும் முக்காலுமற்
றெக்கால மும்புது மழைச்சுடரை வலம்வரும்
இராசகன யோகன் இவன்நீ

விண்ணிடை மறைந்திரவில் அந்தரப் படுவையிடர்
வெங்கலிக் கோடையழலால்
வெதும்புவறிஞோர்க்குமறையாதிரவொழித்துஅரசு
வீற்றிருக் குந்துரையிவன்
அண்ணல்சுப் பிரமணிய வேந்தன்வர பாலனுடன்
அம்புலீ ஆடவாவே
அருள்மாரி பொழிதிருவேங் கடநாத பூபனுடன்
அம்புலீ ஆடவாவே. 44

## பொழிப்பு

குளிர்ந்த அமுதத்தை விண்ணவர் அருந்துவதற்காகச் சிவனின் சடையில் அமர்வாய் நீ.அதனால்சோர்வுபடுவாய்.ஆனால் இவன்தன் சுற்றத்தாரையும், சார்ந்தோரையும், விருந்தினரையும் எதிர்கொண்டு தினமும் உணவளித்தும் சோர்வு அடையமாட்டான். மாதம் தோறும் எண்ணிச் சரியாக ஒருபொழுதுதான் நீ சிவந்த சூரியனிடம் வருவாய். ஆனால் இவன் இருக்காலும் முக்காலும் மற்று எப்பொழுதும் புதுமழைச் சுடரான திருமாலை வலம்வரும் இராசயோகன். நீ விண்ணில் பகலில் மறைந்து இரவில் வருவாய். துன்பந்தரும் கொடுமையான கோடையின் வெப்பத்தால் (விளைச்சலின்றி) வருந்தும் வறுமையாளர்களுக்கு மறையாது அவர்களின் இரத்தல் தொழிலை முழுமையாக விடும்படி அருள்புரிந்து அரசு வீற்றிருக்கும் துரை இவன். தலைமைசான்ற சுப்பிரமணிய வேந்தனின் தவப்புதல்வனுடன் அம்புலீ ஆடவா. அருள்மாரி பொழி திருவேங்கடநாத பூபனுடன் அம்புலீ ஆடவா.

## குறிப்புரை

சடை-சிவனின் முடி; சடைவு-சோர்வு; அமுதம்-விண்ணவர் உணவு புதுமழைச்சுடர்- கரிய நிறம் கொண்ட திருமாலைக் கார்மேக வண்ணன் என்றுரைப்பதை இவர் புதுமழைச் சுடர் எனக் குறிப்பிடுகிறார். சூரிய நாராயணன் எனும் திருநாமமும் இவண் இணைத்து நோக்கற்பாலது. அந்தரம்-வான்; கலி-வறுமை; அழல்-வெப்பம்; வெதும்பும்-வருந்தும்; இரவு-இரத்தல்; மறையாது-ஒழிக்காது; அண்ணல்-தலைவன்.

நிலவிற்கும் தலைவனுக்கும் பேதம் காட்டி நிலவினும் சிறந்தவன் தலைவன் என நிறுவி, எனவே எங்கள் தலைவனுடன் விளையாடவா என அழைக்கிறது இப்பாடல்.

**சந்திரன் சிவனின் சடைப்பட்டது**

தக்கனுக்கு விண்மீன்கள் இருபத்தேழு பேரும் பெண்களாகப் பிறந்தார்கள். தக்கன் இவர்கள் அனைவரையும் சந்திரனுக்குத் திருமணம் செய்துகொடுத்தான். திங்கள் அப்பெண்கள் அனைவரிடமும் ஒரே வகையான அன்பு செலுத்தாமல் உரோகிணியிடம் மட்டும் அளவுகடந்த காதலுடையவனாய் அவளையே விரும்பி யொழுகினான். இதனால் மற்ற பெண்கள் தந்தையிடம் முறையிட, கோபம் கொண்ட தக்கன் 'உன் கலைகளெல்லாம் தேய்ந்தொழிக' என்று சாபமிட்டான். கலைகள் தக்கன் சாபப்படியே தேயத் தொடங்கின. திங்கள் ஒளி குன்றியதால் தேவர்களுக்கு அவர்கள் உணவாகிய அமுதபானம் கிடைக்கவில்லை. ஒரு கலை மட்டும் எஞ்சி நின்ற சமயத்தில் திங்கள் சிவபெருமானைப் பணிந்து தன்னைக் காக்க வேண்டுமென்று வேண்டிக் கொண்டான். சிவபெருமான் எஞ்சி நின்ற கலையைத் தம்முடைய சடையிற் சூடிக் கொண்டார். இதனால் அந்த ஒரு கலை தேயாது எஞ்சி நின்றது. பிறகு அக்கலைகள் இறைவன் அருளால் வளரவும் தேயவும் ஆயின.

திங்களின் கலையினை அமிர்தகலை என்றுரைக்கும் மரபுண்டு. இந்நூலாரும் 'தவள வெண் பிறை அமுத கலைகரந்தொழுகு' (2) எனப் பாடியிருக்கக் காணலாம்.

3. கங்கைநதி மரபிலக ளங்கனிவ னாதலாற்
சவுரியர் குலத்துள்ளநின்
கறைபடு களங்கந் துடைத்தமுத பூரணக்
கலைவடிவ மின்றுதவுவான்
நங்கைமகிழ் மாறனாரைப் பரவுமதி யுடைய
நம்பியிவ னாதலால்நீ
நாடொறுந் தேய்ந்துடல் வளைந்தகுறை மதியெனு
நவையொழித் தருள்புரிகுவான்
சங்கையில் லாதுமுத் தமிழுக்கு நிதிமீறு
தகுதிரைப் பதக்கநல்கு
சங்கநிதி யிவனுனக் கிரவாள னென்பது
தவிர்த்துநிலை பேறளிப்பான்
அங்கைமுகில் மீனாட்சி நாதநிதி துணைவனுடன்
அம்புலீ ஆடவாவே
அருள்மாரி பொழிதிருவேங் கடநாத பூபனுடன்
அம்புலீ ஆடவாவே. 45

## பொழிப்பு

கங்கை நதி மரபில் தோன்றிய, களங்கமற்றவன் இவன் ஆதலால் கவுரியர் குலத்திலுள்ள நின்னுடைய கறையாகிய களங்கத்தைத் துடைத்து, அழியாத முழுமையான அழகிய வடிவத்தை இன்றே கொடுத்து உதவுவான். உடைய நங்கை பிராட்டிபன் மகிழ்கின்ற நம்மாழ்வாரை வணங்கி, அருள்பெற்ற அறிவுடைய நம்பி இவன் ஆதலால் நீ நாள்தோறும் சிறிது சிறிதாகக் குறைந்து உடல் வளைந்த மதியென்று பிறர் நவிலும் குறையை ஒழித்து அருள் செய்வான். ஐயமில்லாது முத்தமிழிலும் வல்லோருக்கு விலைமதிப்பற்ற, கடல் தரும் முத்தால் ஆன பதக்கம் வழங்கும் சங்கநிதியான இவன் உனக்கு, நீ இரவில் தோன்றுபவன் (பிச்சையெடுத்தலோடு தோன்றுபவன்) என்பதனைத் தவிர்த்து வானில் எப்பொழுதும் நிலைபெறுகின்ற தன்மையை அளிப்பான். அழகிய கைகளையுடைய முகிலான மீனாட்சி நாதநிதி துணைவனுடன் அம்புலி நீ ஆடவா. அருள்மாரி பொழி திருவேங்கடநாத பூபனுடன் அம்புலீ ஆடவா.

## குறிப்புரை

அகளங்கன்-மாசற்றவன்; கறைபடுகளங்கம்-சந்திரனின் முயற்கறை; கவுரியர் குலம்-பாண்டியர் குலம்; நங்கை-உடைய நங்கை, நம்மாழ்வாரின் தாய்; மாறனார்-நம்மாழ்வார்-உலக இயல்புக்கு மாறாக விளங்கியமையால் மாறனார் எனப் பெயர் பெற்றார். நவை-குற்றம்; சங்கை-ஐயம்; தகுதிரைப்பதக்கம்- கடல்தரும் முத்தால் அமைந்த பதக்கம்; இரவாளன்-இரவினை ஆளுபவன்; நிதி-பொருள் குவியல்.

அம்புலி இவனுடன் விளையாட வந்தால் அவனுக்கு என்னென்ன கிடைக்கும் என்பதைச் சுட்டும் 'தானம்' எனும் நிலையின் பாற்படுகிறது இப்பாடல்.

தலைவன்மீது புலவனுக்குள்ள பற்றும், கற்பனைத் திறமும் திங்களை விண்ணில் முழுநேரமும் ஒளிவிடும்படியாக மாற்றும் திறத்தைத் தலைவனுக்கு வழங்கியுள்ளன. பாண்டியர்களைத் திங்கள் குலத்தவராகக் கூறல் மரபு. (திங்கட் செல்வன் திருக்குலம் விளங்க-சிலம்பு: 11-23).

4. மடலேறு தும்பையந் தொடைசூழ விகடித்து
மடமடத் தெதிரேறிமேல்
வாளேறு தைத்தோடி வேம்பரற் காடெலாம்
வழியேற மன்னர்சிலர்போய்க்
கடலேற மன்னர்சிலர் மலையேற வெண்விசய
கலினவாம் புரவியேறிக்
கடந்தேறி யமர்பொருத சிங்கவே றிவனுட்
கருத்தறிந் தோடிவாராது
உடலேற முகிலும் கரந்துவெம் பகலிடை
ஒளித்துநீ திரியினும்விடான்
உன்னையின் னுங்கடலு மலையுமேற் றுவனஃது
உணர்ந்துவிரை வாகஇவிடத்து
அடலேறு மேழிகே தனராச னுடன் மகிழ்ந்
தம்புலீ ஆடவாவே
அருள்மாரி பொழிதிருவேங் கடநாத பூபனுடன்
அம்புலீ ஆடவாவே. 46

## பொழிப்பு

தோள்களில் தும்பைமாலை அணிந்து போரிட்டோர் விரைவாகப் புறமுதுகிட்டு, வாட்போரில் வல்லோரின் வாள் தைத்த புண்ணுடன் மிகுந்த வெப்பத்தையுடைய பரற்கற்கள் நிறைந்த காடுகளிலெல்லாம் ஓடி ஒளியவும், சில மன்னர்கள் கடலுள் ஏறவும், சிலர் மலையேறவும், வெற்றிதரும் வலிமை யுடைய, வெண்மை நிறங்கொண்ட அழகிய குதிரையின் மீதேறி எதிர்த்தோரை வெற்றியுடன் கடந்து சென்று போர் புரிந்த சிங்கவேறு இவன். இவனுடைய உளக்கருத்தினை அறியாது நீ விரைந்து வராமல் மேலே வான்முகிலுட் சென்று முழுமையாக உடலை மறைத்து, வெம்மையான பகலின் இடையிலே ஒளிந்து திரிந்தாலும் விடமாட்டான். உன்னை இன்னும் கடலும் மலை யும் போகச் செய்வான். அதனை உணர்ந்து விரைவாக, இங்குப் போரேறு போன்று வலிமை மிக்க, கலப்பைக் கொடியுடைய வனுடன் அம்புலி ஆடவா. அருள்மழை பொழியும் திருவேங்கட நாத பூபனுடன் அம்புலி ஆடவா.

## குறிப்புரை

மடல்-தோள்பட்டை; தொடை-மாலை; விகடித்து-வேறு பட்டு; வாளேறு-வாட்போரில், சிறந்தோன்; வேம்பரல் > வெம்

பரல்-வெப்பத்தால் சூடேறிய பரற்கற்கள்; கலி-வலிமை; கடந்தேறி–கடந்து சென்று; வாராது>வராது; கேதனம்-கொடி; அடலேறு-போரில் சிறந்தோரைக் குறிக்கும் மரபுச் சொல்.

'தண்டம்' எனும் தன்மையில் அமையும் இப்பாடல் அம்புலீ விளையாட வராவிட்டால் கிடைக்கக் கூடிய தண்டனை என்ன என்பதனை உரைப்பதாகும். தலைவனின் வீரத்தினைச் சிறப்பித்தற்கு ஏற்ற பகுதியாகப் புலவர் இதனைப் பயன் கொண்டுள்ளார்.

5. சூதுலா முலைமகளிர் கிழியெழுத எழில்மீறு
துரைசுப்ர மணியமன்னன்
தோன்றுமிசை கொண்டசங் கரமூர்த்தி யார்வமிகு
சுகிர்தமுறு கன்னப்பிரான்
பூதலத் தருமைபெறு வைகுந்த நாதனிவர்
புகழுமைத் துனவைபோகன்
புரந்தர சவுந்தர மிகுந்தசுப் பிரமணிய
பூபாலன் வரபாலகன்
ஈதலற மென்றுணரு மீனாட்சி நாதமால்
இனியசற் குணமாருதி
ஏற்றமுற வருசாமி நாதவே ளிருவரும்
இன்னுயிர்த் துணைவனிவனுக்(கு)
ஆதலால் நீதனியை யிவனுறவு நன்றுனக்
கம்புலீ ஆடவாவே
அருள்மாரி பொழிதிருவேங் கடநாத பூபனுடன்
அம்புலீ ஆடவாவே. 47

## பொழிப்பு

வெற்றி பொருந்திய நகில்களையுடைய மகளிர் விருப்புடன் ஓவியம் வரையும் அழகில் நிறைந்த துரையான சுப்பிரமணிய மன்னன், பெருமை மிக்க புகழையுடைய சங்கரமூர்த்தி ஆர்வமுடன் நற்செயல்களைச் செய்கின்ற கன்னபிரான்; புவியில் அருமை பெறு வைகுந்த நாதன் இவர்கள் விருப்புடன் புகழும் சிறப்புபெற்ற மைத்துனன்; தேவேந்திரன் போன்று அழகு நிறைந்த சுப்பிரமணிய பூபாலனின் மேலான சிறந்த புதல்வன்; பிறருக்கு ஈதலை அறம் எனக் கொண்டுள்ள மீனாட்சிநாதமாலும், இனிய நல்ல குணங்களுடன் மாருதி போன்று சிறப்புடைய, தன் குலம் பெருமையடைய வருகின்ற சாமிநாதவேளும் ஆகிய

இருவரும் உயிர்த் துணைவர்களாகும் இவனுக்கு. நீ தனியனாக இருப்பதால் இவனுடைய உறவு உனக்கு நன்மை பயக்கும். எனவே நிலாவே அருள்மாரி பொழி திருவேங்கட நாதனுடன் அம்புலி ஆடவா.

## குறிப்புரை

சூது-வெற்றி; கிழி-சீலையில் வரையும் ஓவியம்; தோன்றும்-பெருமை; சுகிர்தம்-நற்செயல்; பூதலம்-பூமி; புரந்தரன்-தேவேந்திரன்; சவுந்தரம்-அழகு; வரபாலகன்-மேலான சிறந்த புத்திரன்.

ஈதலறம்:

> ஈதல் இசைபட வாழ்தல் அதுவல்லது
> ஊதியம் இல்லை உயிர்க்கு (231)

என்பது வள்ளுவர் வாக்கு.

6. ஆழிசூழ் புவனத்தில் முதன்மையாந் தென்குருகை
ஆதிபதி யிவனென்பதால்
ஆகமெலி யாதிரவு பகல்முற்றும் நிர்ச்சிந்தை
யாயிருந் தகமகிழ்தலால்
ஆழிகூ டியமகுட முடிவேந்தர் சபையிலின்
னானெனப் பெயர்பெறுதலால்
அனுசரித் தவர்மெலிந் தவர்குறை தவிர்த்தவர்க்
கமுதளித் தருள்வதாற்பேர்
ஆழியால் இரவிதோன் றாதபடி செய்தநம்
ஆதிநா தக்கடவுள்பால்
அன்புபெற் றானந்த வெள்ளப்பெருக் கின்மிக்கு
ஆம்வரிசை மேன்மைபெறலால்
ஆழிவா னுலகுவிட் டிவன்மகிமை கண்டுவந்
தம்புலீ ஆடவாவே
அருள்மாரி பொழிதிருவேங் கடநாத பூபனுடன்
அம்புலீ யாடவாவே. 48

## பொழிப்பு

கடல் சூழ்ந்த இப்புவியில் முதன்மையாகத் தோன்றிய தென்குருகை நகரின் தலைவன் இவன் என்பதால், மனம் வருந்தாது இரவு பகல் முழுவதும் கவலையற்றிருந்து உளம் களிப்புறுதலால், கடல்களை வெற்றிகொண்ட மகுடங்களை யுடைய முடிவேந்தர்களின் சபையில் இவன் இப்படிப்பட்டவன் என்று புகழப் பெறுவதால், தன்னைப் பின்பற்றுபவர், வறுமை

யால் வாடுவோர் போன்றோரின் குறைகளை விலக்கி அவர் களுக்கு உணவு அளித்துக் கருணை காட்டுவதால், பெருமை யுடைய சக்கராயுதப் படையால் சூரியன் தோன்றாதபடிச் செய்த நம் ஆதிநாதனான திருமாலின் பால் மிகுந்த அன்பு கொண்ட, ஆனந்த வெள்ளப் பெருக்கினையும் மிகும்படி அரசர் பெறும் சிறப்புகளையும் மிகுதியாகப் பெறலால், இவனது பெருமை கண்டு வட்டமான வானுலகினை விட்டு வந்து நிலவே நீ ஆடவா. அருள்மாரி பொழிகின்ற திருவேங்கட நாதனுடன் அம்புலி விளையாடவா.

## குறிப்புரை

ஆழி-கடல்; புவனம்-நிலவுலகம்; அதிபதி > ஆதிபதி-தலைவன்; ஆகம்-மனம்; மெலியாது-துன்புறாது; நிர்ச்சிந்தை-கவலையற்ற மனநிலை; இன்னான்-இவன், இப்படிப்பட்டவன் எனப் பிறர் கூறும் உரை; வழக்குச்சொல்; பெயர்-புகழ்; அனுசரித்தவர்-பின் பற்றுபவர்; மெலிந்தவர்-வறியோர்; அமுது-உணவு; பேர்ஆழி-பெருமையுடைய சக்கராயுதப்படை; இரவி-சூரியன்; ஆதிநாதக் கடவுள்-குருகை நகரமூர்த்தியின் பெயர்; வரிசை-அரசன் முதலானோர் பெறும் சிறப்பு; மகிமை-சிறப்பு; ஆழி-வட்டம்.

பிரளய வெள்ளத்தால் அழிந்த உலகம் மீளவும் தோன்றும் போது முதலில் தோன்றிய ஊர் குருகூர் என்பது அத்தல புராணக் கருத்து.

தலைவனின் திருமுகச் செவ்வியைத் ‘தண்ணிறைந்து மந்தாரங் கண்டு மலர் வாடாது எப்போது மலர் செந்தாமரை போல் திருமுகத்தான்’ எனத் தூதுப் பிரபந்தத்திலும் போற்றுவார்.

### இரவி தோன்றாதபடிச் செய்தது

பாரதப் போர் நடைபெற்ற காலையில் அருச்சுனனுடைய மகன் அபிமன்னனைச் சயத்திரதன் கொன்றுவிட்டான். இதனால் அர்ச்சுனன், மறுநாள் பொழுது போவதற்குள் சயத்திரனைத் தான் கொன்று தீர்க்காவிட்டால் தீயில் விழுந்து மாண்டு போவதாக உறுதி மொழி கூறினான். இதனையறிந்து துரியோதனன் முதலியோர் மறுநாள் முழுவதும் எப்பாடு பட்டேனும் சயத்திரனைக் காப்பாற்றி விட்டால் அருச்சுனன் தீயில் விழுந்து மாண்டு போவான். அதன் பிறகு வெற்றி நம்முடையதேயாகும் என்று முடிவு செய்து சயத்திரனை நடுவில் வைத்து மற்றவர்கள் சூழவிருந்தார்கள். இருபது நாழிகை வரையில் சயத்திரதன் இருக்குமிடத்தைக்கூட அருச்சுனனால்

கண்டுபிடிக்க முடியவில்லை. இவ்வாறேயிருந்தால் அருச்சுனன் மாண்டொழிவான்; ஏதேனும் மாயம் செய்து அவனைக் காப்பாற்றவேண்டும் என்று எண்ணிய கண்ணன், விண்ணில் தம்முடைய ஆழிப்படையைச் செலுத்திக் கதிரவனை மறைத்து விட்டார். கதிரவன் மறையவே பொழுதுபோய் விட்டதென்று துரியோதனன் கூட்டத்தார் இன்பக் கூத்தாடினார்கள். அருச்சுனன் தீப்பாய்வதற்காகத் தீ வளர்க்கப் பெற்றது. சயத்திரதன் பொழுது போய் விட்டதென்ற துணிவால் அருச்சுனன் தீப்பாய்வதை வேடிக்கை பார்க்க வெளியே வந்து நின்றான். கண்ணபிரான் அருச்சுனனுக்கு அவனைக் காட்டிக் கொல்லச் செய்தார். அவனுங் கொன்று வீழ்த்தினான். பொழுது போனபின் சயத்திரதனைக் கொன்றது உண்மைக்கு மாறுபட்டதென்று துரியோதனன் கூட்டத்தார் கூச்சலிட்டனர். கண்ணபிரான் ஆழியை வாங்கிவிட்டார். கதிரவன் விண்ணில் விளங்கினான். இதன் பிறகே துரியோதனன் கூட்டத்தார் தங்கள் ஏமாற்றத்தை உணர்ந்தார்கள்.

7. வஞ்சமொன் றின்றியுரை செய்யுமொழி கனவினிலு
மாறாத தொட்டயோகன்
வாசவன் விரும்புமக ராசனாந் திருவழுதி
வளநாட்டில் வாழ்வுபெற்றோன்
தஞ்சநீ என்பவர்க் கருளுமவு தாரவுத்
தண்டப்பிர சண்ட நிபுணன்
தங்கத் தகட்டினவ மணிபதித் தொளிவீசு
தந்தநர வாகனத்தான்
கஞ்சமலர் மங்கைகுடி கொண்டமதி வதனன்மிக்
காகவளர் செந்தாமரைக்
கண்ணனருள் மீறுசுப் பிரமணிய பூபனிரு
கண்மணி யெனச்சிறந்தோன்
அஞ்சலென் றிரவலர் கொடுங்கலி துரந்தவனோடு
டஅம்புலீ யாடவாவே
அருள்மாரி பொழிதிருவேங் கடநாத பூபனுடன்
அம்புலீ யாடவாவே. 49

## பொழிப்பு

கபடம் சிறிதும் இல்லாது மொழிந்த உண்மையான மொழியினைக் கனவில்கூட மாற்றி மொழியாத, தொட்ட பொருள் துலங்கும்படியான சிறப்புடையவன்; இந்திரனால்

விரும்பப்பட்ட மகராசனாம் செல்வம் நிறைந்த பாண்டியனின் வளம்நிறைந்த நாட்டில் வாழ்வு பெற்றவன்; எனக்குப் புகலிடம் நீயே என்று வந்து சரணடைந்தவர்களுக்கு உதவும் உதாரகுணத்தில் பெருமையும் இறுமாப்பும், உறுதியும் கொண்ட மிக்கத் திறனை உடையவன்; பொன் தகட்டில் நவரத்தின மணிகள் பதித்து ஒளி வீசுகின்ற தந்தத்தால் செய்யப்பட்ட சிவிகையை யுடையவன். தாமரைமலரில் வீற்றிருக்கின்ற திருமகள் குடி கொண்ட அழகிய முகத்தை உடையவன்; சிவந்த தாமரை மலர் போன்ற கண்களை உடைய திருமாலின் அருளினை மிகுதியாகப் பெற்ற சுப்பிரமணிய அரசனின் கண்மணியெனச் சிறப்பாக வளர்ந்த பெருமையுடையவன்; அஞ்சற்க என்று அபயம் அளித்துத் தன்னை நாடி வந்த இரவலர்களின் கொடுமையான வறுமைத் துன்பத்தை ஒழித்தவனோடு அம்புலி ஆடவா. கருணை மழை பொழியும் திருவேங்கடநாத பூபனுடன் அம்புலி ஆடவா.

## குறிப்புரை

வஞ்சம்-கபடம்; வாசவன்-இந்திரன்; வழுதி-பாண்டியன்; இவன் சிலம்பு சுட்டும், 'செங்கண் ஆயிரத்தோன் திறல் விளங் காரம் பொங்கொளி மார்பிற் பூண்டோன்;ஆகிய பாண்டியனாக இருக்கலாம்; ஔதாரன்-உதாரன குணம் உடையவன்; உத் தண்டம்-பெருமை; பிரசண்டம்-கடுமை (உறுதி); நிபுணன்-மிக்க திறனை உடையவன்; நரவாகனம்-சிவிகை; கஞ்சம்-தாமரை; மங்கை-திருமகள்; மதிவதனன்-சந்தரன் போன்ற அழகிய முகத்தையுடையவன்; செந்தாமரைக்கண்ணன்-திருமால், மீறு-மிகுதி.

தலைவனின் பண்பு நலன்கள் இப்பாடலில் சிறப்பாகப் பாராட்டப் பெறுகின்றன. வாய்மைக் கொருவன், வாக்கில் அரிச்சந்திரன், எனத் தூதிலும் இப்பண்பினை வலியுறுத்தி யுள்ளார்.

## 8. சிறுபறைப் பருவம்

முறைவண்ட விட்டிளைய சிறுமகளிர் விளையாடு
முன்றில்நெடு வீதிதோறும்
மூதிர்மங் கலத்திருக் கலியாண வாசல்மண
முரசொலி முழங்கதின்மேல்

துறைவண் டமிழ்க்கோவை பிள்ளைக்கவிப் பாடல்
சொல்லிவரு நாவலோர்க்குச்
சுரபிசிந் தாமணி விண்மழையெ னப்பல்நிதி
சொரிந்துகொடை முரசமார்ப்ப
நறைவண்டர் இடுமலர்க் குழல்விசய மடமங்கை
நடனமிட வாட்போரிடு
நாட்(டு)போ ரிலடல்வெற்றி முரசொலி கறங்கடனை
நாடிவரு பேட்டிளஞ்சூற்
சிறைவண்டு கிண்டும் பசுங்குவளை மணிமார்ப
சிறுபறை முழக்கியருளே
செயமீறு குருகைநகர் வருதிருவேங் கடநாத
சிறுபறை முழக்கியருளே. 50

## பொழிப்பு

சிற்றிலை அதன் இயல்புபடி முறையாக அமைத்து இளைய சிறு மகளிர் விளையாடுகின்ற முன்றில்களையுடைய நீண்ட வீதிகள் தோறும் மிகுதியான பொலிவுடைய கல்யாணவாசலில் மணமுரசின் ஒலி பெரிதாக ஒலிக்க; உன் மீது முதிர்ந்த வண்மையுடைய தமிழில் கோவை, பிள்ளைக்கவி முதலிய பிரபந்தங்களைப் பாடி வருகின்ற புலவர்களுக்குக் காமதேனு போன்றும், சிந்தாமணி போன்றும், வான் மழை போன்றும் பலவகையான செல்வங்களைப் பொழிந்து கொடை முரசம் ஒலிக்க; தேன் நிறைந்த நறுமணம் பொருந்திய மலர் சூடிய கூந்தலையுடைய வெற்றியாகிய, மடப்பம் பொருந்திய மங்கை நடனம் இட வாட்போர் செய்கின்ற நாள்போரில் எழும் வெற்றி முரசின் ஒலி கறங்க, தேனை நாடி வருகின்ற சிறகினையுடைய வண்டின் இளஞ்சூல் கொண்ட பேடு கிண்டுகின்ற பசுமையான குவளை மலர்களை மாலையாக அணிந்த அழகிய மார்பனே சிறுபறை முழக்கியருள். மிகுந்த வெற்றியையுடைய குருகைநகர் வருதிருவேங்கடநாதனே சிறுபறை முழக்கியருள்.

## குறிப்புரை

முறை-இயல்பு; வண்டல்-சிற்றில்; முதிர்-மிகுதி; மங்கலம்-பொலிவு; முழங்க-பேரொலி; நாவலோர்-புலவர்; சுரபி-காமதேனு (பாற்கடல் கடைந்த காலத்தில் தோன்றிய பசு; இதை முனிவர்கள் அடைந்தனர். வேண்டுவார் வேண்டுவதை ஈயவல்ல பெருமையுடையது) நாட்போர்-முன்னதாகவே நாள் குறித்து

வைத்துச் செய்யும் போர்; சிந்தாமணி-விரும்பியதைக் கொடுக்க வல்ல தெய்வமணி; நறை-தேன்; வண்டர்-நறுமணம்.

2. இரைக்கும் பனிக்கருங் கடல்முழக் கென்னவிய
லிசைநாட கப்புலவர்பால்
எண்டிசையு மதிர்குரற் றிண்டிம முழங்கவிரு
திட்டவெண் சங்கமார்ப்ப
நிரைக்குங் கடுங்கூளி குலவியிட் டுப்பிண
நிணச்சோறு வாய்குதட்டி
நின்றாவலங் கொட்ட வடையலார் வளநகரி
னெய்தலம்பறை கொட்டவான்
வரைக்கும் பொலன்கிரி வரைக்கும் பெரும்புவி
வரைக்குஞ் செலுத்திகீர்த்தி
மன்னர்மன் னவன்சுப்ர மணியமகி பாலனருள்
வரபால மதகுதோறுந்
திரைக்குந் திருப்பொருனை சூழ்வழுதி வளநாட
சிறுபறை முழக்கியருளே
செயமீறு குருகைநகர் தருதிருவேங் கடநாத
சிறுபறை முழக்கியருளே. 51

## பொழிப்பு

அலைகள் ஒலிக்கின்ற அச்சந்தருகின்ற கருமையான கடலின் பேரொலி போன்று, இயல், இசை, நாடகமாகிய முத்தமிழில் சிறப்புற்ற புலவர்களிடம் எட்டுத் திசைகளும் எதிரொலிக்கும் படியான குரலையுடைய திண்டிமம் முழங்கவும்; வெற்றிச் சின்னமான வெண்சங்கு ஒலிக்கவும்; சினம் கொண்ட மூர்க்கத் தனம் நிறைந்த பேய்க்கூட்டம் கூடி பிணநிணச் சோற்றினை வாயிலிட்டு மென்று தின்று பின் உரக்கக் கத்தவும், தன்னைப் பணியாத பகைவர்களின் வளமையான நகரில் நெய்தற் பறை கொட்டவும், வான்வரைக்கும், பொலன்கிரி வரைக்கும், பெரிய இப்பூமி முழுவதும் புகழைச் செலுத்துகின்ற அரசர்க்கரசனான சுப்பிரமணிய மன்னன் அருளுகின்ற மேன்மை யான மைந்தனே! மதகுகள் தோறும் அலை வீசுகின்ற சிறப் புடைய பொருநை நதி சூழ்ந்த அழகிய வழுதி வள நாடனே! சிறு பறையை முழக்கியருள்க. வெற்றி மிகுந்த குருகை நகர் தரு திருவேங்கட நாதனே சிறுபறையை முழக்கியருள்க.

## குறிப்புரை

இரைக்கும்-(அலைகள்) ஒலிக்கும்; பனி-அச்சம்; முழக்கு-பேரொலி; அதிர்குரல்-எதிரொலி; விருது-வெற்றி; நிரை-கூட்டம்; கடு-சினம், மூர்க்கத்தனம்; கூளி-பேய், ஆவலம் கொட்டல்-வாயைக் கையால் தட்டிக் கொண்டே உரக்கக் கத்து தல், அடையலார்-பகைவர்; நெய்தற்பறை-சாவுப்பறை;பொலன் கிரி-பொன்மயமானகிரி (மேருமலை); மகிபாலன்-அரசன்.

தலைவன் தன்னைப் போற்றுவார்க்குச் சிறப்பையும் தூற்றுவார்க்கு அழிவையும் தர வல்லவன் என்பதனை இப் பாடலால் உணர்த்துகிறார்.

3. சற்குணவ சீரனுயர் மீனாட்சி நாதவுத்
தண்டமார்க் கண்டனான
சாமிநா தன்பெரிய திருவடிந ரேந்திரனிவர்
தாட்டீக னான துணைவன்
மற்புயக் காரிசங் கரநார ணன்சுப்ர
மணியன்உயர் தையல்பாக
மால்சீனி வாசமூர்த் திக்குருசி லிவர்களக
மகிழ்மருக னேநாவலோர்
சொற்குண மறிந்துவிலை பெற்றசா லுவையிழைத்
துப்பட்டி பாகைசெம்பொற்
சுடர்மணிப் பணிகனக முதலான பரிசெலாந்
தோற்றமா கக்கொடுக்கும்
அற்புதக் கருணாக டாட்சமுதல் வள்ளலே
அணிபறை முழக்கியருளே
அனவரத கலியாண நிறைதிருவேங் கடநாத
அணிபறை முழக்கியருளே. 52

## பொழிப்பு

சிறந்த குணங்களையுடைய புகழில் உயர்ந்த மீனாட்சி நாதன், பெருமை மிகுந்த மார்க்கண்டனான சாமிநாதன், பெரியதிருவடி, நரேந்திரன் இவர்களின் பெருமைமிக்க பலம் பொருந்திய துணைவன்; வலிமையான பருத்த தோள்களை யுடைய காரிபோன்ற வள்ளன்மையுடைய சங்கரநாரணன், சுப்பிரமணியன், புகழுடைய தையல் பாகன், பெருமையுடைய தலைவனான சீனிவாசமூர்த்தி, இவர்களின் மனம் மகிழ்கின்ற மருகனே! புலவர்கள் பாடலின் தரமறிந்து அதற்கேற்ப விலை

மதிப்பற்ற சாலுவை, இழைத்துப்பட்டி, தலைப்பாகை, சுடர் விடுகின்ற மணி பதித்த சிவந்த பொன் ஆபரணங்கள், பொற் காசுகள் முதலான அன்பளிப்புகளைத் தோற்றமாகக் கொடுக்கும் அற்புதமான அருள் பார்வையுடைய வள்ளல்களில் முதன்மை யானவனே அழகு செய்யப்பட்ட பறையை முழக்கியருள். மங்கலம் நிறைந்த திருவேங்கடநாதனே அழகிய பறையை முழக்கியருள்.

## குறிப்புரை

சற்குணம்-நல்லகுணம்; சீரன்-புகழுடையவன்; உத்தண்டம்-பெருமை; மார்க்கண்டன்-மிருகண்டு முனிவருக்கு மருத்துவ தியிடம் பிறந்தவர். சிவபெருமானால் என்றும் பதினாறு வயதுடையவராய் விளங்கியவர். தாட்டீகன்-பெருமை, பலம்; மற்புயம்-பருத்தவலிமையான தோள், காரி-கடையேழு வள்ளல் களுள் ஒருவன். மலையமான் திருமுடிக்காரி என்பது பெயர்; பெண்ணையாற்றங்கரையில் உள்ள மலாடென்று வழங்கும் மலையமானாட்டின் அரசன். மூவேந்தர்களுக்கும் தனித்தனியே உதவியவன்; புலவர்களுக்கும், அந்தணர்களுக்கும் வரையாது வழங்கியவன். மால்-பெருமை, மருகன்-வழிவழிவருபவன் சாலுவை > சால்வை-கம்பிளிப்போர்வை; இழை-மென்மை; துப்பட்டி-மேல் விரிப்புத்துணி; பாகை-தலைப்பாகை, பணி-ஆபரணம்; தோற்றமாகக் கொடுக்கும்-தலைவனின் வள்ளன் மையை மிகுதிப்படுத்திக் காட்டுவதற்காக, இவ்வளவு பரிசில் களையும் ஒரு ஆரம்பமாகத்தான் கொடுக்கிறான்; இதைவிட இன்னும் அதிகமாகத் தருவான் என்பதனை உணர்த்துவதற்காக இவ்வாறு குறிப்பிடுகிறார். கடாட்சம்-அருள்.

புலவர்களின் வரிசையறிந்து நல்குதல் புரவலர் இயல்பு. 'வரிசையறிதலும், வரையாது கொடுத்தலும்' (சிறுபாணாற்றுப் படை-217) அவர்களின் சிறப்பாக பல பாடல்கள் சுட்டும்.

4. இலகு பசும்பொன் னருவிச் சாரல்
இருங்கழை மணிமுத்தும்
இசைபயில் வரிவளை யுதவிய முத்தமும்
இளமதி நிலவீனப்
பல்கிளை வயிரச் சுடர்மணி செங்கேழ்ப்
பருதி கதிர்வீசப்
பகலிர வறியா தொழுகொளி முதிரும்
பைம்பொற் கற்பகநாட்

டுலகிது வெனவந் தளவில ரம்பையர்
ஒருமுறை நடனமிட
உயர்மணி மாளிகை சூழ்குரு காபுரி
உத்தம மிகுகங்கா
குலமலி விசய விதரண சுமுகா
கொட்டுக சிறுபறையே
குருவருள் பெறுதிரு வேங்கட நாத
கொட்டுக சிறுபறையே. 53

## பொழிப்பு

விளங்குகின்ற பசுமையான பொன்போன்று ஒளிறுகின்ற அருவி வீழ்கின்ற மலையின் பக்கம் உள்ள பெரிய மூங்கில்களின் முத்தும், இனிய ஓசையுடைய அழகிய கடற் சங்குகள் உதவிய முத்தும், இளமையான சந்திரன் ஒளிவிடவும், பலகிளைகளாக ஒளி விடுகின்ற வயிரமணி போன்று சிவந்த ஒளியினைச் சூரியனின் கதிர்கள் தரவும் கண்டு, இது பகலா அன்றி இரவா என்று அறிய இயலாது ஒளி நிறைந்துள்ள பசுமையான பொன் போன்ற கற்பகத்தரு உள்ள வானுலகு என்று எண்ணற்ற அரம்பையர் ஒரு கால் இங்கு வந்து நடனமிட, உயர்ந்த அழகு வாய்ந்த மாளிகைகள் சூழ்ந்த குருகாபுரியின் மிகச்சிறப்புடைய கங்கா குலத்தில் வெற்றி மிகுந்த தயாள குணம் கொண்ட சுமுகா கொட்டுக சிறுபறையே. குருவாகிய வானமாமலை முனிவரின் திருவருள் பெறு திருவேங்கடநாதனே கொட்டுக சிறுபறையே.

## குறிப்புரை

இலகு விளங்குகின்ற; சாரல்-பக்கம்; இரு-பெரிய; கழை-மூங்கில்; நிலவு-ஒளி; கேழ்-ஒளி; பருதி-சூரியன்; கற்பக நாட்டுலகு-விண்ணுலகு; அரம்பையர்-தெய்வமகளிர்; மணி-அழகு; உத்தமம்-மிகச்சிறந்த; மணி-மிகுந்த; விதரணம்-தயாளகுணம்; சுமுகான்-அன்புடையவன்.

தலைவன் நகர்வளம் உயர்வு நவிற்சிபடப் புனைந்துரைக்கப் படுகிறது. தலைவனின் நகர் எவற்றால் தேவருலகாகக் காட்சி யளிக்கின்றது என்பதனைத் தம் தூதுப் பிரபந்தத்தில்,

'வாட்டமிலாச்
சொற்புலவோர் சூழுதலான் சுற்றரம்பை மேவுதலான்
கற்பகம்சேர்ந் தின்பநலங் காட்டுதலால்-அற்புதஞ்சேர்
கொண்டல்படிந் தேறியவான் கோபுரம்நின் றோங்குதலால்

விண்டமலர்த் தேவதரு மேவுதலால்—அண்டர்தொழு
சிந்தா மணிஎனுமத் தெய்வம் வளர்ந்திடலால்
இந்திரனைப் போலே எழிலோங்கிச் - சந்ததமும்
கல்வியும் கேள்வியும் கற்றோரும் வேதியரும்
செல்வப் பொருளும் திருந்திழையார் — பல்விதமா
ஆடிடமும் மேல்முகப்பும் அம்பொன்நெடு மாமதிலும்
மேடைபுடை சூழ்ராச வீதிகளும்—பாடியசொல்
கான இசையும் கவிப்புலவோர் சொல்தமிழும்
வானம்வரை யோங்குமணி மண்டபமும்—ஞானத்
திருவாய் மொழியும் திருமொழியும் வேதத்து
உருவாம் விழாவின் உவப்பும்—பெருவாழ்வும்
நித்தியகல் யாண நிறையும் நிறைந்துஅளகை
யொத்த திருக்குருகை'

எனக் கவினுறக் காட்சிப்படுத்துகிறார்.

5. விண்டல முகடு கடக்கும் புரிசை
வெளிச்சா ளரவழிபோய்
வெள்ளைப் பிள்ளை நிலாமதி தவழ்மணி
மேடை முகப்பிலும்வான்
மண்டல மிடுசுட ரிரவி நெடுந்தேர்
வாம்பரி தாண்டநெடு
வழிபட நெடிதாம் வெளியக டுருவு
மணிப்பொற் கோபுரமும்
பண்டவழ் விளரிக் கிளைவண் டுழுது
படிந்து குடைந்தூதிப்
பருமடல் கீறப் புதுநறை பருகிப்
பயில்பூந் தண்டலையுங்
கொண்டல் முழக்கிய குருகைப் பதியாய்
கொட்டுக சிறுபறையே
குருவருள் பெறுதிரு வேங்கட நாத
கொட்டுக சிறுபறையே. 54

## பொழிப்பு

வானின் உச்சியைக் கடக்கும்படியாக உயர்ந்துள்ள மதிலின் வெளிப்பகுதியாகிய பலகணியின் வழியாகப் போய் வெண்மையான ஒளிவிடுகின்ற பிள்ளைமதி தவழும் மணி பதித்தசெய்குன்று களிலும், விண்வெளியில் சுடர்விட்டுப் பிரகாசிக்கின்ற சூரியனின் தேரில் உள்ள உயர்ந்த அழகிய குதிரைகள் தாண்டுகின்ற நீண்ட

வழி தடைபடும்படி வானின் நடுப்பகுதியை உருவிச் செல்லும்படி உயர்ந்துள்ள மணிபதித்த பொற் கோபுரங்களிலும், இன்னிசை பாடுகின்ற இளமையான வண்டுஇனம் பருத்த மடல்களையுடைய மலர்களில், உழுதுபடிந்து, குழல் போன்ற அமைப்பை உட்செலுத்தி அதிலிருந்து வழியும் புதிதான தேனைப்பருகி ஒலிசெய்கின்ற பூஞ்சோலைகளிலும் மேகங்கள் முழக்குகின்ற குருகையின் தலைவனே சிறுபறை கொட்டியருளே. குருவருள் பெறு திருவேங்கட நாதனே சிறுபறை முழக்கியருளே.

## குறிப்புரை

முகடு-உச்சி; புரிசை-மதில்; வெளி-புறம்; சாளரம்-பலகணி; நிலா-ஒளி; மேடை-செய்குன்று; வாம்பரி-அழகியகுதிரை; அகடு-நடுப்பகுதி; விளரி-இளமை; கிளை-இனம்; குடைந்து-கிண்ட, ஊதி-குழல்போன்ற அமைப்பைச் செலுத்தி, மடல்-பூவிதழ்; தண்டலை-சோலை; கொண்டல்-மேகம்.

தலைவனின் நகர் வளம் இயம்பும் புலவர், வண்டுகள் தேனருந்துவதனை, 'பண்டவழ் விளரிக்கிளை வண்டுழுதுபடிந்து குடைந்தூதிப் பருமடல் கீறப் புது நறை பருகி' எனக் காட்சிப் படுத்தியிருப்பது இன்புறற்பாலது.

6. பகரப் பொருட்சுவைச் செம்பாக சாரம்
பழுத்தொழுக வடியிட்டசொற்
பாடற் செழுந்தமிழ்ச் சங்கீத இசைபழகு
பாவலவர் வாழிபாட
மகரக் கடற்பெரும் புவியரசர் திறைகொண்டு
வந்துதொழு தேத்தவீதி
வாயில்நிறை மதிபோன்ற வெண்மணற் சிற்றிலை
வளைத்துவிளை யாடிமோதுந்
தகரக் கருங்குழற் பேதைமட மகளிர்முத்
தார்ந்தபந் தாடுமாடந்
தமனியத் தடநெடுங் கோபுரப் புரிசைவெண்
டாரகை யடுத்தகனகச்
சிகரப் பொருப்புநிகர் தென்குருகை யூர்க்கிறைவ
சிறுபறை முழக்கியருளே
திடசாலி துரைதிருவேங் கடநாத பூபால
சிறுபறை முழக்கியருளே. 55

## பொழிப்பு

பிறர்க்கு எடுத்துச் சொல்லப் பிறக்கும் பொருட்சுவையும், அதற்குச் சமமான ஓசைச் சுவையும் நிறைந்து வழியும்படி தேர்ந்த சொற்களாலான பாடல்களால் வளம் நிறைந்த இன்னிசை மிகுந்த தமிழிசையொடு பழகுகின்ற பாவலர்கள் வாழ்த்துப் பாடவும்; மீன்கள் நிறைந்துள்ள கடலையுடைய புவியரசர்கள் தங்கள் செல்வங்களைத் திறையாகக் கொண்டு வந்து வணங்கிப் போற்றவும்; நறுமணம் கமழுகின்ற கறுத்த கூந்தலையுடைய மடப்பம் பொருந்திய பேதைப் பருவ மகளிர் தெருக்களின் நுழைவாயிலில் பூரணச் சந்திரன் போன்ற வெண் மணல் கொண்டு சிற்றிலை அமைத்து விளையாடி, பின் முத்துகளால் அமைந்த பந்து கொண்டு விளையாடுகின்ற மேன் மாடங்களையுடைய பொன்னாலாகிய பெருமை வாய்ந்த உயர்ந்த கோபுரங்களை உடைய மதிலானது, வெண்மையான நட்சத்திரங்களை யடுத்த பொன்போன்ற உச்சியினை உடைய மலையினை நிகர்க்கும் தென் குருகூர்க்குத் தலைவனே, சிறுபறை முழக்கியருள். வலிமைமிகுந்த துரை திருவேங்கட நாத பூபாலனே சிறுபறை முழக்கியருள்.

## குறிப்புரை

மகரம்-மீன்; தகரம்-நறுமணம்; தமனியம்–பொன்; புரிசை-மதில்; தாரகை- விண்மீன்; சிகரம்-மலையுச்சி; நிகர்-ஒத்த; திடசாலி-வலிமையுடையவன்.

தமிழ் இலக்கியம் எப்படி இருக்க வேண்டும் என்பதனைக் காட்டுவதன் மூலம் தம் மொழிப் பற்றை வெளிப்படுத்துகிறார் இப் பாடலின் முதலடியில்.

7. பொருவிற் குனித்தசிறு பிறைநுதற் குறுநகைப்
புணர்முலைக் கடைசியரெலாம்
புதுநாற்று நட்டதண் கழனியம் படுகாப்
புறத்துமணல் வண்டலூடு
மருவிக் கிடக்குங் குடக்கூன் முடக்கிய
வலம்புரி சிலம்பல்செவியின்
வாய்மடுத் தலைத்தது நீரோடை விட்டிள
வராற்கன்று தாவுபூகத்
தருவிற்குள் வண்டுமது கரமுஞ் சுரும்பும்வளர்
சங்கீத விசைமிழற்றத்

தழைமடற் சிறைவிரித் திளமஞ்ஞை தொகுதியாய்ச்
சந்ததம் பூங்காவணத்
தெருவிற்கு ணிர்த்தமிடு தென்குருகை யூர்க்கிறைவ
சிறுபறை முழக்கியருளே
திடசாலி துரைதிருவேங் கடநாத பூபால
சிறுபறை முழக்கியருளே. 56

## பொழிப்பு

வில் போன்று வளைந்த சிறு பிறை போன்ற நெற்றியையும், இதழ்களில் புன்சிரிப்பையும் நெருங்கியகொங்கைகளையும்உடைய மருத நில மகளிரெல்லாம் புதிய நாற்றுகளை நட்ட குளிர்ந்த மருத நிலத்தில் உள்ள அழகிய பரந்த சோலையின் புறத்து வண்டல் மணலின் இடையே கலந்து கிடக்கின்ற வளைவுகளைச் சுற்றிக் கொண்டிருக்கின்ற வலம்புரிச் சங்குகளின் ஒலியினைக் கேட்டு, நீரோடையில் அலைந்து திரிந்து கொண்டிருக்கிற வரால் மீனின் கன்று அதனை விட்டுத்தாவும், திரட்சி வாய்ந்த புதருக்குள் வண்டும், மதுகரமும், சுரும்பும், இனிமையான இசையைப் பெரிதாக ஒலிக்கும்படிப் பாட, பனைமடல் போன்ற தன் தோகையின் இறகுகளை விரித்து இனிமையுடைய மயில்கள் கூட்டமாய் எப்பொழுதும் பொலிவுடைய பூபந்தருடைய தெருவிற்குள் நடனமிடும், தென் குருகையூர்க்குத் தலைவனே! சிறுபறை முழக்கியருள். வலிமை நிறைந்த தலைவன் திருவேங்கட நாதனே சிறுபறை முழக்கியருள்.

## குறிப்புரை

பொரு-ஒத்த; குனித்த-வளைந்த; குறுநகை-புன்சிரிப்பு; கடைசியர்-மருதநில மகளிர்; கழனி-மருதநிலம்; அம்-அழகிய; படு-பரந்த; கா-சோலை; புறம்-வெளி; வண்டல்-நீரொதுக்கித் தள்ளிய மண்; மருவி-கலந்து; குட- வளைவு; கூன்-வளைவு; சிலம்பல்-ஒலி, அலைந்தது-திரிந்தது; பூகம்-திரட்சி (இருண்ட); தரு-புதர்; வண்டு-பெண் வண்டு; மதுகரம்-தேனி, ஆண்வண்டு; தழை-மயிற்தோகை; மடல்-பனைமடல்; சிறை-இறகு; மஞ்ஞை-மயில்; சந்ததம்-எப்பொழுதும்; காவணம்-பந்தல்.

## 9. சிற்றில் பருவம்

கறையளக் குங்கரட மடைதிறந் தொழுகுங்
கடாம்பொழி படாம்பொதிநுதற்
களியானை எட்டும் சுமந்தபார் முழுதும்
கவிக்கும்வெண் குடைநிழற்கீழ்
முறையளக் குந்தனிச் செங்கோன டாத்தியிருள்
மூடுவெங் கலிதுரந்து
முற்றுமொரு கவ்வென்ற சத்தமில் லாதுவெம்
முரசக் குறும்படக்கி
நிறையளக் குந்தரும நெறிதழைத் தோங்கமனு
நீதிவழு வாதுலகெலாம்
நிலைபெற்ற தண்ணளி சுமப்பதல் லாலிது
நினக்குமர பன்றுமருவார்
திறையளக் குஞ்சமுக வரநதிக் குலாதிபதி
சிற்றில்சிதை யாதருள்கவே
தென்குருகை நகர்மேவி வளர்திருவேங் கடநாத
சிற்றில்சிதை யாதருள்கவே. 57

### பொழிப்பு

கருமையை அளவிடும்படி உள்ள, மதம்பாயும் துளையின் ஓடை திறந்து ஒழுகுகின்ற மதநீர் பொழியும் முகபடாம் அணிந்துள்ள நெற்றியுடைய மதயானைகள் எட்டும் சுமந்த பூமி முழுவதையும் தன்னுடைய வெண்கொற்றக் குடை நிழற் கீழ்ப்படுத்தி, அரச நீதிப்படி ஒப்பற்ற முறையில் செங்கோல் செலுத்தி, இருள் சூழச் செய்கின்ற கொடிய வறுமையை அழித்து, சிறிதுகூட மீண்டும் எதிர்ப்பு ஓசை யெழாதபடி முழுவதுமாகப் பகையரசர்களின் வலிமையை அடக்கி, மாட்சிமையைக் காட்டும் தருமத்தின் வழி சிறப்புற்று ஓங்கும்படி மனுநீதி வழுவாது, உலகு முழுவதையும் உறுதியாக நிலைத்து நிற்கக் கூடிய கருணையால் காப்பது அல்லால் உனக்கு இது பொருந்தக்கூடிய மரபன்று; பகைவர்கள் திறை அளிக்கின்ற சமூகனே! மேலான கங்கை குலத்திற்குத் தலைவனே! சிற்றில் சிதையாது அருள்கவே. தென்குருகையை விருப்புடன் நின் இருப்பிடமாகக் கொண்டுள்ள வேங்கடநாதனே சிற்றில் சிதையாது அருள்கவே.

### குறிப்புரை

கறை-கருமை; அளக்கும்-அளவிடும்; கரடம்-யானைகபோலத்திலிருந்து மதம் பாயும் துளை; மடை-ஓடை; கடாம்-

மதநீர்; படாம்-முகபடாம்; பொதி-அணிந்த; களி-மதம்; முறை-அரசநீதி; நடாத்தி-நடத்தி; கலி-வறுமை; துரந்து-அழித்து; குறுமை-வலிமை; நிறை-மாட்சிமை; தண்ணளி-இரக்கம், கருணை; மருவார்-பகைவர்; மேவி-தோன்றி.

2. வீக்குங் கருங்குழல் பகைமண்ட வீகர்செய
விருதிடுங் கொடிபறித்து
மேழிக் கொடிக்கட்டி யவர்பெரும் பதியில்மணி
மேடைவீ தியும்வரத்தும்
போக்குந் தெரிக்கொணா வாயிலுங் கொத்தளப்
புரிசையு மகழ்க்கிடங்கும்
பொடிபடுத் துவதுன் புயல்வலிக் கியல்புயாம்
புதுமணற் றிரளெடுத்துண்
டாக்கும் சிறுக்கூட முந்தளமு மிடைக்கழியு
மாடரங் குந்திண்ணையும்
அறையுமா ளிகையுநீ கண்டுவப் பெய்தாது
அழிக்கமுறை யன்றுவிரிநீர்
தேக்குந் தடந்துறைப் பொருனைநன் னதிவேந்த
சிற்றில்சிதை யாதருள்கவே
தென்குருகை நகர்மேவி வளர்திருவேங் கடநாத
சிற்றில்சிதை யாதருள்கவே. 58

## பொழிப்பு

கருமையான வீரக்கழல்களை இறுக்கமாகக் கட்டியுள்ள பகைநாட்டு அரசர்களின் வெற்றிச் சின்னமாகிய கொடியினைப் பறித்து அதற்குப் பதிலாகக் கலப்பைக் கொடியைக் கட்டி, அவர்களுடைய பெரிய ஊரில் அழகிய மாடங்களை உடைய வீடுகள் நிறைந்த வீதியினையும், வருவார் போவாரை அறிய முடியாத அளவில் நெரிசலாக அமைந்துள்ள நகரத்தின் வாயில் களையும், கோட்டையினையுடைய மதிலையும், அகன்ற அகழியினையும் பொடியாக்குவது உனது தோள் வலிமைக்கு இயல்பான ஒன்றாகும். ஆயின் நாங்கள் புது மணலினைத் திரட்டி எடுத்து உண்டாக்கும் சிறிய கூடம், தளம், இடைக்கழி, ஆடரங்கு, திண்ணை, அறை, மாளிகை இவற்றைக் கண்டு நீ மகிழாது அழிப்பது முறையன்று. அலைகளையுடைய பொருநை நதிக்கு வேந்தனே! சிற்றில் சிதையாது அருள்க. தென்குருகை நகர் மேவி வளர்கின்ற திருவேங்கடநாதனே சிற்றில் சிதையாது அருள்க.

## குறிப்புரை

வீக்கும்-கட்டும்; கழல்-வீரக்கழல்; விருது-வெற்றிச் சின்னம்; மேடை-மாடம்; கொத்தளம்-கோட்டை; புரிசை-மதில்; அகழ் கிடங்கு-ஆழமான அகழி; கூடம்-வீட்டின் ஓர் பகுதி; தளம்-உப்பரிகை; இடைக்கழி-வீட்டின் நடுக்கட்டு; ஆடரங்கு-நடனமாடுமிடம்; திண்ணை-வீட்டின் வேதிகை; விரி-அலை; தடம்-அகன்ற; துறை-நீர்நிலை.

தலைவனின் வீரத்தைச் சிறப்பிக்கச் சிற்றில் சிதைத்தலைப் பயன் கொண்டுள்ளார்.

3. கோதைப் பிழிந்துதறி வடியிடு கரும்பின்
கொழுஞ்சாறு தெளியவைத்து
கூன்வலம் புரிகொடு முகந்துவச் சிரக்கட்டி
கூட்டிய வடுப்பில்வைக்குந்
தூதைக் கலத்தில்வார்த் துலையேத்தி முதிர்சாலி
சொரியுமுத் தரிசிபெய்து
சுடர்விடு கனற்கொழுந் தெரியாது விரைவிலடு
சுடுசோ றமைத்திறக்கித்
தாதைப் பொதிந்தநாண் முல்லையம் பூங்கருணை
சமைத்துவிளை யாடுசிறியேந்
தமருடன் பரிவாக வுன்னையு மிருத்தித்
தனிப்புது விருந்தளிப்பேம்
சீதைக்கு வரிசிலை குழைத்தரகு ராமனே
சிற்றில்சிதை யாதருள்கவே
தென்குருகை நகர்மேவி வளர்திருவேங் கடநாத
சிற்றில்சிதை யாதருள்கவே. 59

## பொழிப்பு

கரும்பினைப் பிழிந்து அதில் உள்ள கோதினை நீக்கி வடிகின்ற செழுமையான சாற்றினைத் தெளிய வைத்து, வளைந்த வலம்புரியால் அதனை முகந்து, வைரமணிகள் கொண்டு, கூட்டிய அடுப்பின் மீது வைத்துள்ள பானையில் அதனைப் பெய்து உலையாகக் கொண்டு, சிவந்த சாலி நெல் தரும் முத்துப்போன்ற அரிசியினைப் போட்டு, சுடர்விடுகின்ற நெருப்பின் கொழுந்து எரியாமலேயே, விரைவாக ஆக்குகின்ற சுடுசோறு சமைத்து இறக்கி, தேன் நிறைந்துள்ள அன்றலர்ந்த

அழகிய முல்லைப்பூவினைக் கறியாகச் சமைத்து விளையாடுகின்ற சிறியேம் யாம். எங்கள் சுற்றத்துடன் உன்னையும் அன்பாக இருத்திச் சிறப்பாகப் புதிய விருந்து கொடுப்போம். சீதையைப் பெறுவதற்காக வளைந்த வில்லை உடைத்த ரகுராமனே எங்கள் சிற்றிலைச் சிதைக்காது அருள்க. தென்குருகை நகர் மேவி வளர் திருவேங்கடநாதனே சிற்றில் சிதையாது அருள்க.

## குறிப்புரை

கோது-சக்கை; உதறி-நீக்கி; கொழுஞ்சாறு-செழுமையான சாறு; கூன்-வளைவு; வச்சிரக்கட்டி-வைரமணி; தூதைக்கலம்-விளையாட்டு மரப்பானை,மண்சிறுகலம்; முதிர்-நன்கு விளைந்த; சாலி-செந்நெல்; அடு-சமைத்தல்; தாதை > தாது-தேன்; பரிவாக-அன்பாக; தனி-ஒப்பற்ற; வரிசிலை-வளைந்தவில்; குழைத்த-வருத்திய.

மகளிர் தலைவனுக்கு இடும் விருந்து இதுவரையில் அவன் பிறரிடம் அம்மாதிரி பெறாத சிறப்புடையதாகவும், அவர்கள் பிறர் யாரையும் இவ்விதம் சிறப்பிக்காததாகவும் உள்ள முதல்விருந்து எனும் நிலையைப் 'புதுவிருந்து' என்பதால் புலப்படுத்துகிறார்.

திருச்செந்தூர்ப் பிள்ளைத்தமிழில் பகழிக்கூத்தர், மகளிர் சிற்றிலிழைத்துச் சிறுசோறு அடுதலை,

பொன்னி மணக்கும் புதுப்புனலிற்
புடைசூழ் பணில முத்தெடுத்துப்
புறக்கோட் டகமுண் டாக்கிவலம்
புரியைத் தூதைக் கலமமைத்துக்
கன்னி மணக்குங் கழனியிற்செங்
கமலப் பொகுட்டு முகையுடைத்துக்
கக்குஞ் செழுந்தேன் உலையேற்றிக்
கழைநித் திலவல் சியைப்புகட்டிப்
பன்னி மணக்கும் புதுப்பொழிலில்
பலபூப் பறித்துக் கறிதிருத்திப்
பரிந்து சிறுசோ றடுமருமை
பாராய் அயிரா வதப்பாகன்

சென்னி மணக்கும் சேவடியால்
சிறியேம் சிற்றில் சிதையேலே
திரை முத்தெறியுந் திருச்செந்தூர்ச்
செல்வா சிற்றில் சிதையேலே. (84)

எனப் பாடியுள்ளமை இவண் இணைத்து நோக்கற்குரியது.

4. பொருமருவி சொரிமதத் தாறுபாய் குஞ்சரப்
பேரேறு நீசீறினால்
புயவலித் துரியோத னன்கொடுங் கோலரசு
புரியுமா நகரன்றுசூற்
கருமருவு முகிலதிர் கடுங்குரலி ராவணக்
களைபட ரிலங்கையன்று
கபடக் கொடுந்தொழில் கன்னெஞ்ச வஞ்சகக்
கஞ்சனாள் புரமன்றுதண்
பெருமருத வைப்பில்வெண் மணல்குவித் தங்கையாற்
பேதைய ரிழைத்தவண்டல்
பின்னப் படுத்துவது தகுதியோ எங்கள்மேற்
பிரிதிவைத் தனுகுணமதாய்த்
திருமருவு கலியாண புருஷமக மேருநீ
சிற்றில்சிதை யாதருள்கவே
தென்குருகை நகர்மேவி வளர்திருவேங் கடநாத
சிற்றில்சிதை யாதருள்கவே.

## பொழிப்பு

அருவி நீர் போன்று சொரிகின்ற மதம் ஆறாக வழிகின்ற பெருமையுடைய ஆண்யானையாகிய நீ, கோபம் கொண்டு அழிப்பதற்கு இது, தோள் வல்லமையுடைய துரியோதனன் கொடுங்கோலரசு புரிகின்ற அத்தினாபுரம் அன்று; சூல்கொண்ட மேகங்கள் இணைந்து முழங்குவது போன்ற கடுமையான குரலையுடைய இராவணனாகிய களை படரும் இலங்கை மாநகரும் அன்று; வஞ்சனையான கொடுந்தொழில்களைப் புரியும் இரக்கமற்ற கல்நெஞ்சனான கம்சன் ஆளும்மதுரா நகரும் அன்று; அதனால், குளிர்ந்த பெரிய மருதநிலப் பகுதியில் வெண் மணலைக் குவித்துத் தம் கைகளால் பேதைப்பருவப் பெண்டிர் இழைக்கின்ற சிற்றிலைச் சிதைப்பது தகுதியோ? எங்கள் மேல் அன்புவைத்து ஏற்பதற்குரிய நல்ல குணமதாய்ச் செல்வம் பொருந்திய திருமகள் தழுவும் கலியாண புருஷ மகமேரு நீ

சிற்றில் சிதையாது அருள்க. தென் குருகை நகர் மேவி வளர்கின்ற திருவேங்கடநாதனே எம் சிற்றில் சிதையாது அருள்க.

## குறிப்புரை

பொரு-ஒத்த; சொரி-பொழியும்; குஞ்சரம்-யானை; ஏறு-விலங்குகளில் ஆண்; மருவு-சேர்ந்துள்ள; கபடம்-வஞ்சனை; கல்நெஞ்சம்-இரக்கமற்ற நெஞ்சம், வழக்குத்தொடர்; கஞ்சன் > கம்சன்; வைப்பு-நிலப்பகுதி. வண்டல்-சிற்றில்; பிரீதி-அன்பு அனுகுணம்-அனுசரித்துச் செல்லும் குணம்; கலியாண புருஷ, வழக்குச் சொல்.

'அரசன் எவ்வழி குடிகளும் அவ்வழி' எனும் வகையில் புலவர் இராவணனைப் போன்றே அதன் மாந்தரும் இருந்தனர் என்பதனை 'இராவணக் களைபடர் இலங்கை' என்பதால் குறிக்கிறார்.

ஒட்டக் கூத்தர்தம் குலோத்துங்கச் சோழன் பிள்ளைத் தமிழில்,

> வன்மதில் இலங்கை எயில் அன்று, உதியர் கோமான்
> மகோதை எயில் அன்று, மதில் மண்ணை நகர் அன்று
> தென் மதுரை அன்று வடகம்பிலியும் அன்று
> உமது சேவடிகளால் எமது சிற்றில் சிதையேலே (89)

எனப் பாடியிருப்பதை இவண் ஒப்பிட்டு நோக்கலாம்.

துரியோதனன்–திருதராட்டினனுக்கும் காந்தாரிக்கும் பிறந்த நூற்றுவரில் முதல்வன். இவன் கலியினுடைய கூறாக உலகில் தோன்றியவன் என்பர். பாரதப் போரில் கண்ணனின் துணையுடன் வீமனால் அழிக்கப்பட்டவன்.

இராவணன்–விச்சிரவசுவிற்குக் கேசியிடம் பிறந்தவன். சீதையைக் கவர்ந்து அசோக வனத்தில் சிறைவைத்த படியால் அழிந்தொழிந்தான்.

கம்சன்-கண்ணனுடைய அன்னையாகிய தேவகியின் அண்ணன்; யதுவமிசத்தில் போச குலத்தில் உக்கிரசேனனுடைய மகனாகத் தோன்றியவன். இவன் தன்னுடைய தங்கை வயிற்றில் பிறக்கும் எட்டாவது பிள்ளையால் தனக்கு அழிவு நேரிடும் என்பதை உருவிலி வாக்கால் உணர்ந்தான். இவன் சூழ்ச்சி பல புரிந்தும் வெற்றி பெறாது இறுதியில், மதுராவில் நடந்த இந்திரவிழாவிற்கு வந்த தேவகியின் எட்டாவது மகனாகிய

கண்ணனால் அழிக்கப்பட்டான். இக்கம்சன் முன் பிறவியில் காலநேமி எனும் அசுரனாக இருந்ததாகவும் கூறுவர்.

5. குடிவைத் தவர்க்கு மாளிகைபோற்
கூடஞ் சதுக்கை நாப்பண்வைத்துக்
கூபந் தடங்கள் வெட்டிவைத்து
குளமும் புரவும் பெருகவைத்துத்
துடிவைத் துழுமேர்க் கோவைவைத்துத்
தூவும் பலவித் தனைத்தும் வைத்து
சுரக்கும் பசுக்கன்று நிதிவைத்து
சுகமா யுடுத்துண் டிருக்கமதிப்
படிவைத் தளந்து கொடுத்துவைத்துப்
பார்க்க நிதியும் பணியும்வைத்து
பரியா லனஞ்செய் கங்கைகுல
பதியே குருகைப் பதிக்கரசே
அடிவைத் துழக்கி வெண்மணலால்
அமைத்த சிற்றில் சிதையேலே
அருமைத் திருவேங் கடநாதா
அடியேஞ் சிற்றில் சிதையேலே. 61

## பொழிப்பு

நின்னால் குடியமர்த்தப்பட்ட குடிமக்களுக்குப் பெரிய மாளிகை போல் கூடமும், சதுக்கமும் ஊரின் நடுவில் அமைத்து, கிணறுகளையும் நீர்நிலைகளையும் வெட்டிக் கொடுத்து, குளமும் பாசன வயல்களையும் பெருக வைத்து, துடிப்பறை முழக்கி உழுவதற்காக ஏர்களை வரிசையாக வைத்து விதைக்கின்ற பலவகையான வித்துகளையும் வைத்து, பால்தரும் பசுக்களையும் கன்றுகளையும் பொருள்களையும் வைத்து, எவ்வித இடையூறுமின்றி இன்பமாய் வேண்டியதை உடுத்தி உண்டு கொண்டிருக்க அவரவர்களின் சிறப்புப்படி அதற்கேற்ப அளந்து கொடுத்து, மாறுபட்ட பல்வகையான நிதியும் வேலையாட்களும் கொடுத்து அவர்களைப் பாதுகாக்கின்ற கங்கைகுலத்தின் தலைவனே, குருகை நகர்க்கு அரசனே உன்னுடைய பாதத்தை வைத்து உழக்கி வெண்மையான மணலால், அமைத்த சிற்றிலைச் சிதைக்காதே. உன்பால், அன்பு கொண்டுள்ள அடியேம் சிற்றிலை அருமைத் திருவேங்கடநாதனே சிதையாதே.

## குறிப்புரை

குடி-ஆட்சிக்கு உட்பட்டவர்கள்; நாப்பண்-நடுவிடம்; கூபம்-கிணறு; தடம்-நீர்நிலை; புரவு-பாசனவயல்; துடி-சிறுபறை; ஏர்க்கோவை-ஏர்த்தொகுதி; தூவும்-விதைக்கும்;

தலைவனின் பரிபாலன முறையை இங்குச் சிறப்பிக்கிறார்.

6. வடக்குங் குமச்சந் தனக்களப
வாசத் திருமாந் தண்ணாந்து
வார்க்கு ளடங்காப் புடைபெயர்ந்து
மணிப்பூ ணமைத்தற் கிருசெப்பாய்க்
கடக்குஞ் சரத்தின் மருப்பிரண்டும்
களியக் கனகப் பனிவரையும்
காட்சிக் குதவா தகற்றியிரு
கண்ணுஞ் சிறுத்துக் கறுப்பேறிக்
கிடக்குந் தரள மணிமாலைக்
கிசைந்த விளநீர்க் கனதனத்தார்
கிளர்ந்து வளர்ந்த கொடுங்காமக்
கேத மடங்கி ஒடுங்காமல்
அடக்குங் கமலக் கட்கடைபார்த்
தடியேஞ் சிற்றில் சிதையேலே
அருமைத் திருவேங் கடநாதா
அடியேஞ் சிற்றில் சிதையேலே. 62

## பொழிப்பு

குங்குமமும் சந்தனமும் சுண்ணமும் பூசிய நறுமணம் கமழுதலால் இறுமாந்து தலைநிமிர்ந்து கச்சுக்குள் அடங்காது புடைத்து, மணிப்பூண் அமைத்தற்கு இரு செப்புப் போன்று, மதம் வழியும் யானையின் தந்தமிரண்டையும், செருக்குடைய பனிதூங்கும் பொன்மலையான மேருமலையையும் தன் அழகிற்கு ஒப்பாகா என அகற்றி, இருகண்ணும் சிறுத்துக் கறுப்பேறி, அணிந்துள்ள முத்துமணிமாலைக்குப் பொருத்தமாயுள்ள, இளநீரை யொத்த கொங்கைகளையுடைய மாதரார்பால் கிளர்ச்சியுற்று வளர்ந்த கொடிய காமத்துன்பம் அடங்கி ஒடுங்குமாறு அவரது மயக்கத்தை அடக்கும் தாமரை போன்ற திருக்கண்களினால் கடைப்பார்வை பார்த்து உன்னுடைய அடியார்களாகிய எங்களின் சிற்றிலைச் சிதைக்காதே. பெறுதற்கரிய திருவேங்கட நாதனே எங்களின் சிற்றிலைச் சிதைக்காதே.

## குறிப்புரை

களபம்-சுண்ணச்சாந்து; வாசம்-நறுமணம்; அண்ணாந்து; தலைநிமிர்ந்து; வார்-கச்சு; மருப்பு-தந்தம்; களி-செருக்கு-கனகப்பனிவரை-பனிசூழ்ந்த பொன்மலை; காட்சி-அழகு; கிடக்கும்-தங்கியுள்ள; இசைந்த-பொருந்திய; கேதம்-துக்கம்.

7. தோற்றும் பேதைப் பருவமுற்றித்
தொடர்ந்த பெதும்பைப் பருவத்தில்
தூய்நீ ராடித் துகிலுடுத்துச்
சொருகிட் டருஞ்சூ ழிகைமுடித்து
சேற்றுப் புதுநாண் மலர்க்கொழுந்து
செருகி நுதற்சிந் துரந்தீட்டிச்
செழும்பொற் பணியு நவமணிவச்
சிரத்தாழ் வடமும் பூட்டியன்னை
போற்றிப் பசிதீர்த் துக்கழங்கு
பொற்பா கியவம் மனையாடிப்
புதுப்பந் தடித்து நன்பகலிற்
புதிதாய் வண்ட லிழைத்தடிசில்
ஆற்றுந் தருணத் துட்புகுந்தே
அடியேஞ் சிற்றில் சிதையேலே
அருமைத் திருவேங் கடநாத
அடியேஞ் சிற்றில் சிதையேலே. 63

## பொழிப்பு

முன் தோன்றிய பேதைப் பருவம் கழிந்தவுடன் தொடர்கின்ற பெதும்பைப் பருவத்தில் தூய்மையான நீரில் நீராடி, ஆடை அணிந்து, கூந்தலினை அழகிய உச்சிக் கொண்டையாக முடித்து, தேன் நிறைந்துள்ள அன்றலர்ந்த புதிய மலரினையும், கொழுந்தினையும் சூடி, நெற்றியில் திலகம் அணிந்து, சிவந்த பொன்னாற் செய்யப்பட்ட ஆபரணங்களும் நவமணியால் புனையப்பட்ட வயிரத்தாழ்வடமும் பூட்டி அழகு பார்த்து, அன்னை மகிழ்வுடன் வாழ்த்திப் பசியினைத் தீர்க்க, கழங்கும், பொலிவுடைய அம்மனையும் ஆடி, எழிலுடைய பந்தினைக் கொண்டு விளையாடி, நன்பகலில் புதிதாய்ச் சிற்றிலிழைத்துச்சிறு சோறு சமைக்கும் பொழுது இடையில் நுழைந்தே எம் சிற்றிலைச்

சிதைக்காதே. அருமைத் திருவேங்கடநாதா உன்னிடம் அன்பு கொண்டுள்ள அடியேங்களின் சிற்றிலைச் சிதைக்காதே.

## குறிப்புரை

பேதைப்பருவம்-5 வயது முதல் 7 வயது வரையுள்ள பருவம்; சூழிகை-உச்சிக்கொண்டை; சேறு>சேற்று-தேன்; செருகி-நுழைத்து; புதுப்பந்து-எழிலுடையபந்து; பொற்பு-பொலிவு; அடிசில்-உணவு; ஆற்றும்-செய்யும்; தருணம்-பொழுது.

## 10. சிறு தேர்ப்பருவம்

நன்மித் திரச்குழாம் புடைசூழ முழுவயிர
நவமணியில் அச்சமைத்து
நகுகதிர்ச் செம்பொற் றகட்டாழி சேர்த்திறுக
நாட்டுமச் சாணி கொழுவி
வன்மித்த மரகதப் பத்தியா லோரைந்து
வகைநிலம் வகுத்துமுற்றும்
வயிடூரி யத்திலஞ் சுருவாணி புடைநிறுவி
மாணிக்க வெயில்பரப்பும்
பன்முத் தழுத்திப் பரப்புநில மட்டுமேற்
பவளக் கொடுஞ்சிஏற்றிப்
பருமணிச் சுடர்நெடு வடம்பூட்டி வாசப்
பசுந்துளசி யங்கன்றுபோற்
சென்மித்த மீனாட்சி நாதமா லுயிர்த்துணைவ
சிறுதே ருருட்டியருளே
செகரெட்சை புரிதிருவேங் கடநாத மகராச
சிறுதே ருருட்டியருளே. 64

## பொழிப்பு

நல்ல நண்பர்களின் கூட்டம் ஆரவாரத்துடன் சூழ்ந்துவர சிறந்த வயிர நவமணியினால் அச்சு அமைத்து, சூரியனின் சிவந்த கதிர்களைப் பார்த்துச் சிரிக்கும்படியான சிறப்புடைய சிவந்த பொன்னால் அகன்ற சக்கரம் செய்து, தேருடன் இறுக்கமாக இணையும்படி அச்சாணி சார்த்தி, வலிமையுடை மரகத வரிசையால் ஐந்துவகை நிலமும் வகுத்து, முழுவதும் வயிடூரியத்தினால் அமையும்படி சுருவாணி செய்து புடைநிறுவி, மாணிக்கம் போன்று சிவந்த ஒளிதருகின்ற பலவகை முத்துகளை அழுத்தமாகப் பதித்து, தேர்த்தட்டின் மேல் பவளத்தாற் செய்யப்பட்ட கொடிஞ்சியினை ஏற்றி, பருத்த மணிகள் ஒளிவிடுகின்ற நீண்ட வடத்தைப்பூட்டி, மணம் மிகுந்த பசுமையான நிறமுடைய துளசிக்கன்று போல் தோன்றிய பெருமை மிக்க மீனாட்சி

நாதனின் உயிர்த்துணைவனே சிறிய தேரினை உருட்டியருள், இப்புவியைக் காக்கின்ற திருவேங்கடநாத மகராசனே சிறுதேர் உருட்டியருள்.

## குறிப்புரை

மித்திரக்குழாம்-நண்பர் கூட்டம்; புடைசூழ-ஆரவாரத்துடன் பக்கம் சூழ; முழுவயிரம்-பருத்த வயிரம்; அச்சு-சக்கரம் கோத்தற்குரிய உருளை; தகட்டாழி–வர்ணத்தகட்டால் ஆகிய சக்கரம்; அச்சாணி-கடையாணி, கொழுவி-சொருகி; வன்மித்த-வலிமையான; மரகதப்பத்தி-மரகத வரிசை; கொடுஞ்சி> கொடிஞ்சி-தேர்த்தட்டின் முன் நடப்படும் தாமரைப்பூ வடிவிலுள்ள அலங்கார உறுப்பு; வடம்-தடித்த வடம்;சென்மித்த-தோன்றிய; ரெட்சை-காக்கின்ற

தலைவன் சிறுதேரின் இயல்பினை இப்பாடலில் சிறப்பிக்கிறார்.

2. கூட்டுபரி மளநறுஞ் சந்தனச் சாரற்
குறிஞ்சியந் தமிழ்மால்வரைக்
குடிபுக் கிருந்தகுழ விப்பசுந் தென்றற்
கொடிஞ்சியந் தேர்கடாவி
மூட்டுவரி சிலைகுழைத் தாடல்வேள் பகழிதொட
முகிண்முலைப் பருவமகளிர்
முதிர்பரவை யல்குற் றடந்தேர் மருங்கிறு
முலைக்கனக் கச்சிறுகப்
பூட்டுபரு முத்தணி வடம்பிடித் துத்தொழுது
போற்றுமனு சாத்ரமுறையாற்
பூசக்ர முழுதுந் தன்னிலை பெற்றிருப்பப்
புரந்துதிசை எட்டுமுட்டத்
தீட்டுபுகழ் பெற்றசுப் பிரமணிய னருள்புதல்வ
சிறுதே ருருட்டியருளே
செகரெட்சை புரிதிருவேங் கடநாத மகராச
சிறுதே ருருட்டியருளே. 65

## பொழிப்பு

அதிகப்படியான மணம்மிக்க நறியசந்தன மரங்களையுடைய, குறிஞ்சி மலரால் அழகு பெற்ற, தமிழ் தோன்றிய பொதிய மலைச் சாரலில் வசிக்கும் குழவியாகிய பசுந்தென்றலால்

கொடிஞ்சியோடு கூடிய தேரினைச் செலுத்தி, பொருந்தக் கட்டியுள்ள வில்லை வளைத்துத் தொழில் செய்கின்ற மன்மதன் தன் அம்பினைச் செலுத்துதலால் முகிழ்க்கின்ற தனங்களையுடைய பருவ மகளிரின் கடல் போன்ற அகன்ற தேரான அல்குலினையும், இடைமுறியும்படியாகக் கனத்த கொங்கைகள் இறுகும்படியாகக் கச்சணிந்த மார்பிலே அணிந்துள்ள பருத்த முத்தணிந்த வடத்தினைப் பிடித்து, அவர்களைத் தொழுது போற்றும்; மனு நீதி கூறியுள்ள முறைப்படி இவ்வுலகம் முழுவதையும் தன் ஆணையின் கீழ் நிலைபெற்றிருக்கும்படிப் பாதுகாத்து, எட்டுத் திசைகளிலும் நிறையும்படிப் புகழைப் பரப்பியுள்ள சுப்ரமணியன் அருளிய புதல்வனே சிறுதேருருட்டியருள். இப்புவியைப் பாதுகாக்கின்ற திருவேங்கடநாத மகராசனே சிறுதேர் உருட்டியருள்.

## குறிப்புரை

கூட்டு-அதிகப்படுத்து; பரிமளம்-மணம்;குறிஞ்சி-குறிஞ்சி மலர்; தமிழ் மால்வரை-பொதியமலை (அகத்தியர் வாழ்ந்த இடமாதலால் தமிழ் மால்வரை எனப்படுகிறது.) குழைத்த-வளைத்த; வேள்-மன்மதன்; பகழி-அம்பு; முதிர்பரவை-கடல்; மனுசாத்ரம்-மனுநீதி; பூசக்ரம்-உலகம்; தீட்டுதல்-பூசுதல்.

3, மதிக்கும் புவனம் புகழ்பெருகு
வாழிப் பெருமாள் மகராசன்
வளர்வை குந்தை நாதமுகில்
வரிசை பெறுசுப் பிரமணியன்
நிதிக்கு ளுயர்சங் கரமூர்த்தி
நிருபன் துணைவோ ரனைவருக்கும்
நேச முறுமைத் துனனேநன்
நெறிசேர் துங்கத் தொடையான்மால்
பதிக்குந் தமிழ்ச்சுப் பிரமணியன்
பணிமா துலனே மனுபதியே
பகட்டு வாளை வெடிதாவிப்
படரும் பொருநா நதித்துறையிற்
குதிக்குங் குருகைப் பதிக்கரசே
கொடிஞ்சித் தடந்தே ருருட்டுகவே
குமணா திருவேங் கடநாதா
கொடிஞ்சித் தடந்தே ருருட்டுகவே 66

## பொழிப்பு

உலகத்தார் மதிக்கின்ற வளர்கின்ற புகழைப் பெற்ற மகாராசனாகிய வாழிப் பெருமாள், மகிழ்வுடன் முகில்போல் பிறருக்கு வழங்கும் வைகுந்த நாதன், சிறப்புகளைப் பெறுகின்ற சுப்பிரமணியன், செல்வங்களுள் உயர்ந்த சங்கரமூர்த்தி முதலான அரசனின் துணைவர் அனைவருக்கும் அன்புடைய மைத்துனனே; நல்வழிகளின்பாற் செல்கின்ற பெருமையாகிய மாலையை அணிந்த, வளமையில் ஆழ்ந்திருக்கின்ற தமிழின்பால் மிகுந்த விருப்புடைய சுப்பிரமணியன் வணங்குகின்ற மாமனே, மனு பதியே, காண்பவர் கண்களைக் கவருகின்ற வாளைமீன் பலத்த ஓசையுடன் தாவிக் குதிக்கின்ற அகன்ற துறையினை உடைய பொருனை பாயும் குருகை நகரின் அரசனே, கொடிஞ்சியுடைய அகன்ற தேரினை உருட்டியருளுக. கொடையிற்குமணனே திரு வேங்கடநாதனே கொடிஞ்சியுடைய அகன்ற தேரினை உருட்டி யருளுக.

## குறிப்புரை

வளர்-மகிழ்ச்சி; வரிசை-சிறப்பு; நிதி-செல்வம்; நிருபன்-அரசன்; நேசம்-அன்பு; துங்கம்-பெருமை; மால்-வளமை; பதி-ஆழ்ந்திருக்கின்ற; பணி-வணங்கு; மாதுலன்-மாமன்; பகட்டு-கவர்ச்சி; வெடி-பலத்த ஓசை; குமணன்-வள்ளல்களில் ஒருவன், முதிரமலைக்குத் தலைவன், தன் தம்பியால் நாடு கொள்ளப் பட்டுக் காடுபற்றியிருந்த பொழுது பெருந்தலைச் சாத்தனார் இரப்ப அவருக்கு உதவும் நோக்கில் தனது தலை கொடுத்தற்கு வாளைக் கொடுத்தோன்.

பிள்ளைத்தமிழ்ப் பாடல்களில் சிறுதேர்ப் பருவத்தில் சிறு தேரினை உருட்டும்படியாக வேண்டலே மரபு. இப்புலவர் தடந்தேர் உருட்டுகவே என வேண்டியிருத்தல் புதுமையாகும். கண்ணபிரான் தன் பால பருவத்தில் தான் கட்டப்பட்டிருந்த உரலை இழுத்துச் சென்று குருந்தொசித்ததை மனத்துட் கொண்டு, திருமாலாகக் காணும் தலைவனுக்குத் தடந்தேர் உருட்டுதல் பெருமை என்ற நினைவில் இவ்வாறு பாடி யிருக்கலாம்.

4. சூடா மணியே கனகநிதி
சொரியும் புயலே யடுத்தமரர்
சூழ்ந்த பசுங்கற் பகத்தலைவா
துகள்தீர் கல்விக் களஞ்சியமே

கோடாத் தேவ தார்மருக
கொழுந்தே பிஞ்சிற் பழுத்தோனே
குருகூர் மகிழ்மா றனையன்றிக்
குறித்து நினைத்து மறுதேவைத்
தேடா மணக்குஞ் சரக்கன்றே
சீறாது வந்த சிங்கேறே
செகத்திற் புகழ்பெற் றோங்கிவளர்
செல்வத் துரையே மலர்ந்தமுகம்
வாடா தருளும் நவநிதியே
மணிப்பொற் றடந்தே ருருட்டுகவே
மதனா திருவேங் கடநாத
மகிபா சிறுதே ருருட்டுகவே. 67

## பொழிப்பு

தெய்வீக மணியே! பொற்சொல்வத்தை வாரி வழங்குகின்ற மேகமே! தேவர்கள் நெருங்கிச் சூழ்ந்த பசுமையான கற்பகத்தருவின் தலைவனான இந்திரனே! குற்றங்களை நீக்கும் கல்விக் களஞ்சியமாகச் சிறந்தோனே! நடுவுநிலை தவறாத வள்ளல் தன்மையில் கற்பகத் தருவின் வழியில் தோன்றியவனே! இளமையோனே! சிறுவயதிலேயே அனைத்தும் கற்றுத் தெளிந்தோனே! குருகூரில் உள்ள மகிழம் பூமாலை அணிந்த நம்மாழ்வாரை நினைத்தலையன்றிப் பிற தெய்வத்தை நாடிச் சென்று வணங்காதவனே! பெருமையுடைய யானைக்கன்றே! கோபமுற்று சீறாது வந்த சிறந்த ஆண் சிங்கமே! புவியில் சிறந்த புகழைப் பெற்றுச் சிறப்பாக வளர்கின்ற செல்வத் துரையே! மலர்ந்த முகம் வாடாது கேட்பவர்க்கு வழங்குகின்ற நவநிதியே! மணி பதித்த பொன்னாலாகிய அகன்ற தேரினை உருட்டுக. மதனனே திருவேங்கட நாதமகிபனே சிறுதேர் உருட்டுக.

## குறிப்புரை

சிந்தாமணி-தெய்வீகமணி; அடுத்த-நெருங்கிய; கற்பகத் தலைவர்-இந்திரன்; துகள்-குற்றம்; களஞ்சியம்-குவித்துவைக்குமிடம்; கோடா-நடுநிலைதவறா; தேவதார்-கற்பகதரு; தேடா-நாடிச் செல்லா; மணம்-பெருமை; பிஞ்சிற் பழுத்தோனே-

வழக்குச் சொல், இஃது வழக்கில் இழிநிலையில் பயன்படுத்தப் படினும் இங்குப்புலவர் தலைவனின் பெருமையைப் புலப்படுத்தப் பயன் கொண்டுள்ளார். தலைவன் நம்மாழ்வாரை வணங்கு வதனை,

'ஆனாத
கல்விக் கடலைஅருட் காரி தரும்கனியைச்
செல்வக் கொழுந்தைத் திரளமுதைச்-சொல்வித்தை
மோனத் திருவுருவை முத்திக்கு வித்தைமலர்
தேனைத் திருஞான தேசிகனை-வானவரும்
வேதாவும் காண விரும்பும் பரிபுரப்பொற்
பாதார விந்தம் பணிந்திடுவோன்'

எனத் தலைவனுக்குத் தான் விட்ட தூதிலும் உணர்த்துவார்.

5. கொலைக்கடை நிரப்பிய புலால்மடுக் குஞ்சுடர்க்
குலிசவாட் படைதரித்துக்
குழுமுதிற லைடயலர் மடங்கம குடங்கள்சத
கோடிபுர ளச்சமரிடுந்
தலைக்கடை நெரித்துப் பொருஞ்சுத்த வீரரடு
தலைமணிக் குவடு சிதறத்
தடக்கைக் கடாக்களிறு பிளிறநெடு முத்தணிகள்
தத்தளிக் கக்குருதிநீர்
அலைக்கப் பெருக்கெழ இடிக்குநல் முழக்கென
அடிக்குட முழக்கநெடுமூ
தண்டகோ ளகைமுகடு கிடுகிடென வேபூதுங்
ஆடஎதி ராடிவெற்றிச்
சிலைக்கடை குழைத்தொரு பிறைக்கணை தொடுத்தவா
சிறுதே ருருட்டியருளே
செகரெட்சை புரிதிருவேங் கடநாத மகராச
சிறுதே ருருட்டியருளே. 68

## பொழிப்பு

மாற்றாரை அழிக்கக்கூடிய கடைப் பகுதியை உடைய புலால் மணம் கமழும் ஒளிவிடுகின்ற குலிச வாட்படை அணிந்து சூழந்துள்ள வலிமை மிகுந்த பகைவர் செயலறவும், அவர்களின்

மகுடங்கள் நூறுகோடித் துண்டுகளாக விழுந்து புரளவும், போர் புரியும் போர்க் களத்திலே காட்டமாக நின்று போரிடுகின்ற உண்மையான வீரர்களின் அழகிய தலைகள் வெட்டுண்டு சிதறவும், துப்பிக்கையுடைய மதநீர் ஒழுகும் களிறுகள் பிளிறவும் பகைவரின் முத்தணிகள் தத்தளிக்கும்படியாகக் குருதிநீர் ஆறாகப் பெருகி அலையெழவும், இடியின்பேரொலி போன்று அடிக்குடம் முழங்கவும், நீண்டு உயர்ந்துள்ள பழமையான அண்ட கோளங்களின் உச்சி நடுங்கவும், பூதங்கள் ஆடவும் போர் செய்து, வெற்றி பொருந்திய வில்லை வளைத்துப் பிறைக் கணையைத் தொடுத்தவனே சிறு தேருருட்டியருள். பூமியைக் காக்கின்ற திருவேங்கடநாதனே சிறுதேர் உருட்டியருள்.

## குறிப்புரை

குலிசம்-வச்சிராயுதம்; திறல்-வலிமை; மடங்கல்-செயலற்றுப் போதல்; பிறைக்கணை-பிறைவடிவம் கொண்ட ஒருவகை அம்பு

தலைவனின் போர்த்திறம் இங்குப் போற்றப்படுகிறது.

6. குழுமணிக் கரைபொரு திடங்கொண்ட தெண்டிரைக்
குண்டகட் டுவரிசுற்றுங்
குவலையமெல் லாந்தன திடத்திற் பரிக்கலாற்
கோடிசூ ரியப்பிரகாச
முழுமணித் திரளெலாம் பைத்தலையின் வைக்கையால்
மூன்றுலக மும்புகழ்தலால்
மூதறிவு குடிகொண்டி ருக்கையாற் பொறுமையால்
முதுசெல்வ மிக்காதலால்
பழுதிலாக் குறுநகைப் பொன்னாக மகளிர்பொன்
பணைமுலைக் கோடணைதலாற்
பலகலைப் பனுவலுங் கற்றுணர்த லாற்றினம்
பணியரசர் திறையிடுகையாற்
செழுமணிப் பலதலைச் சேடாவ தாரனீ
சிறுதே ருருட்டியருளே
செகரெட்சை புரிதிருவேங் கடநாத மகராச
சிறுதே ருருட்டியருளே. 69

## பொழிப்பு

மணிகள் கூட்டமாக நிறைந்துள்ள அழகிய கரையுடன் போரிட்டு இடம்கொண்ட தெளிந்த நெருக்கமான அலைகள் ஒலிக்கின்ற அகன்ற ஆழமான கடல் சூழ்ந்துள்ள உலகம் முழுவதையும் தன்னுடைய ஆணையின் கீழ்க்கொண்டு பாதுகாத்தலால், கோடி சூரியனின் ஒளியினையெல்லாம் ஒருங்கே பெற்ற, குற்றமற்ற ரத்தினங்களால் அமைந்த மகுடத்தினைத் தன் அழகிய தலையின் மீது சூடிக்கொள்ளலால், மூன்று உலகமும் பாராட்டு மொழிகளைக் கூறுதலால், பேரறிவின் இருப்பிடமாக இலங்குவதால், பொறுமை பெற்று விளங்குவதால், மிகுதியான செல்வம் பெற்றுள்ளதால் குற்றமில்லாத குறுநகையை அணியாகக் கொண்ட மகளிரின் அழகிய பருத்த தனங்களாகிய மலையை அணைவதால் பலவகையான கலைகளை இயம்பும் நூல்களைக் கற்றுத் தெளிந்துள்ளதால், தினமும், அடங்கி நடக்கும் அரசர்கள் கப்பம் செலுத்துதலால், சிறந்த மணியினை உடைய பல தலைகளைப் பெற்ற ஆதிசேடனின் அவதாரம் நீ சிறுதேர் உருட்டியருள். இப்புவியைக் காக்கின்ற திருவேங்கட நாத மகராசனே சிறுதேர் உருட்டியருள்.

## குறிப்புரை

பொருது-போரிட்டு; தெண்டிரை-தெளிந்த, நெருக்கமான; குண்டு-ஆழம்; அகட்டு-அகன்ற; உவரி-கடல்; குவலையம்-உலகம்;-பரிக்கல் > பரித்தல்,பாதுகாத்தல்; முழுமணி-குற்றமற்ற ரத்தினம்; பைத்தலை-அழகிய தலை; மூதறிவு-பேரறிவு; முது செல்வம்-மிகுந்த செல்வம்; பழுது-குற்றம்; பனுவல்-நூல், பணியரசர்-பணிகின்ற வேந்தர்கள்; சேடன்-ஆதிசேடன்.

இப்பாடல் திருவேங்கடநாதனுக்கும், ஆதிசேடனுக்கும் சிலேடையாக அமைந்து சிறப்புறுகிறது. உலகினைத் தாங்கிக் கொண்டிருத்தல்; படம்கொண்ட தலையில் மணி பெற்றிருத்தல்; மூன்றுலகமும் புகழ்தல்; மிகுந்த அறிவுடன் விளங்குதல்; பாரினைப் பொறுமையுடன் தாங்கிக் கொண்டிருத்தல்; மிகுந்த செல்வம் கொண்டிருத்தல் (பாம்புகளின் அரசனாக உள்ளபடியால் புலவர் ஆதிசேடனைச் செல்வம் நிறைந்தவனாகவும் கருதுகிறார் எனலாம்);பல கலைகளையும் கற்றுத் தெளிந்தவனாதல்;

பாம்பரசர்கள் திறை செலுத்தல் என ஆதிசேடனுக்குப் பொருந்துகிறது.

இலக்குவனை ஆதிசேடனின் அவதாரமாகச் சொல்வதுண்டு' இவண் தலைவனை இலக்குவனுடன் ஒப்பிட்டுக் காண்கிறார் எனவும் கொள்ளலாம்.

7. பார்வாழி வழுதிவள நாடினிது வாழியலை
   படர்பொருனை வாழிமிக்க
   பழையசெல் வக்குருகை நகர்வாழி முத்தமிழ்ப்
   பாவாழி ஆதிநாதப்
   பேர்வாழி செண்பகச் சடகோபர் வாழிமறை
   பேசுமந் தணர்கள் வாழி
   பெருமைநிறை மீனாட்சி நாதமால் வாழிமணி
   பெறுசாமி நாதன்வாழி
   கார்வாழி எங்கள்சுப் பிரமணியன் மணிவாசல்
   கல்லியாண வாசலாகிக்
   கனசிவிகை பலவரிசை எய்தியெக் காலமும்
   கண்ணே றிலாது வாழி
   சீர்வாழி என்றுநா வலர்வாழி பாடவண்
   சிறுதே ருருட்டியருளே
   திருமருவு துரைதிருவேங் கடநாத பூபனே
   சிறுதே ருருட்டி யருளே.

## பொழிப்பு

இப்புவி வாழ்க, வழுதிவளநாடு இனிது வாழ்க, அலை வீசிப் படர்ந்துள்ள பொருநை நதி வாழ்க, மிகுந்த பழைமையுடைய வளம் நிறை நகரான குருகை நகர் வாழ்க, இயல், இசை, நாடகப் பா வாழ்க, ஆதிநாதப் பேருடைய குருகூர் திருமால் வாழ்க, செண்பகமாலையணிந்த சடகோபர் வாழ்க, நான்கு வேதங்களை மொழியும் மறையோர் வாழ்க, பெருமை நிறைந்த மீனாட்சி நாத மால் வாழ்க, சிறப்பு பெறுகின்ற சாமி நாதன்வாழ்க, கார்வாழ்க; எங்கள் சுப்பிரமணியனின் மணிவாசல் திருமணவாசலாகி, மிகுந்த சிவிகையுடன் பல சிறப்புகளையும் பெற்று எக்காலமும் கண்ணேறு படாது வாழ்க, உன் புகழ் வாழ்க என்று புலவர்கள் வாழ்த்துப்பாட அழகிய சிறுதேருருட்டியருள். திருமருவு துரை திருவேங்கட நாதபூபனே சிறுதேர் உருட்டியருள்.

## குறிப்புரை

பார்-உலகம்;பழைய செல்வக் குருகை-தலைவன் நாட்டினை மிகுந்த பழமை உடையதாகப் போற்றுதல் மரபு; சண்பகம்-இங்கு மகிழம்பூவைக் குறிக்கும்; கார்-மழை; கல்லியாணவாசல்> கலியாண வாசல்; சிவிகை-பல்லக்கு; வரிசை-சிறப்பு; சீர்-புகழ்.

இவ்விறுதிப் பாடலை வாழ்த்துப்பாடலாக அமைத்திருப்பது இப்பிள்ளைத் தமிழின் குறிப்பிடத்தக்க சிறப்பாகும். ஒட்டக் கூத்தர் தம் பிள்ளைத்தமிழின் செங்கீரைப் பருவப் பாடல்களின் இறுதியில் (12-29) 'சேரா பெருங்கவிகை வீரோதையா வாழி செங்கீரை யாடியருளே' எனப் பாடியுள்ளமை இந்நூலாருக்கு இவ்வெண்ணத்தைத் தந்திருக்கலாம்.

திருக்குருகூர் திருவேங்கடநாதன்
பிள்ளைத்தமிழ்
மூலமும் உரையும் முற்றும்

## செய்யுள் முதற் குறிப்பகராதி

எண்—செய்யுள் எண்

# பிள்ளைத்தமிழ்ச் சொல்லகராதி

# அருஞ் சொல்லகராதி

எண்—பக்க எண்

# துணை நூற்பட்டியல்


1. அபிதான சிந்தாமணி
2. இலக்கணத்தொகை - யாப்பு, பாட்டியல், டாக்டர். ச. வே. சுப்பிரமணியன், தமிழ்ப்பதிப்பகம்,சென்னை; மு.ப. 1978
3. கலைக்களஞ்சியம், தொகுதி 1,9; தமிழ் வளர்ச்சிக் கழகம்' சென்னை, 1954.
4. சதுரகராதி, டாக்டர். கு. இன்னாசி (பதிப்பு); வீரமாமுனிவர் ஆய்வுக்கழகம், பாளையங்கோட்டை, மு.ப.சன. 1979.
5. சிற்றிலக்கியச் செல்வங்கள், ந.வீ. செயராமன், மணிவாசகர் நூலகம், சிதம்பரம், மு.ப. அக். 1967
6. சிற்றிலக்கியச் சொற்பொழிவுகள் - பிள்ளைத்தமிழ் (இரண்டாவது மாநாடு) கழக வெளியீடு, மு.ப ஏப் 1959
7. சிறப்புப்பெயர் அகராதி, சு-அ. இராமசாமிப்புலவர் (தொகு) கழக வெளியீடு, மு. ப ஏப் 1963
8. செந்தமிழ் தொகுதி 46 (திருக்குருகூர் திருப்பணி மாலை)
9. திருமாலடியார்கள் (ஆழ்வார்களும் அருளிச்செயல்களும்) காழியூர் சேஷாத்ரி மணவாளன் ,சுசந்தாவெளியீடு,சென்னை மு.ப. சூலை 1976
10. திருவேங்கடநாதன் வண்டுவிடுதூது, டாக்டர். உ.வே. சாமிநாதையர் நூல் நிலைய கையெழுத்துப் பிரதி.
11. தொல்காப்பியம் — பொருளதிகாரம் — நச்சினார்க்கினியம், கழகவெளியீடு, மு.ப. பிப் 1968
12. பிங்கல நிகண்டு, கழகவெளியீடு.
13. பிள்ளைத்தமிழ்க் கொத்து, தி. சந்திர சேகரன் (பதிப்பு) Madras Government Oriental Manuscripts Services 1956, No.50
14. புகழ் மணக்கும் வைணவத் தலங்கள், சி. மூத்துப்பிள்ளை, பைலட் பப்ளிகேஷன்ஸ், சென்னை-1, மு. ப. 1976
15. மேற்கோள் விளக்கக்கதை அகரவரிசை (பகுதி,1,2), கருப்பக்கிளர். சு. அ. இராமசாமிப்புலவர்,கழகவெளியீடு,மு.ப.ஏப் 1963.

# நிறுவன வெளியீடுகள்

1. தமிழில் விடுகதைகள்
   —டாக்டர் ச. வே. சுப்பிரமணியன் ரூ. 10-00
2. ஆராய்ச்சி நெறிமுறைகள்
   —டாக்டர் ச. வே. சுப்பிரமணியன் ரூ. 5-00
3. அடியார்க்கு நல்லார் உரைத்திறன்
   —டாக்டர் ச. வே. சுப்பிரமணியன் ரூ. 12-00
4. உலகில் தமிழும் தமிழரும்
   —டாக்டர் பொன் கோதண்டராமன் ரூ. 4-00
5. A Course in Modern Standard Tamil
   —Dr. P. Kothandaraman Rs. 7-50
6 Tamil Research Through Journals
   —A. A. Manavalan Rs. 7-50
7. Dr. Mu. Va
   —Dr S. V. Subramanian
   —A. A. Manavalan Rs. 20-00
8. Dissertations on Tamilology
   —Dr Annie Thomas Rs. 10-00
9. தமிழ் இலக்கியக் கொள்கை II
   —டாக்டர் ச. வே. சுப்பிரமணியன்
   —திரு. க. த. திருநாவுக்கரசு ரூ. 10-00
10. தமிழ் இலக்கியக் கொள்கை III
   —டாக்டர் ச. வே. சுப்பிரமணியன்
   திரு. அ. அ. மணவாளன் ரூ. 8-00
11. தமிழ் இலக்கியக் கொள்கை IV
   —டாக்டர் ச. வே. சுப்பிரமணியன்
   —டாக்டர் ஏ. என். பெருமாள் ரூ. 10-00
12. தமிழ் இலக்கியக் கொள்கை V
   —டாக்டர் ச. வே. சுப்பிரமணியன்
   —டாக்டர் அன்னி தாமசு ரூ. 12-00
13. சின்ன மகிபன் குளுவ நாடகம்
   —டாக்டர் ஏ. என். பெருமாள் ரூ. 5-00
14. உலகத் தமிழ் எழுத்தாளர் யார்-எவர்?
   —டாக்டர் ச. வே. சுப்பிரமணியன்
   —டாக்டர் ந. கடிகாசலம் ரூ. 6-00
15. தமிழ் நாட்டுப்புற இயல் ஆய்வு
   —டாக்டர் ச. வே. சுப்பிரமணியன் ரூ. 15-00
16. தொல்காப்பியம் சிறப்புப் பாயிரம்
   —ஆ. சிவலிங்கனார் ரூ. 10-00
17. திருக்குருகூர் திருவேங்கட நாதன் பிள்ளைத்தமிழ்
   — ச. சிவகாமி ரூ. 7-50
18. பணவிடு தூது
   —இரா. நிர்மலாதேவி ரூ. 6-00

தொடர்பு கொள்க:

இயக்குநர், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
அடையாறு, சென்னை-600 020